கழக வெளியீடு-௪௦௮

# மணிமேகலை

(ஒரு நாடகம்)

கரந்தைக் கவியரசு

ரா. வேங்கடாசலம் பிள்ளையவர்கள்

எழுதியது.

திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி & சென்னை

# முகவுரை

மணிமேகலை என்பது, பண்டைத் தமிழ் இலக்கியங்களைச் சார்ந்த *ஐம்பெருங் காப்பியங்களுள் நடுமணியாய ஒன்றாகும். இந் நூல், சோழ வளநாட்டினைக், காவிரிப்பூம் பட்டினத்தைத் தலைநகராகக்கொண்டு ஆண்ட மன்னர்களுள் கிள்ளிவளவன் காலத்து, அந்நகரிலிருந்த கோவலன் மாதவி என்பார்க்குப் பிறந்த மணிமேகலை என்னும் மாதின் வரலாற்றினைக் கூறுவதாகும்.

இம் மாது, இளமையிலே தந்தையை இழந்து வருந்தி, உலக வாழ்வினுட் புகாது, சமய வாழ்க்கை முறையினைச் சார்ந்து, அறிவுரைகள் கேட்டுத் தெளிந்து, அறத் தொண்டுகள் செய்திருந்து, உய்தியுற்ற பெருஞ்சிறப்பினள்.

இவ் வரலாற்று நூல், சங்ககாலத்து நல்லிசைப் புலவர் பெருமக்களுள் ஒருவராகிய சீத்தலைச் சாத்தனார் என்பாரால் இயற்றப்பெற்றது; பல உரையாசிரியர்களாலும், கோவை, உலா முதலாய நூலாசிரியர் சிலராலும் பாராட்டப்பெறும் சிறப்பினது. இந் நூல், திருக்குறளின் நறுமணத்தினைத் தன்னகத்தே ஆங்காங்குக் காட்டிச் சிறப்பிக்கும் பெருமையினது; சொல்வளம் பொருள்வளங்களால் முதன்மையுற்று மிளிரும் காட்சியினது.

இங்ஙனம் உயர்ந்ததோர் வரலாற்றினைக்கொண்டு, சிறந்தோங்குமோர் புலவர் இயற்றியருளியதாய இந்நூல், நம் செந்தமிழன்னையின் மணிமேகலைப் பேரணியாகித்

---

* சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி.

தமிழ் மக்களின் தவப்பேற்றால், இன்றும் நின்று நில வும் காப்பியங்கள் **மூன்றனுள் முடிமணியாய ஒன்றாய் மிளிர்கின்றது.

இவ்வரலாறு, மலை, கடல், தீவு, காடு, நாடு, நகர், ஆறு, பொய்கை, சோலை முதலாய பல இடச் சிறப்புக் களும், தேவர், முனிவர், மக்கள் வரலாற்றுச் சிறப்புக் களும், கடற்செலவு, வான்வழிச் செலவு முதலாய அரிய செயற்கைச் சிறப்புக்களும், இத்தகைய வேறு பல சிறப் புக்களும் இணையப்பெற்று, இன்ப துன்ப நிகழ்ச்சிகள் பலவற்றை ஆங்காங்கு விளைத்துச் செல்லுதலின், இணையற்றுச் சிறக்கும் நாடக மாண்பினை உடையதா கின்றது. இம்மாண்பினைக் கொண்ட இந்நூல், சொல் வளம் பொருள்வளம் மிக்க செய்யுள் நடையில், கற்று வல்லாரே தம் அகக்கண்கொண்டு கண்டு மகிழும் நிலையி லிருத்தலின், இந்நாடகச் செவ்வியினை, கட்புலனாலும் செவிப்புலனாலும் எளிதாக உணர வல்ல காட்சிகளும் உரைநடையும் கொண்ட நாடக உரைநூல் வழியாக, யாவர்க்கும் அளிக்க விரும்பிய கழகத்தார், அத் தொண் டினை எளியேன் வாயிலாக இயன்றவாறு முற்றுவித்துத், தமிழ் உலகிற்கு அளிக்கின்றனர்.

இந் நாடக நூல், முதனூலின் வரலாற்றினைப் பெரி தும் விடாது பின்பற்றி யுரைக்கும் கடமைகொண்டு எழுதப்பெற்றதாகலின், அந்நூலிற் காணும் வரலாற் றுடன், அதனோடு இயைந்த காலச்சிறப்பு, இடச்சிறப்பு முதலாயவற்றையும், நாடக நெறிக்கு ஏற்ப, உரையாடல் களில் வைத்து விளக்கிச் செல்லும்; முதனூலில் ஒருவர்

** சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை.

வாய்க்கூற்றாக அமைந்திருக்கும் உள் வரலாறுகள் சில நாடகக் காட்சிகளில் அங்ஙனமே ஒருவர் கூற்றாக விரித்துச் செல்லின், அவை மிக மிக விரிந்து காணப்பெறுமாகலின், அவைகளை, ஏற்றவகையில் தொடர்புரைத்து, தனிக் காட்சிகளாக அமைத்துச் செல்லும்; இங்ஙனமே ஒருவரது மிக நீண்டதோர் கூற்றினையும், விரிவஞ்சி, ஆங்காங்கு, எதிர் வினாவிடைகளாற் பிரித்து எளிதாக்கிச் செல்லும். முதனூலிற் காணும் கலைகளின் நிலைக்களமாகிய சமயவாத உரைகள், அருமை நோக்கி, இங்கு விரிக்காது விடப்பெற்றுள.

இந்நூல், மணிமேகலை நூலின் சொல்வளம், பொருள் வளம், வரலாற்றின் மாண்புகளை, உயர்நிலை மாணவ உலகமும், ஏனைத் தமிழறிஞர்களும் எளிதில் உணர்ந்து மகிழற்கு, ஒரு படி நிலையாக அமைந்துளதாகலின், இதனைத் தமிழ் நாட்டுப் பல்கலைக் கழகங்களும், கல்லூரிகளும், தமிழுலகமும் போற்றிப் புரந்திடுவனவாக.

இதன் முதனூலைப் பலவகையாக ஆய்ந்து அரும் பதவுரையுடன் அச்சியற்றிய தமிழகப் பெரியார் டாக்டர், மகாமகோபாத்தியாயர், உ. வே. சாமிநாத ஐயரவர்கட்கும், இந்நூல் முழுவதிற்கும் விளக்க வுரைகள் எழுதியருளிய புலவர் நாவலர், பண்டிதர், ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கட்கும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் திரு. ஔவை. சு. துரைசாமி பிள்ளையவர்கட்கும், இவ்விளக்க வுரையினைத் தமிழுலகிற்கு அளிக்கும் கழகத்தினர்க்கும், தமிழுலகம் என்றும் நன்றி பாராட்டும் கடமையினது.

ர. வேங்கடாசலம் பிள்ளை.

# பொருளடக்கம்

# மணிமேகலை

## நாடகம்

### வரலாற்றுச் சுருக்கம்

#### முற்றொடர்ச்சி

பண்டைக் காலத்தே செந்தமிழ்ச் சோழ நாட்டினைக், காவிரிப்பூம் பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த மன்னர்களுள், கிள்ளிவளவன் என்பான் ஒருவன். இவன், மாவண்கிள்ளி, வடிவேற்கிள்ளி, வென்வேற்கிள்ளி, நெடுமுடிக்கிள்ளி என்றெல்லாம் கூறப்பெறுவான். இவன் தேவி, சீர்த்தி என்னும் அரச மாதேவி. மகன் உதயகுமரனும் இளவரசன்.

இவன் ஆட்சியில், அத்தலைநகரில், வணிகர் குடியில் பெருந்திருவாளர்களான கோவலனும், கண்ணகியும் இனிது இல்லறம் நடாத்தி வருங்கால், கோவலன் அந்நகரத்துக் கணிகையர் மரபில் சிறப்புற்ற மாதவி யென்னும் கன்னியைக் காதலித்துக் கண்ணகியைப் பிரிந்து, மாதவியொடு வதிந்து வந்தனன். அவர்கட்கு மணிமேகலை என்னும் ஒரு பெண்மணி பிறந்தொளிர்ந்தது. அம்மாமணியின் ஒளியாம் வரலாறே, இந்த நாடக நூலாகும். மாதவியின் தாய் சித்திராபதி. தோழியர் வயந்தமாலை, சுதமதி எனும் இவர்கள். கோவலன் தந்தை மாசாத்துவான். கண்ணகியின் தந்தை மாநாய்கன்.

காலப்போக்கில், கோவலன் தன் பொருள்வளங்களை இழந்துவிட்டான். கண்ணகியின் அணிகளுள் எஞ்சிய காலணியாகிய சிலம்பினைக் கொண்டு, கண்ணகியுடன்

பாண்டிய நாட்டு மதுரைக்குச் சென்று, அதனை விற்று முதற்பொருளாகக் கொண்டு, பொருளீட்ட எண்ணியவன், அங்ஙனம் சென்று, அந்நகரின் தெருக்களில் அதனை விற்க முயன்றகாலை, ஊழ்வினையால், அது அரண்மனைச் சிலம்பென்று தவறாக உணர்த்தப்பெற்ற பாண்டி மன்னன் நெடுஞ்செழியன் ஆணையாற் கொலையுண்டான். கண்ணகியால் உண்மையுணர்ந்த அம்மன்னனும், அவன் தேவியும், உயிரை நீத்துப், பழியின் நீங்கி, விண்ணுலகு எய்தினர். கற்பின் தெய்வமாய கண்ணகியின் உள்ளக் கொதிப்பால், தீயோர்களும் அவர்தம் இருக்கைகளும் தீக்கிரையாகி ஒழிய, கண்ணகி சேர நாட்டிற்குச் சென்று, அங்கு உடல் நீத்தெழுந்து, தன் கணவனொடு ஒன்றி, விண்ணக வாழ்வினை எய்தினள். இதனை யுணர்ந்த சேரமன்னன் செங்குட்டுவன், தன் தலைநகர் வஞ்சியில், கண்ணகி தேவிக்குக் கோயிலமைத்து வழிபாடு செய்தனன். சோழநாடு, இலங்கை முதலாய இடங்களிலும், கண்ணகி தேவிக்குக் கோட்டங்கள் அமைக்கப்பெற்றன.

கோவலன் கண்ணகியர் துயர்நிலை யுணர்ந்த மாதவியும் மணிமேகலையும், உலக வாழ்வினை வெறுத்துப், புத்த சங்கத்தினைச் சார்ந்து, அங்கிருந்த அறவண அடிகளை வழிபட்டு, நன்னெறி யடைதற்குரிய அறவுரைகளைக் கேட்டு, ஒழுகுவாராயினர். மாசாத்துவான் புத்தமதத் துறவியாயினன். மாநாய்கனும் அங்ஙனமே துறவுற்றான்.

## வரலாற்றுத் தொடக்கம்

காவிரிப்பூம் பட்டினத்தே, கிள்ளி வளவனுக்குப் பன்னெடுங்காலம் முன்பு ஆண்டு வந்த தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் என்னும் மன்னன் காலமுதலாக, அந்நகரில், ஆண்டுதோறும் வைகாசித் திங்களில்

இந்திரவிழா எனும் திருவிழா ஒன்று நிகழ்ந்து வந்தது. ஒவ்வோர் ஆண்டிலும் குறித்த காலத்தே, நகர மாந்தரும் வெளி நாட்டினர்களும் கூடி, விழா நிகழ்ச்சியைத் தொடங்கி வைப்பது உண்டு. மாதவி, மணிமேகலையரின் துயர்நிலை மேவிய அந்த ஆண்டிலும், அங்ஙனமே மக்கள் பொதுமன்றத்தே கூடி, அவ்விழாவின் தொடக்கம், விழாச் சிறப்பு, விழா நிகழாதொழியின் வருந் தீமைகள், அது நிகழும் நாட்கள் முதலாயவற்றை ஆய்ந்துணர்ந்து, விழாத் தொடக்கம் செய்து, அந்நிகழ்ச்சியை நகரத்தார்க்குப் பறை யறைவித் துணர்த்தினர். (காதை. 1)

அவ்விழாவின் அங்கங்களுள், கணிகையர் ஆடல் பாடல் நிகழ்ச்சி ஒன்றாகும். மாதவி, மணிமேகலையின் ஆடல் பாடற்சிறப்புக்கள், நாடெல்லாம் உணர்ந்து பாராட்டப் பெறுவன. மாதவி, மணிமேகலையர், தாம் துயரில் ஆழ்ந்திருந்ததொடு, தவநெறியிற் புக்கிருத்தலின், அவ் விழாவிற் கலந்து கொண்டிலர். இது பற்றி, விழாவிற்கு வந்து கூடிய மக்கள், இவர்களது பலவகையான சிறப்புக் களைப் பாராட்டிக் கூறி, இவர்கள் வாராமைபற்றி வருந்தி அலர் உரைப்பாராயினர். மாதவியின் தாய் சித்திராபதி என்பாள், இவர்கள் செல்லும் நன்னெறியில் விருப்பமில்லாதவள், அதனின்றும் விலக்கித் தன் குல நெறியிற்புகுத்த எண்ணியிருப்பவள், மன்றில் எழுந்த அலரினை இவர்கட்குக் கூறி, இவர்கள் உள்ளத்தை மாற் றிக்கொணர எண்ணி வயந்தமாலையை மலர் மண்டபத் துள்ள இவர்பால் விடுத்தனள். வயந்தமாலை உரையினைக் கேட்ட மாதவி, கோவலன் கண்ணகியர் பெருமைகளையும், தமது துயரங்களையும், தாம் செல்லும் நன்னெறியின் சிறப் பினையும், எடுத்துக் கூறி விடுக்க, வயந்தமாலை, துயர்ந்து மீண்டனள். (காதை 2)

இப்பால், ஒரு நாள் மலர் மண்டபத்தே, மாலை தொடுத்திருந்த மணிமேகலை, தன் தந்தை தாயர்க்கு நேர்ந்த கடுந்துன்பங்களை எண்ணிக் கண்ணீர் சொரிந்து கொண்டிருந்தனள். இது கண்ட மாதவி, மிக இரங்கி, அவள் துயரினை ஒருவாறு மாற்ற நினைந்து, மணிமேகலையை, மலர் வனம் போய்வரச் செய்தலே தக்கதெனத் துணிந்தனள். மாதவி, தன் மகளை நோக்கி, அந்தோ! நீ இங்ஙனம் அழுதல், உன் கண்களின் செவ்வியை அழிக்கின்றது; என் செய்வாம். நின் கண்ணீரால் நனையப் பெற்றமையின் இம்மாலையும் தூய்மை இழந்துவிட்டது. ஆகவே நல்லதோர் சோலைக்குச் சென்று, புதிய மலர்கள் கொணர்வாய் என்று கூறினள். அங்கிருந்த சுதமதி, மணிமேகலையின் பேரழகினையும், அவள் தனித்துச் செல்வதால் எய்தும் இடையூற்றினையும், அங்ஙனம் தான் முன்னொரு காலத்து மலர் கொய்யத் தனித்துச் சென்றுழி எய்திய தீங்கினையும் கூறித், தானும் உடன் போய் வருவதாகக் கூறினள். மேலும் அந்நகரிலுள்ள சோலைகளின் தன்மைகளையெல்லாம் கூறி, அவற்றுள் உவவனமே மிகச் சிறந்ததென்று, அங்குள்ள பொருள்வளங்களும், பளிக்கறையின் தெய்வப் பெருஞ்சிறப்பும் கூறினள். கேட்ட மாதவி, மணிமேகலையுடன் அந்த உவவனத்திற்குப் போய்வரச் சுதமதியை வேண்டி, இருவரையும் அனுப்பிவைத்தாள். மணிமேகலையும், சுதமதியும் நகரிற் செல்லுங்கால், களிமகன் பித்தன் முதலானோர் உருவங்களைக் கண்டு, அவர்கள் கூற்றுக்களைக் கேட்டு வியந்தும், நகர மாந்தர்கள் சிறுர்களை அணி செய்து தெருக்களிற் கொண்டு செல்லுதலைக் கண்டு மகிழ்ந்தும், உவவனம் சென்றெய்தினர். (காதை 3)

அது காலை அங்ககரின் பட்டத்து யானை மதம் கொண்டு பாகர்களை அகற்றித் தெருக்களில் அச்சுறுத்தித் திரிதலை ஏவலரால் உணர்ந்த அரசகுமரன் உதயகுமரன், நகரிற் சென்று அதனை அடக்கி வருபவன், கணிகையர் வீதியில் ஒரு கணிகையுடன் முகவாட்டம் எய்தியிருந்த எட்டிகுமரன் ஒருவனைக் கண்டு, அவன் வாடியிருப்பது என் என, அவன் மிக்க இரக்கத்துடன் மணிமேகலை அத் தெரு வழியே உவவனம் சென்றதைக் கண்டு, கோவலன் கொடுந்துயர் நினைந்து, உள்ளம் வருந்தியிருப்பது கூற, மணிமேகலைபால், நீங்காக் காதல் கொண்டுள்ள உதய குமரன், மிக்க ஆவலுடன் உவவனத்திற்குச் செல்வானாயி னன். சுதமதியும், மணிமேகலையும் அவ்வனத்தின் பல் வகைச் சிறப்புக்களையும், அணியுறுத்திக் கூறி அளவளா விக்கொண்டிருக்குங்கால், உதயகுமரன் அங்கு வந்துற, மணிமேகலை, உதயகுமரன் தன்பாற் காதல் கொண்டிருத் தலைத் தெரிவிக்க, சுதமதி, மணிமேகலையை அங்குள்ள தோர் பளிக்கறையுட் புகுந்து தாளிட்டுக்கொள்ளச் செய்து, தான் வெளியே நின்றனள். வந்த உதயகுமரன் மணிமேகலையின்பாலுள்ள, தனது காதலைக் குறிப்பாகக் கூறி, அவள் உள்ளக்குறிப்பும், அவள் அங்கு வந்துற்ற காரண மும் வினவ, சுதமதி, மணிமேகலையின் தவக்கருத்தும், உலக வாழ்வில் விருப்பின்மையும் கூறி, அவன் காதற் கருத்தினை விடுத்திடச் சில அறிவுரைகளும் கூறினள். இந்நிலையில் அரசகுமாரன், பளிக்கறையுள் மணிமேகலை யிருத்தலைக் கண்டு கொண்டான். (காதை 4)

உதயகுமரன் மணிமேகலையின் பேரழகினைப் பலபடி யாகப் பாராட்டிச், சுதமதியை நோக்கி, இம்மணிமேகலை யின் நிலை யாதோ என மீண்டும் வினவ, சுதமதி, மணி

யானே'' எனத் தன் வரலாறு கூறி, ''மணிமேகலை இன்று ஏழாம் நாள் இங்கு வந்துறுவாள்; வேற்று வடிவம் கொண்டிருப்பள் ; ஆயினும் நினக்கு உண்மை உருக்காட்டுவள்'' என்று கூறி, மேலும், ''நீ மாதவியைத் தேற்றியிருப்பாயாக; மணிமேகலைக்குப் பெயரிடுங்கால், கோவலன், குல தெய்வமாகிய என் பெயரினை இட்டதை அறிவி; அவள் என்னை நன்குணர்ந்து ஆறுதல் உறுவள்'' என்றும் கூறி மறைந்தது. இப்பால், சுதமதி எழுந்து, அந்த யாமத்தில், நகரில் நிகழும் நிகழ்ச்சிகளின் ஒலி வேறுபாடுகளைக் கேட்டு மயங்கி, மணிமேகலா தெய்வம் கூறியவாறே சக்கரவாளக் கோட்டம் புகுந்து, அங்கு, ஒரு கந்தில் அமர்ந்துள தெய்வக் காட்சியால், தன் பழம் பிறப்பின் நிலைகளையெல்லாம் உணர்ந்து, பின் மணிமேகலை நகர்க்கு வந்துறும் நிகழ்ச்சியும் அறிந்து, தன் நகர் வந்து சேர்வாளாயினள். சேர்ந்து மாதவிமுன் சென்று, தாங்கள் உவவனம் சென்றகாலை முதல் விடியல்காறும் நிகழ்ந்தனவெல்லாம் எடுத்துரைத்தனள். (காதை 7)

மணிபல்லவத்தீவில் விடியற்காலையில் எழுந்த மணிமேகலை, ஆங்குள்ள கடற்கரை, பொய்கைக்கரை, மரப்பந்தர் முதலாயவற்றைக் கண்டு வியந்து, தனது சுற்றமும் நகரமும் காணாளாய், அவ்விடம் இன்னதெனஅறியாளுமாகி, சுதமதியைக் கூவி இரங்கியும், பறவை முதலானவற்றைக் கண்டு ஆற்றாமையால் உசாவியும், மாதவி முதலியோரையும் கோவலன் கண்ணகியாரையும் நினைந்து புலம்பியும், வருந்தி நிற்பாளாயினள். அங்கு அவள் முன், மிக்க ஒளியினதும், தெய்வத் தன்மை வாய்ந்ததும், புத்த தேவன் ஆசனமெனக் காணப்பட்டதுமாகிய ஒரு பீடிகை தோன்றிற்று. மணிமேகலை அங்குச் சென்று அதனை

வணங்கி எழுந்த காலை, அவளது முற்பிறப்பின் உணர்ச்சி வந்துற்றது. அந்த முற்பிறப்பில் பிரமதருமன் என்பான், காந்தார மன்னனுக்கு வருங்கால நிகழ்ச்சி கூறி, அவனுக்கு நன்மை செய்வித்ததும், தானும் தன் கணவன் இராகுலனும் அப் பிரமதரும முனிவனால் வருங்கால நிகழ்ச்சிகள் உணர்ந்துகொண்டதும், அதன்படி தான் இப்புகாரிற் பிறந்து இத்தகைய நிகழ்ச்சிகளை எய்தியதும் நன்கு உணர்ந்து கொண்டாள். தன் கணவன், இப்பிறப்பில் எங்ஙிலை உற்றனன் என்பதை மட்டும் உணர்ந்து கொள்ளாளாகி, அதனை உணர்த்த விருக்கும் ஒரு தெய்வத்தை எதிர்பார்த்து இரங்கி நின்றனள். (காதை 8-9)

பின்னர், மணிமேகலா தெய்வம் அவள் முன் தோன்றி, அங்குள்ள பீடிகையின் முன் நின்று அதனைத் துதித்துப், பின் மணிமேகலையைப் பார்த்து, அவள் தன் கணவன் வரலாற்றைக் கூறியது. அது, முற்பிறப்பில் அவர்களிடம் வந்த சாது சக்கர முனிவனை, அவள் கணவன் இராகுலன் என்பான் வெகுண்டதும், அவள் அவனைத் திருத்தி, அம் முனிவனை வணங்கச் செய்து அமுது உண்பித்ததும், அந்த இராகுலனே, இப்பிறப்பில் உதயகுமரன் ஆயினன் என்பதும், அவள் தொடங்கிய நல்லறங்கள் வளர்ந்து சிறக்கும் என்பதும், முற்பிறப்பில் அவள் தமக்கையராகிய தாரையும் வீரையுமே, மாதவியும் சுதமதியும் ஆவரென்பதும், கூறியருளியது. மேலும், அது, மணிமேகலை பின்னர்ச் சமய வாதிகள் கூறும் சமய உண்மைகளை யெல்லாம் அறிய விருப்பதும் அதுபற்றி வேண்டுங்கால் வேண்டு வடிவங் கொள்ளவும், விசும்பின் வழியாகச் செல்லவும், பசிப்பிணியை நீக்கிக்கொள்ளவும் வல்ல மூன்று மந்திரங்களையும் கூறியருளி மறைந்தது. (காதை 10)

பின்னர் மணிமேகலை அத்தீவின் அழகிய காட்சி களைக் கண்டு நிற்க, தீவதிலகை என்னும் ஒரு தெய்வம் தோன்றி, அவளை 'நீ யார்' என்று வினவ, மணிமேகலை தனது முற்பிறப்பு வரலாறுகளும், மணிமேகலா தெய்வத் தின் இன்னருளும் கூறினள். தீவதிலகை, தான் இரத்தின தீவத்துள்ள சமந்த மலையின் உச்சியில் அமைந்த புத்த பெருமானின் திருவடிக் காட்சியினைக் கண்டு வந்ததும், அங்குள்ள தெய்வப் பீடிகையைக் கண்டு வணங்கியதும், இந்திரன் அருளால் தான் அப்பீடிகையைக் காவல் பூண் டிருப்பதும் ஆய தன் வரலாறுகளைக் கூறிற்று. பின்னர் மணிமேகலையை நோக்கி, "இப்பீடிகையைக் காணும் பெரும் பேறுற்ற மாதே! அதோ தோன்றும் கோமுகி என்னும் பொய்கையில், ஆண்டிற் கொரு நாள், அமுத சுரபி என்னும் பெருமையுடைய ஒரு பாத்திரம் தோன் றும்; அது ஆபுத்திரனது பாத்திரம்; அது தோன்றும் நாள் இன்றேயாகும்; அது தோன்றுங்கால், தக்கார் எவரேனும் அருகிருப்பின், அவர் கையில் வந்துறும்; அத்தகைய சிறப்பு நின்பா லுளது; நாம் அங்குச் செல் வோ"மென அழைத்தேகியது அப்பாத்திரம் அங்ஙனமே எழுந்து, மணிமேகலையின் கையில் வந்தமர்ந்தது. உடனே மணிமேகலை, புத்த தேவனது திருவடிகளை வணங்கித் துதித்தனள். தீவதிலகை, மணிமேகலையை நோக்கிப், பசியின் கொடுமையினையும், வறிஞர் பசிப் பிணியை நீக்கு தலே, சிறந்த அறம் என்பதனையும் கூறி "அதனைச் செய்து சிறப்புறுவாயாக" என்று கூறியருளியது. மணிமேகலை தான் இப்பிறப்பில் தெய்வக் காட்சிகளால் அடைந்த பெருமைகளைப் பாராட்டி, அது கூறிய சிறந்த அறத் தொண்டினைத் தான் செய்து வருவதாகக் கூறினள். பின் னும், அத்தெய்வம்அப்பாத்திரம் சிறந்த அறஞ் செய்

வார்க்குமிக்க பயனளிப்பதும், போலி அறஞ் செய் வார்க்குப் பயன் படாமையும் கூறி அப்பாத்திரம் மணி மேகலையின் உயர் கருத்துக்கு ஒத்ததே என்று வாழ்த்தி அனுப்பிற்று. மணிமேகலை அத்தேவியினையும் பீடிகையை யும் வணங்கிப், பாத்திரத்துடன் தன் புகார் நகருக்கு வந் துற்றனள். தன்னைக் காணாது வருந்தி நிற்கும் மாதவி முன் மணிமேகலை தோன்றி வணங்கி, சுதமதியைப் பிரிந்து தான் சென்றபின், தனக்கு எய்திய பீடிகைக் காட்சியும், பழம் பிறப்புணர்ச்சியும், அவர்கட்கு விளங்கக் கூறி, தன் கையிலுள்ள அமுத சுரபியின் வரலாறு, பெருமைக ளையும் எடுத்துரைத்து, அவர்களுடன் புறப்பட்டு, அற வண அடிகள் திருவடிகளை வணங்க, அவர் தம் தவச்சாலை சென்றனள். (காதை 11)

அங்கு, மணிமேகலை, அறவண அடிகளை வணங்கித் தானும் சுதமதியும் உவவனத்திற்குச் சென்றது முதல் மீண்டு வந்தது வரை, நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும், தனது மறுமையின் பிறப்பு உணர்ச்சிகளையும் தெரிவித்து' ஆபுத்திரன் வரலாற்றைத் தங்கட்கு அறிவிக்க வேண்டு மென்று வேண்டிக்கொண்டனள். அடிகள் மணி மேகலையை வாழ்த்திக், கச்சயநகர மன்னன் துச்சயனும், அவன் மனைவி வீரை, தாரை என்பார்களும், முற் பிறப்பில் அடைந்த முடிவுகளைக் கூறிப், பிறப்பு இறப்புக்களின் பெற்றியும், நற்கதி தீக்கதி அடையும் நெறிகளது அக்கால நிலையும், நல்ல அறவுரைகள் அது காலை பயன்படா தொழிதலும், அதுபற்றித் தாம் இயன்றவாறு முயன்று சீர் பெறச் செய்து வருத லும் கூறியருளினர். பின்னும் புத்ததேவன் பின்னொரு காலத்தே வந்து தோன்றுவதும், அதனால் நல்லறங்கள்

பெருகி வளரப்போதலும், அதுபோது உலகம் எய்த விருக்கும் மேம்பாடுகளும் கூறினர். மற்றும், மணி மேகலையால் பல சிறப்பு நிகழ்ச்சிகள் நிகழுவதும், பின் னர்த், தாம் அறவுரைகள் பலவும் கூறப்போவதும், மாதவி சுதமதிகள் புத்த பெருமானது அடிகளைத் தொழுது நல்வழியிற் செல்ல விருப்பதும் கூறி, முடிவில் ஆபுத்திரன் திறத்தினை இனிது அறிவிப்பான் புகுந் தனர். (காதை 12)

வயணங் கோட்டை அடுத்த ஒரு பூந்தோட்டத்தில், ஒரு குழவி இரங்கி அழுதலைக் கேட்டு, அதனைப் பார்க்கச் சென்ற பூதி என்னும் அந்தணனும் அவன் மனைவியும், யாருமற்றதொரு குழவியை ஒரு பசு போற்றி நின்றதைக் கண்டு வியந்து, அதனைத் தம் மகவாகக் கொண்டு எடுத் தேகி, ஆபுத்திரன் எனப் பெயரிட்டு, வளர்த்து வருவா ராயினர். ஆபுத்திரன், ஒருநாள் அங்குள்ள அந்தணர்கள் ஒரு பசுவினை யாகம் செய்வதற்குக் கொணர்ந்து கட்டியி ருப்பதும், அது தன் கதியினை நினைந்து, துயர்ந்து, கண் ணீர் வடிப்பதும் கண்டு, இரங்கி, அப்பசுவைக் கொண்டு ஊரினின்று நீங்கி வெளியே சென்றுகொண்டிருந்தான். பசுவைக் காணாத அந்தணர்கள், அதனைத் தேடிச் சென்று ஆபுத்திரன் கொண்டு செல்வதைக் கண்டு, ஆபுத்திரனை இகழ்ந்து அடிக்கப் புக, அப்பசு, கண்டு சினந்து அவனை அடிக்க வந்தாரைக் குத்திக் கொன்று வெளி யே ஓடிவிட்டது. ஆபுத்திரன் பசுவின் துயர், பெருமை களைக் கூறியும், அவர்கள் கேளாது அவனைப் பலவாறு இகழ்ந்து அகற்றி, அவன் செயலை எங்கும் பரப்ப, பூதியும் ஆபுத்திரனை வீட்டைவிட்டு அகற்றிவிட்டான். ஆபுத் திரன் பிச்சை ஏற்கும் கலத்தில் உணவு இடாது, மண், கல்

முதலியவற்றை இடச் செய்தனர் அப்பார்ப்பனர். அது கண்ட ஆபுத்திரன் அங்கு நின்றும் வெளியேறித் தென் மதுரை யடைந்து அங்குள்ள சிந்தா தேவி கோயிலின் முன் இருந்து, தான் ஏற்றுவரும் உணவினைக் குருடர் முதலானவர்கட் களித்து, எஞ்சியதைத் தான் உண்டு வருவாறாயினன். (காதை 13)

ஆபுத்திரன் இங்ஙனம் அறஞ் செய்து வருங்கால், ஒருநாள் இரவில் காலந்தாழ்த்துச் சிலர் வந்து உணவு இரக்க, அவன் ஏதும் இல்லாமைக்கு வருந்திச், சிந்தா தேவியை வேண்டி நிற்க, அவள், அமுத சுரபி என்னும் தெய்வத்தன்மை வாய்ந்த இப்பாத்திரத்தை அவனுக்கு அளிக்க, ஆபுத்திரன் அத்தேவியை வணங்கிப் பெற்று, அவர்கட்கு உணவளித்துப், பின் பன்னாள் அத்தொண்டினை நன்கு செய்துவர, உலகில் பசிப்பிணியற, நல் வாழ்வு ஓங்கி வளர்ந்தது. அதுகண்டு மகிழ்ந்த இந்திரன் அவன் முன் தோன்றி, அவனுக்கு வேண்டும் வரம் தருவதாகக் கூற, அவன் தனது தொண்டே அமையும், வேறு வாழ்வுகள் வேண்டா எனக் கூற, இந்திரன் சினந்து, உலகில் மழைவளம் பெருகவும், அவன் தொண்டு பயனற்றொழியவும் செய்திட, ஆபுத்திரன், மழை வளமின்றி மக்கள் வருந்தும் நாடு யாங்குளதோ வென ஆய்ந்திருந்தகாலை, அத்தகையது சாவகநாடென அறிந்து, அங்குச் செல்வாறாயினன். அவன் அதற்கு மரக்கலம் ஏறிச் செல்லுங்கால், அக்கலம் இடையே தங்கிய மணிபல்லவத்தீவில், அவன் இறங்கி யிருக்குங்கால், அவனை விட்டு அக்கலம் சென்று விட, யாருமில்லாத அத்தீவில், தன் தொண்டு பயனற்றதை உணர்ந்து வருந்தி, அப்பாத்திரத்தை அங்குள்ள கோமுகிப் பொய்கையில் விடுத்துத், "தக்கார்

கையிற் புகுவதாக" எனக் கூறி, உண்ணாநோன்பு இயற்றி, உடலை ஒழித்தனன். (காதை 14)

இங்ஙனம் ஆபுத்திரன் வரலாற்றினை உணர்த்திய அடிகள், ஆபுத்திரனைப் பாதுகாத்த அப்பசு, சாவக நாட்டில் உள்ள தவளமலையி லிருந்த மண்முக முனிவனிடம் தங்கி, தனது தெய்வீக ஆற்றலால் ஒரு குழந்தையை அளித்ததும், ஆபுத்திரனே அக்குழந்தையாய்ப் பிறந்தான் என்பதும், அவன் பிறந்த நாளில், பூ மழை பொழிந்தது கண்ட முனிவர்கள், அங்கு வந்து அவன் வரலாறு உணர்ந்து ஏகியதும், அவன் இப்போது அந்நாட்டு மன்னனாகி ஆண்டு வருவதும் கூறிப், பின், காவிரி நாட்டில் எங்கும் வறுமை தோன்றி வருத்தலின், அப் பாத்திரத்தினைக் கொண்டு அங்கங்குச் சென்று அதனைப் பயன் படுத்தி வரக் கூறியருளியது.

அது கேட்ட மணிமேகலை வெளிவந்து, யானைத் தீயென்னும் கொடிய பசிநோயால் வருந்தி வரும் காயசண்டிகையைக் கண்டு, அவளது துன்ப நிலையின் காரணம் ஒருவாறு உணர்ந்து, அவளால் ஆதிரையின் பெருமை யுணர்ந்து அவ்வாதிரையின் வரலாறு அறிவிக்க வேண்டினள். (காதை 15)

ஆதிரையின் கணவன் சாதுவன் என்பான், வட்டாடல் முதலாய தீய நெறிகளில் ஒழுகிப் பொருளை யிழந்து, வேற்று நாடு சென்று பொருள் தேட எண்ணி வணிகருடன் கப்பலேறிச் சென்றவன், அது கவிழ்ந்திட, அதினின்றும் தப்பி, நாகர் மலைக்குச் சென்று, அங்குள்ளார் தீய ஒழுக்கங்களைக் கண்டும் கேட்டும் அவர்தம் அறியாமைக்கு வருந்தி, அவர்கட்குப் பொருந்தும் அறங்களைக் கூறி, அவர்கள் தந்த பொருள்களைப் பெற்றுப் புகாருக்கு

மீண்டனன். இங்கே அவன் மனையாள் ஆதிரை, கப்பலிற் சென்றுருள் ஒருவனால், தன் நாயகன் இறந்தனன் எனக் கேள்வியுற்றுத், தானும் இறக்கத் துணிந்து, சுடலை சென்று தீமூட்டி அதில் இறங்கவும், அவள் அதனாற் சிறிதும் இடருறாது நின்று, உண்மை யுணராது தெய்வத்தை நோக்கி வருந்துங் காலை, வானொலியால் தன் கணவன் இறந்திலன் என்பது கேட்டு ஆறுதலுற, அதுபோது, அவள் கணவன் அங்கு வந்துற்றனன் என்னும் இவ்வரலாறு உணர்ந்த மணிமேகலை அக்காய சண்டிகை கூறியவாறு அந்த ஆதிரையின் இல்லம் சென்று பிச்சை யேற்று மீண்டனள். (காதை 16)

மீண்டு, அத்தெய்வப் பாத்திரம் கொண்டு, இடையறாது பற்பலர் பசியகற்றி வரும் மணிமேகலையைக் கண்ட காயசண்டிகை, வியந்து தன் பசியின் காரணத்தையும் அதன் கொடுமையினையும் மீண்டும் விரித்துரைக்கக், கேட்ட மணிமேகலை அன்பு கூர்ந்து அன்னம் அளிக்க, அதனை உண்டபோது காயசண்டிகையின் கொடும்பசி அறவே ஒழிந்தது. மணிமேகலை காய சண்டிகையின் வரலாற்றினைச் சுருக்கமாக உணர்ந்திருப் பினும் அதனையே மீண்டும் மிக விளக்கமாகக் கேட்டுணர்ந்து மகிழ்ந்த காலை, காயசண்டிகை, சக்கரவாளக் கோட்டத்தைச் சார்ந்த, உலகவறவியிலிருந்து, அந்த அறத்தினைச் செய்து வருகவென மணிமேகலைக்குக் கூறித் தன் பதிக்குச் செல்வாளாயினள். அங்ஙனமே மணிமேகலை அங்குச் சென்று தன் நல்லறத்தினைச் செய்து வருவாளாயினள். (காதை-17)

சித்திராபதி, மாதவி மணிமேகலையரின் நற்செயல்களில் வெறுப்புற்று வருபவள், தம் குலத்தினர் சிலர்க்கு, அவ்

விருவர்து செயல்களை எடுத்துக்காட்டிப் பழிப்பித்து, மணிமேகலையை உதயகுமரன்பாற்படுத்தும் உறுதியுடன், அவர்களொடு அவன்பாற்சென்று, அவனுக்கு மணி மேகலையின்பாலுள்ள காதலைத் தூண்டி வளர்ப்பாளாயி னள். உதயகுமரன், இவள் உரைகளில் ஒருபாற் கிளர்ச்சியுற்றனனேனும், மற்றொருபால், தனக்குத் தெய் வம் இரவிற் கூறிய உரையால் தளர்ச்சியும் உற்றனனாக, அஃதுணர்ந்த சித்திராபதி, தங்கள் குலமரபு இன்ன தென்பதும், அதினின்றும் பிறழ்ந்தவர்களை மீண்டும் அந் நெறிப்படுத்தல் இழுக்கன்று என்பதும் பிறவும் அவனுக் குக் கூறித்தேற்ற, அவன் அம்பலம் புக ஒருப்பட்டு எழுந்த னன். அம்பலத்தே புக்க உதயகுமரன் மணிமேகலையைக் கண்டு காதல்மொழிகள் கூற, அவள் சில அறவுரைகள் கூறி உள்ளே சென்று, காயசண்டிகை உருவில் வெளியே சென்றனள். உதயகுமரன் மணிமேகலையைத் தேடி உள்ளே சென்று, அங்குக் காணாது, வருந்தி, சம்பாபதி முன் வரங்கிடந்து, அங்குள சித்திரத்தெய்வ வுரையால், அதனை விடுத்து எழுந்து, காமத்தீயால் வருந்தித் தன் அரண்மனை எய்தினன். (காதை-18)

வெளியே சென்ற மணிமேகலை, அந்நகர்ச் சிறைக் கோட்ட வாயிலையடைந்து, அங்குள்ள சிறையாளர்கட்கு உணவளித்துச் செல்லுங்கால், அச்சிறைக்கோட்டக் காவலர், மணிமேகலையின் பெருமையினையும் அப்பாத்தி ரத்தின் சிறப்பினையும் தங்கள் அரசற்குஉணர்த்த எண்ணி, பூஞ்சோலையில் தன் தேவியொடும் அமைச்சர் முதலானோ ரொடும் இனிது பொழுது போக்கிய அரசனிடம் சென்று கூற, அவ்வரசன் காயசண்டிகையுருவில் வதியும் மணி மேகலையை, அக்காவலர் வழியாக வரவேற்று, அவள்

கூறியதோர் வரலாற்றை உணர்ந்து, அவள் விரும்பியாங்குச் சிறைச்சாலையை அறச்சாலையாக்கித் தவமுனிவர்கள் இருக்கை யாக்கினன். (காதை-19)

உதயகுமரன் காயசண்டிகை உருவில் வெளிச் சென்றவளும், சிறைக்கோட்டத்தை அறக்கோட்டமாக் கியவளும் மணிமேகலையேயாம் என எண்ணித் துணிந்து, அவளைத் தன் தேரேற்றி வருவன் என்று உலக அறவியி னுட் சென்றான். காஞ்சனன் தன் மனைவியின் தீவினைக் காலம் முடிவுற்றும் தன்பால் வாராமைக்குக் கவன்று, யாங்கணும் தேடிவருபவன், சம்பாபதி கோயிலின் முன்பு உலக அறவியிற் காயசண்டிகை வடிவில் இருக்கும் மணி மேகலையை அவளே என அணுகிப், பிச்சைப் பாத்திரத் தினை வியந்து, அளவளாவினன். அவள் வாளாது நின்று, பின் உதயகுமரனை அணுகி, அவனுக்கு ஒரு நரை மூதாட்டியினைக் காட்டி, இளமை நிலையாமை முதலி யன உணர்த்தி நிற்கக், கண்ட காஞ்சனன், இந்நிகழ்ச்சி களால் அவ்விருவர்க்கும் கள்ளத் தொடர்புண்டுபோலும் என எண்ணி, உண்மையை அறிந்து ஒறுக்க, இரவில் அங்கு ஒளிந்திருந்தான். உதயகுமரன், அங்கு நின்றவள் மணிமேகலையே; ஏதிலன் ஒருவன் அங்கிருத்தலின், அவள் மருவிலள்; மீண்டும் சென்று காண்போம் என எண்ணிச் சென்றவன், நள்ளிரவில் அங்கு மீண்டும் வந்துற, காஞ்ச னன் தான் எண்ணியதே உண்மை எனத் துணிந்து, உதயகுமரனை வாளால் வெட்டி வீழ்த்திக், "காயசண்டிகை யைக் கவர்ந்து செல்வேன்" என அவள்பால் அணுக, அங்குள்ள கந்திற்பாவை, "இவள் நின் மனைவியல்லள்: நின் மனைவி சாபம் நீங்கிச்செல்லுங்கால், யாரும் செல்லத் தகாத விந்தை மலையின் மேலே செல்ல, விந்தா கடிகை

என்னும் தெய்வம் அவனை விழுங்கிவிட்டது: இவள், மணி மேகலை: இவளுடைய முற்பிறப்புநாயகனை இவன் இவ்வூர் அரச குமரன்: இவனை வெட்டிய தீவினை, நின்னை வந்து பற்றும்: இவளை அணுகாதே" என்று அறிவுறுத்த, அவன் உண்மையுணர்ந்து வருந்தித் தன் நகரம் சென்றனன்.

(காதை-20)

மணிமேகலை இந்நிகழ்ச்சிகளை உணர்ந்து எழுந்து, வேற்று வடிவை யொழித்து, உதயகுமரனை நோக்கிப் பலவாறு இரங்கி யழுங்காலை, கந்திற்பாவை தோன்றி, பற்றற்றுப் பிறவியொழியும் அறவுரைகளைக் கூறித், தன் வரலாறுகளையும் விரித்துரைத்திட, மணிமேகலை தனக்கு இனி நிகழ விருப்பனவற்றை உரைத்தருள வேண்டினள். அத்தெய்வம், "மணிமேகலை! அரசன் தன் மகன் நின் பொருட்டு வெட்டுண்டிறந்ததை உணர்ந்து, நின்னைச் சிறையிடுவன். அவன் தேவி அதனை நீக்கி, நின்னைத் தன் காவலில் வைத்து வருத்துவள். மாதவியும் அறவணவடிகளும், தேவிபால் எய்தி, நின்னை விடுவிப்பர். நீ பின்பு ஆபுத்திரன் நாடு சென்று தருமசாவகன் அறவுரைகளைக் கேட்டு, ஆபுத்திரனுடன் மணிபல்லவத்தினை அடைவாய். அவன் தன் வரலாறுகளைத் தீவதிலகையால் அறிந்து தன் நாட்டிற்கு மீள, நீ அருந்தவன் வடிவில், வஞ்சி செல்வாய். அங்குப் பற்பல சமயவாதிகள் கொள்கைகளைக் கேட்டுணர்வாய். பின், நீ, காஞ்சிமா நகர்சென்று, அங்குள்ள அறவணவடிகள் மாதவியரைக் கண்டு, அந்நகரில் மேவிய பசிப்பிணியைப் போக்கும் நல்லறம் செய்துகொண்டிருப்பாய். நீ கேட்ட பல சமயக் கொள்கைகளையும் அறவண அடிகளிடம் கூறி, உண்மை தெரிந்து கொள்வாய். அப்பால் அங்கு நின் உடல்நீத்து, மகத நாட்டில் ஆண் பிறவி

கள் பலகொண்டு, ஞானம், நல்லறங்களின் வளர்ச்சியுற்று, முடிவில் புத்ததேவன் மாணவனாகி வீடுபேறு உறுவாய் என்று கூறியருளியது. (காதை-21)

இப்பால் ஞாயிறு எழுங்காலை, அக்கோயிலில் வழிபடவந்தவரால், இந்நிகழ்ச்சிகளை உணர்ந்த சில முனிவர், அரசகுமரன் உடலையும், மணிமேகலையையும் தனித்ததோர் இடத்தில் இருத்தி அரசனிடம் சென்று, அந்நிகழ்ச்சியினைத் திடுமெனக் கூறாது, காமக்களியால் சில இளைஞர்கள் மயங்குவதும், அவர்தம் பெற்றோரே அத்தீவினை செய்தாரை வெறுத்து ஒறுத்தலுமாகிய பல நிகழ்ச்சிகளைக் கூறிப், பின் மெல்லென உதயகுமரன் வெட்டுண்டு இறந்த நிகழ்ச்சியும் கூறுவாராயினர். அது கேட்ட மன்னன், தன் மகன் இறந்ததுபற்றி வருந்திமயங்காது, அறநெறியான் உயர்ந்தோர் பலர் பிறந்த சோழ குடியில் இவன் பிறந்தனனே! இவனைத் தான் தண்டம் செய்யுமாறில்லையே என்று வருந்தி, மகனை ஈமத்து ஏற்றுவித்து, மணிமேகலையைச் சிறையிடுவித்தான்.

(காதை-22)

தன் மகனை இழந்து வருந்தியிருக்கும் அரசன் தேவி முன், வாசந்தவை என்னும் முதியவள் சென்று, சிறப்பின்றி மடிந்த மகனுக்கு வருந்தல் வேண்டாவென அறிவுரை கூறி அகன்றனள். தேவி, துயரமும் மணிமேகலையின்பால் எழுந்த சினமும் தணியாளாய், அவளை வஞ்சித்து வருத்த நினைந்து, அரசனைச் சிறைவிடுக்க வேண்டி அவளை அழைத்தேகி, மயக்க மருந்து ஊட்டியும், கல்லா இளைஞனொருவனைக்கொண்டு தீதிழைக்கத் தூண்டியும், புழுக்கறையில் அடைத்துப் பட்டினி கிடக்கச் செய்தும், வருத்த, அவள் அவற்றால் யாதொரு தீங்கும் எய்தாமை

கண்டு, ஏதோ தெய்விக ஆற்றலுடையள் என அஞ்சி, அம்மணிமேகலையை அழைத்து வரச் செய்து, "தன் தவறுகளைப் பொறுத்தருள வேண்டினள். மணிமேகலை, உதயகுமரனது முற்பிறப்பு வரலாறுகளையும், அவள் செய்த வஞ்ச நிகழ்ச்சிகட்குத் தான் தப்பிய நெறிகளையும் கூறித், தான் வேற்றுருக்கொண்டு, வான்வழியே செல்லாது நின்றது, அத்தேவிக்குச் சில அறிவுரைகள் கூறிச் செல்ல நினைந்ததே யாதலும் கூறி, அங்ஙனமே சில அறிவுரைகளும் நவின்று, தன்னை வணங்கிய அத்தேவியை நோக்கி, "நீ என் கணவனுயைவற்குத் தாயாகலின், என்னை வணங்கற்பாலை யல்லை" எனக் கூறித் தானும் அவளை வணங்கினாள். (காதை—23)

சித்திராபதி, தான் எண்ணியதொன்று முடிந்ததொன்றாயது கண்டு வருந்தி, அரசன் தேவிபால் வேண்டி, மணிமேகலையை விடுவித்து அழைத்துவர எண்ணிச் சென்று, தேவியிடம், தன் குலப்பெருமையும், அக்குலத்திற் பிறந்த மாதவி மணிமேகலையரின் செயல்களால் தனக்கு எய்திய குறையும் கூறி வருந்தி, அதனொடு, மணிமேகலையால் அந்நகர்க்கு ஒரு தீங்கு நிகழவிருக்கின்றது; அவள் பெயர் கொண்டதும், அவள்பால் அருள் கொண்டதுமாகிய மணிமேகலா தெய்வத்தால் இந்நகர் அழிவெய்த விருக்கின்றது என, ஒரு சாரணன் நெடுமுடிக்கிள்ளி என்னும் மன்னனிடம் கூறியுள்ளான்; மணிமேகலைக்கு ஏதேனும் தீங்கு நிகழுங்கால், அத்தெய்வம் வெளிப்படக்கூடும் என்பதும் கூறி மணிமேகலையைத் தன்பால் விடுக்க வேண்டினள். அது கேட்ட தேவி, "நல்லாற்றிற் புகுந்த மணிமேகலை மீண்டும் தூய்மையற்ற நின் குல நெறியிற் புகாள். என்னொடு

இங்கே யிருப்பள்" எனக் கூறுங்கால், அறவணவடிகள், மாதவி முதலியோர் அங்கு வந்தனர். தேவி அடிகளை வணங்க, அடிகள் அவட்குப் பன்னிரு நிதானங்களின் இயல்களை விளக்கி ஆசி கூறியும், மாதவி சுதமதிகட்கு நல்லற நெறியின் ஒழுகி மேம்படக் கூறியும், மணிமேகலையை நோக்கி, "நீ பிற சமய அறங்களை யெல்லாம் கேட்டுணர்ந்து பின் என்னிடம் வருங்காலை, நான் பல அறங்களையும் அவற்றின் பகுதிகளையும் விளங்க உரைப்பேன்" என்று கூறியும் எழுந்தார். மணிமேகலை, அடிகளையும், பிறரையும் வணங்கித் தான் அந்நகரிலிருந்தால், பொதுமக்களால் தனக்கு எய்தலாம் பழி முதலாயவற்றை உரைத்துத், தான், ஆபுத்திரன் நாடு, மணிபல்லவம், வஞ்சி முதலாயவற்றிற் சென்று செய்ய எண்ணிய நல்லறங்களைக் கூறி, விடை பெற்றனள். பின் அந்த நகரத் தெய்வங்களை வணங்கி, வான் நெறியிற் சென்ற மணிமேகலை, முதற்கண் சாவகநாட்டு நாகபுரத்திலிறங்கி, அங்குள்ளதொரு பூஞ்சோலையிலிருந்த முனிவரைக் கண்டு வணங்கித், தன் வரலாறுகளைக் கூற, அம்முனிவர் அந்நாட்டு அரசன் புண்ணியராசனென்பான் பெருமைகளைக் கூறி, அங்கு வேண்டும் காலம் தங்கியிருக்க அருளினர்.

(காதை—24)

அப் பூஞ்சோலையில் முனிவருடன் மணிமேகலை யிருக்குங்கால், நாகபுரத்து மன்னனும் அவன் தேவியும் அங்குற்று, முனிவரை வணங்க, முனிவர் அவர்கட்குப் பல நல்லற வுரைகளை இயம்பினர். அரசன் அங்கு அவ்வுரைகளைக் கேட்கும் இம்மாது யாரென்று வினவ, கஞ்சுகன் எனும் பிரதானி, மணிமேகலையின் பெருமைகளைக் கூறித், தான் முன்பொருகால், அரச காரியமாகப் புகார்

சென்ற காலை, அவள் பெருமைகளை யுணர்ந்து வந்து உரைத்ததனையும் நினைவூட்டினன். மணிமேகலை, அரசனை நோக்கி, அவன் பழம் பிறப்பிற் கொண்டிருந்த பாத்திரமே, தன் கையில் உள்ள பாத்திரமாதலும், அவன் மணிபல்லவத்திற்குத் தன்னுடன் வந்து, பழம் பிறப்பு வரலாறுகளை நன்கு தெரிந்துகொள்ள வேண்டுமெனவும் கூறி, அவன் இசைவு பெற்று, அவனைக் கலத்தின் வழியே வரச் செய்து, தான் வான் வழியாக அங்குச் சென்று, அவன் வரவினை எதிர்நோக்கியிருந்தாள். பின் புண்ணியராசன், தன் அரண்மனை சென்று தன் தாயிடம் மணிமேகலையின் காட்சியும், அவள் தன்னை மணிபல்லவத்திற்கு வரக் கூறிச் சென்றதும் கூறித், தன் பிறப்புப்பற்றித் தன் தாய் அறிந்துள்ளனவற்றைக் கேட்டறிந்துகொண்டு, பின் அமைச்சர்களிடம், தருமசாவக முனிவர், மணிமேகலை இவர்கள் அறவுரைகளால், தன் மனம் விழையும் நன்னெறிச் செலவினைக் கூறிப், போலி இன்பக் கருத்துக்கள் தன் மனத்தை விட்டகன்றதும் கூற, அவர்கள் அவ்வரசன் தோன்றுமுன், அந்நாடு எய்திய பஞ்சக் கொடுமைகளும், அவன் தோற்றத்தால் அது எய்திய சிறப்புக்களும், அவன் பிரியின் நாடு எய்தும் துன்பமும், நாட்டின் நிலையினை நோக்காது தன் நலமே கருதி அதனை விட்டேகல் அரசன் அறம் அன்றென்பதும் கூற, அதுகேட்ட அரசன், "யான் மணிபல்லவம் சென்று ஒரு திங்கள் எல்லையுள் மீள்வேன்" என்று கூறி, அவன்பால் நாட்டை ஒப்புவித்து, மணிபல்லவத் தீவினை யடைந்து, மணிமேகலையொடு, அதனை வலம் வந்து, தருமபீடிகையை வணங்கித் தன் பழம் பிறப்பினை நன்கு உணர்ந்துகொண்டான். பின் தனக்கு அமுதசுரபியை அளித்த சிந்தா தேவியைப் போற்றிக், கோமுகிப் பொய்கைக் கரையில் மணிமேகலை

யுடன் அமர்ந்திருக்கத், தீவதிலகை அங்கு வந்து, பழம் பிறப்பில் அந்த ஆபுத்திரனை அத்தீவில் விட்டு வந்த துணர்ந்து, மீண்டு ஆங்குச் சென்று அவன் இறந்தது உணர்ந்து, தாமும் இறந்த, அவன் அன்பராய வணிகர் கள் என்பினையும் அவன் என்பினையும் காட்டிற்று. பின், மணிமேகலையை நோக்கிப் புகார் மன்னன், தனக்குப் பீலி வளையின்பாற் பிறந்த மைந்தன், தன்பால் வந்துற அனுப் பப் பெற்றவன், கடலிற் கலம் கவிழ்ந்திடலால் காணுமற் போனமை உணர்ந்து, அவனைத் தேடித் திரிந்தமையால், இந்திரவிழா நிகழாதொழிய, மணிமேகலா தெய்வத்தின் முனிவுரையால், அந்தப் புகார் கடல் கொள்ளப்பட்டதும், அறவண அடிகள், மாதவி, சுதமதி என்போர் உய்ந்து, வஞ்சிமாநகர் சென்றிருப்பதும் கூறிற்று. மணிமேகலை கேட்டு வருந்தி யிருக்குங்கால், புண்ணியராசன் தன் பழைய உடல் என்பைக் கண்டு வருந்த, அவனுக்கு அற வுரைகள் கூறித் தேற்றித், தன் பிரிவாற்றாது வருந்திய அவனை ஆற்றுவித்து, அவன் நாட்டிற்குச் செல விடுத்துத், தான், வான் வழியாக வஞ்சிமாநகர் செல்வாளாயினள்.

(காதை—25)

வஞ்சிமாநகர்க்கு வான் வழியே சென்ற மணிமேகலை, அதன் புறநகரில் இறங்கிக், கண்ணகி தேவியின் கோயிலுட் சென்று, அத்தேவியை வணங்கிப் போற்றித் தனக்குக் காட்சியருளவும், அத்தேவி தன் கணவன் இறந்துழி அறக்கற்பாகிய உடன் இறத்தல் கைம்மை நோற்றல் இவ்விரண்டினுள் ஒன்று மேற்கொள்ளாது சினந்து எரிக் கும் மறக் கற்பினை மேற்கொண்டதன் காரணம் கூறி யருளவும் வேண்டி நிற்க, அத்தெய்வம் காட்சியளித்து, அங்ஙனம் இயற்றிய காரணமும், அத்தகைய துயரினைத்

தாங்கள் அங்கு எய்த நேர்ந்த முற்பிறப்பின் செயலொன்றும் கூறியருளியது. மேலும், தங்கட்குத் தங்கள் வினைப் பயனால், இன்னும் சில பிறப்புக்கள் நிகழ விருத்தலும், இறுதியில் புத்ததேவன் அறவுரைகள் கேட்டுத் தாங்கள் வீடுறப்போவதும் கூறி, மணிமேகலை அந்நகரத்துள்ள சமயவாதிகள் கொள்கைகளை யெல்லாம் கேட்டு, அவைகளின் பொருந்தாமை யுணர்ந்து, பின்பு பௌத்த சமய நெறிகளை யெல்லாம் உணர்ந்து, அதன் வழி ஒழுகி உய்தியுறப் போவதனையும் கூறியருளியது. மணிமேகலை, தேவியினை வணங்கி விடைபெற்று, ஒரு முனிவன் வடிவம் கொண்டு சமயவாதிகள் இருக்கையைச் சார்ந்தனள்.

(காதை—26)

அங்ஙனம் சென்றவள், அளவை வாதிகள் முதலாம் பதின்மர் கொள்கைகளையும் கேட்டு, அவை யாவும் பொருந்தாவுரைகள் எனத் தெளிந்தனள்.

(காதை—27)

பின்னர்த் தன்னுரு எய்தி அறவண அடிகள், மாதவி சுதமதியாகியோரைக் காணவேண்டி, அந்நகருட் சென்று முனிவர் தவச்சாலையிலிருந்த தன் தந்தையின் தந்தை மாசாத்துவானைக் கண்டு வணங்கித், தனக்கு இப்பால் நிகழ்ந்த வரலாறு, ஆபுத்திரன் வரலாறுகளைக் கூறினள். கேட்ட மாசாத்துவான், வருந்தித் தனது நிகழ்ச்சிகளையும், தான் அங்கு வந்ததும் அங்கே தங்கிவிட்டதுமாகிய காரணங்களையும், தனது பிற்கால நிலைகளையும், அறவண அடிகள், மாதவி, சுதமதியாகியோர் காஞ்சி எய்தியிருப்பதையும், அவ்விடத்தில் எய்திய பசிக் கொடுமைகளையும் கூறி, அங்குச் செல்வாயாக என மொழிந்து விடுத்தனன். அங்ஙனமே காஞ்சி நகரம் சென்ற மணிமேகலை, ஒரு

சோலையில் இறங்கித் தன்பால் வந்த அந்நகர் அரசனைக் கண்டு, அவன் அங்குத் தன் வருகையுணர்ந்து, மணிபல்லவத்தீவு, கோமுகிப் பொய்கைபோலும் இடங்களை இயற்றியிருப்பதனைக் கண்டு மகிழ்ந்து, மேலும் புத்த பீடிகை, தீவதிலகை, மணிமேகலா தெய்வம் இவற்றின் வடிவங்கள் அமைந்த ஒரு கோயில் கட்டுமாறு வேண்டித் தனது அருளறத் தொண்டு செய்து, நகரினை வளம்படுத்துவாள், அறவண அடிகள், மாதவி, சுதமதியரைக் கண்டு வணங்கிப் போற்றி, மகிழ்வாள் ஆயினள். (காதை—28)

அதுபோது, அடிகள் தாங்கள் அங்குற்ற காரணம் கூறியருள, மணிமேகலை அதனைத் தானும் அறிந்திருப்பது கூறி, வஞ்சி நகரத்தே, தான் சமயவாதிகள் கொள்கைகளைக் கேட்டுணர்ந்ததும், அவைகள் பொருந்தாவுரைகளாகத் தனக்குத் தோன்றலும் கூறி, உண்மைப் பொருளை அடிகள் உணர்த்தவேண்டுமென வேண்டினள். அடிகள், அவ்வாறே, உண்மை அறிவுண்டாக்கும் அளவை இலக்கணங்களைக் கூறியருளினர். (காதை—29)

தானத்தின்பயனை மேவிச், சீலத்தினை மேற்கொண்டு, பழம்பிறப்பினை உணர்ந்து நன்னெறியுற்ற மணிமேகலை, அடிகளை வணங்கிப் புத்ததேவனது அறிவுரை யெல்லாம் கேட்டுத் தெளிந்து, பிறவித் துன்பம் ஒழிய நோற்றிருந்து, இறுதியில் வீடு பேறு உற்றனள்.

(காதை—30)

## நாடக நூல்கள்

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| மனோன்மணீயம் | .... | 3 | 8 |
| புகழேந்தி நாடகம் | .... | 2 | 4 |
| சுகுமாரி | .... | 0 | 6 |

## சங்க நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| சங்க இலக்கிய இன்கவித்திரட்டு முதற்பாகம் | .... | 3 | 0 |
| ஷை 2-ம் பாகம் | .... | 3 | 0 |
| ஷை 3-ம் பாகம் | .... | 3 | 0 |

# மணிமேகலை

## (ஒரு நாடகம்)

## 1. விழா அறை காதை

### காட்சி 1

**இடம் :** ஊர்ப் பொது மன்றம்.

**காலம் :** பகல்

**உரியோர் :** நகர மாந்தர் :- (சமயக் கணக்கர் முதலியோர்; பறை அறைவோன்.)

நகரமாந்தருள் ஒருவர் : ஐயீர்! சமயக்கணக்கரே! நீங்கள் நூல் வகைகளும், தத்துவங்களும், வீடுபேறும் உணர்ந்தவர்கள்; உலகியலும் முற்றும் உணர்ந்தவர்கள்; சமயவாதிகள் என்பன கேட்டு அறிவேன். இந்த இந்திர விழா முதல் முதல் எப்போது தொடங்கியது? எவ்வாறு தொடங்கிற்று? விளக்கமாகக் கூறுங்கள்.

சமயக்கணக்கர் : ஐயா! இது, பண்டு இச் சோணாட்டு மன்னனாகி உலகெலாம் உணர்ந்து புகழ்ந்த தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் காலத்தே தொடங்கியது! அம்மன்னனுக்கு, அகத்திய முனிவர் காட்சியருளிய காலத்தே, இக் காவிரிப்பூம் பட்டினம் மிக்க பெருஞ் சிறப்பு அடைவதற்கு உரிய வழி, இந்திர விழா இங்கு நடத்துவதாகும் என எடுத்துரைத்தனராம். அது கேட்ட மன்னன், இந்திரனை வேண்டிக் கண்டு வணங்கி, "இந்நகரில் ஆண்டுதோறும் நடக்கும் நினது விழாவிற்கு நீ வந்தருளிக் கண்டு மகிழ்ந்து ஏக வேண்டு"

மெனவும், "விழா இருபத்தெட்டு நாட்கள் நிகழ அருள் கூர வேண்டு"மெனவும் வேண்டிக்கொண்டானும். இந்திரன் அவ்வாறே அருள் செய்தானும். அவ்வரசன் காலமுதல் இன்றுவரை, இவ்விழா இடையறாது நிகழ்ந்து வருகின்றது.

மற்றொருவர்: காலக்கணக்கரே! இவ்விழா நிகழ்ச்சியை எண்ணி முடித்தற்கு உரியார் யாவரும் வந்துவிட்டார்களா என்பதை நீங்கள் பார்த்து, மேல் ஆகவேண்டிய முடிபுகளைச் செய்யுங்கள்.

காலக்கணக்கர்: ஆம். அதோ! வெவ்வேறு தேயத்து மக்கள், இந்நகரில் வணிகத்தின் பொருட்டு வந்துள்ளவர்கள் அமர்ந்திருக்கின்றனர். அதோ! அமைச்சர், புரோகிதர் முதலிய ஐம்பெருங் குழுவினர்.[1] அதோ எண்பேராயத்தினர்.[2] ஐயா! இக் கூட்டத்திற்குத் தேவர்களும் வந்திருப்பார்கள். ஆயினும் அவர்கள் பேரொளி உருவங்களைக் காணும் ஆற்றல், நம் கண்களுக்கு இல்லையன்றோ. ஆகவே, அருள்கூர்ந்து தம் உடம்பின் ஒளி நமக்குப் புலனாகாதவாறு மறைந்திருப்பார்கள். நம்மில் ஞானம் உடையார்க்கு வேண்டும் அளவு ஒளியைக் குறைத்துக் காட்டுவார். மற்றும் யாவரும் வந்துள்ளார்கள்.

ஒருவர்: நல்லது! அவையத்தார்களே! நாம் இவ்விழாவை இந்த ஆண்டிலே நிகழ்த்திடல் வேண்டுமல்லவா? உங்கள் ஒப்பம் தந்தருள்வீர்களாக.

---

1. அமைச்சர், புரோகிதர், சேனைபதியர், தூதுவர், சாரணர், (2) கரணத்தியலவர், கருமவிதிகள், கனகச் சுற்றம், கடை காப்பாளர், நகர மாந்தர், நளி படைத்தலைவர், யானைவீரர், இவுளி மறவர்.

காலக்கணக்கர் : விழாவின் இன்றியமையாமையை யாம் அறிவோம். விழா நிகழாவிடின், நாளங்காடிப்பூதம் சினம் கொண்டு நகரில் மிக்க துன்பம் விளைத்திடும் அன்றோ !

ஓர் இளைஞன் : பெரியீர் ! நாளங்காடிப் பூதம் என்பதன் வரலாறு யாது?

காலக்கணக்கர் : அதுவா ! பண்டு ஒருகால் இந் நாட்டி லிருந்தாண்ட முசுகுந்த மன்னர் பிரானுக்கும் அசுர ருக்கும் மிக்க மாறுபாடு உண்டாயிற்று. அசுரர், அம் மன்னன் கண்ணும் மனமும் இருளும் வண்ணம், மந்திர அம்பு விட்டனர். அத் தீங்கினைப் போக்கியருளியது அப்பூதமே !

இளைஞன் : அம்மா ! அத்தகைய பூதத்தின் சினத்திற்கு நாம் இடம் தரலாகாது. அப்பூதம் என்றென்றும் நம்மைக் காக்க, அதன் அருளிற்கு உரியர் ஆதல் வேண்டும்.

சமயக்கணக்கர் : மற்றொன்று: விழா நிகழாதொழியின், சதுக்கப் பூதம் என்பதொன்றும் மனக்கசப்பு உற்று, தன் கடமையைச் செய்யாதொழியும்.

இளைஞன் : ஐயீர் ! அப்பூதம் செய்யும் கடமை யாது?

சமயக்கணக்கர் : அது, தத்தம் ஒழுக்கம் தவறிப் பழி பாவங்கட்கு உரியராகிய ஆடவர், பெண்டிர், தவஞ் செய்வோர் என்ற இவர்களைக் கண்டறிந்து, தன் பாசத்தாற் கட்டிக் கொணர்ந்து அவர்களைப் புடைத்து உண்பது.

இளைஞன் : அம்மா ! இவ்வுண்மையை நான் இதுவரை அறியேன் ! இதன் செயலால், தீயோர் ஒழியவும் நல்

லோர் துயர் அற்று வாழவும் நிகழ்வதால், இது எத் துணைச் சிறந்த பேரருட் பூதம் ஆகின்றது.

ஒருவர் : காலக்கணக்கரே! நாம் இந்த ஆண்டின் இந்திர விழாவினை நடத்தத் தொடங்கும் காலம், அது முடியும் காலம் இவைகளைக் கூறியருள்வீர்களாக. அதனை நாம் நகரமாந்தர்க்குப் பறையறைவித்து உணர்த்துவோ மாக.

காலக்கணக்கர் : விழா, இன்று வைகாசி முதல் நாள் தொடங்கி, இருபத்தெட்டாம் நாள் காறும் நிகழ்தற்கு உரியது.

ஒருவர் : (பறையறைவோனை நோக்கி) அப்பா! வழக் கம் போல் பறை அறைந்து நகரத்திற்கு உணர்த்து வாயாக?

பறையறைவோன் : திருமகள் அகலாத இச்செழுநகரம் வாழ்க! வானம் மும்மாரி பொழிக! மன்னவன் செங் கோல் ஓங்கி, இம்மண்ணுலகின் நிலையினையும் விண் மீன் கள் நிலையினையும் போற்றுவதாக. நகர மாந்தர்களே! இந்திர விழாக்காலத்தே, இந்திரனும் முப்பத்து மூவ ராகிய தேவர்களும் தங்கள் தங்கள் இடங்கள் வறியன வாக, இந்நகர்ச்சிறப்பை நினைந்து இங்கே வந்து விடுவார் கள். எங்கெங்கும் பூரண கும்பம், பொற்பாலிகைகள், பாவை விளக்குகள் என்பவைகளைப் பரப்புங்கள். குலை களோடு கூடிய கமுகு, வாழை, வஞ்சி முதலிய மரங் கள் கொடிகளை நடுங்கள். திண்ணைகளில் உள்ள பொற் கம்பங்களில் முத்து மாலையினைக் கட்டுங்கள். வீதிகளி லும் மன்றங்களிலும் பழ மணல் மாற்றிப் புது மணல் பரப்புங்கள். பல வகையான துகிற் கொடிகளையும் எங் கெங்கும் கட்டுங்கள். சிவபெருமான் கோயில் முத

லாகச் சதுக்கப் பூதக் கோயில் வரையுள்ள எல்லாக் கோயில்களிலும் விதி முறை யறிந்த அறிஞர்கள் பூசனை செய்வார்களாக. புதுக்கிய மணற் பந்தர்களிலும், தருநிழல் மிக்க அம்பலங்களிலும், புண்ணிய அறவுரைகளை யறிந்தவர்களே! நீங்கள் பொருந்தி, அருளறங்களை அறிவியுங்கள். சமயவாதிகளே! பட்டிமண்டபத்தே மேவிச், சமய உண்மைகளை எடுத்துரையுங்கள். இவ்விழாக்காலத்தே, பகைவரோடும் கோபமும் போரும் கொள்ளாதீர்கள். நீர்த்துறை, பூஞ்சோலை, மணற்குன்று ஆற்றிடைக்குறை முதலிய எல்லா இடங்களிலும், தேவர்களும் மக்களும் மனம் ஒத்து உடன் திரியும் விழாக்காலம் இது. நம் நாட்டில் பசியும் பிணியும் பகையும் நீங்குவனவாக. மழையும் செல்வமும் சுரப்பனவாக. வாழிய நாடு! வாழிய மன்னர்பிரான்! இந்திர விழா இன்று முதல் இருபத்தெட்டு நாள் நிகழும்.



## 2 வது ஊர் அலர் உரைத்த காதை

### காட்சி 1

**இடம் :** விழாமன்றம்

**காலம் :** பகல்

**உரியோர் :** நகரமாந்தர், சித்திராபதி, வயந்தமாலை.

நகர மாந்தருள் ஒருவர் : நண்பர்களே! இந்த இந்திர விழா, வழக்கம்போல் எல்லாச் சிறப்புக்களுடன் இனிது நிகழ்ந்துளதாயினும், மதியம் இல்லாத வானம் போல ஒரு தனிச் சிறப்பு அற்றிருந்ததை நோக்கினீர்களா?

ஒருவர்: ஆம், விழாவின் அங்கங்களுள் ஒன்றாகிய ஆடல் பாடல் அரங்கம், மாதவி மணிமேகலைகளாகிய இரு மணிகளும் காணப் பெருமையின் பொலிவுற்றிருந்தது!

ஒருவர்: எத்துணையரோ வந்திருந்தனர். ஆடல் பாடல் நிகழ்த்தினர். அதனாற் பெற்றதென்னை? அவ் விருவரின் தனிச் சிறப்புக்கள் வேறு யார்க்கு எய்தும்?

ஒருவர்: அரசருக்கு ஆடும் கூத்து, அல்லோர்க்கு ஆடும் கூத்து எனும் இரண்டினும், அவர்கள் கூத்துத் தனிச் சிறப்பினது!

ஒருவர்: அவர்கள் இசை என்ன! தாள அமைதிகள் ஆகிய செந்தூக்கு முதலியவை என்ன! தாள அறுதிகள் என்ன! இவைகள் வேறு எவரிடத்தும் காணப் பெறாத சிறப்பின!

ஒருவர்: அவர்தம் கருவித்திறமைகள் வேறு எங்குக் காணலாவன? யாழ், குழல், தண்ணுமை, ஏனைக்கருவிகள்கொண்டு அவர்கள் இசைக்குங்கால், தேவர்களும் திசையெலாம் சூழ்ந்து கேட்டு மகிழ்வரன்றோ! அவர்கள் அக நாடகம், புற நாடகங்களை உரிய உருக்கொண்டு நடிக்குங்கால், பார்க்க ஆயிரம் கண்கள் வேண்டுமே!

ஒருவர்: ஆடல் பாடல் இவைதாமோ !இவர் சிறப்புக்கள்! உலகில் பந்தாடல், மடைத்தொழில் செய்தல், சுண்ணம் இடித்தல், நீராடல் முதலிய எல்லா நெறிகளிலும் இவர்கள் வல்லுநர் அல்லரோ!

ஒருவர்: இம் மாதவியின் கூட்டுறவினை எய்தும் மா பெரும் தவம் செய்தவன், உலகில், கோவலன் ஒரு

வனே! மணிமேகலையினை எய்தத் தவஞ் செய்துளான் யாவனோ! அறியேம்!

ஒருவர்: இவர்கள் மலர் தொடுத்தல்! கோவை கோத்தல்! ஆம் இவைகளின் சிறப்பு அறியீரோ?

ஒருவர்: இவர்தம் அறிவின் திறமையை என்னென்பது! கட்டுரை வன்மை, சித்திர வன்மை, காலக் கணிதம், கலைகளின் துணிவு, ஓவியச் செந்நூல், உரை நாற்கிடக்கை இவைகளையெல்லாம் கற்றுத் துறை போகிய பொற்றொடி நங்கையர் அலரோ! இவர்கள் வாழ்க்கை இந் நகர்க்கே ஒரு தனிச்சிறப்பினைத் தருவது அன்றோ!

(ஒரு புறமாக)

சித்திராபதி: வயந்த மாலை! இங்கு வருக! நகர மாந்தர்கள், நம் மாதவி, மணிமேகலை இங்கு விழாவிற் கலந்து கொள்ளாமைபற்றி இதோ கூறும் அவர் உரைகளைக் கேட்டனையன்றோ! அந்தோ! என் தீவினை இருந்தவாறென்னே! எனக்குத் தோன்றிய மகள் என் குலத்தை வெறுத்த நலத்தினள் ஆயதும் அன்றி, நகர மாந்தர்களது வெறுப்பிற்கும் உள்ளாகியதும் பற்றி, யான் துயர்க்கடலுள் மூழ்கித் துஞ்சுவேன் ஆயினன். நீ அவள்பாற் சென்று நல்லறிவு புகட்டி அழைத்து வாராயோ! வயந்தமாலை! யான் என்செய்வேன்! அந்தோ!

வயந்தமாலை: தாயே! திருவருட்செயலின் வண்ணமே யாவும் நிகழும். யாம் வருந்தி என் செய்யவல்லேம். யான் மாதவியை அணுகி ஏற்பன உரைத்து இயன்றது காண்பேன். (செல்லல்)

## காட்சி 2

**இடம் :** மலர் மண்டபம்

**காலம் :** பகல்

**உரியோர் :** மாதவி, வயந்தமாலை, மணிமேகலை.

வயந்தமாலை : அந்தோ! மாதவிக் கொடியோ அங்கே தோன்றுவது! செம்பவளத் திருமேனி செய் தவத்தா லன்றோ இங்ஙனம் வாடி மங்கியுளது! இந்நிலையினைக் காண நின்ற என் தீவினைதான் என்னே! (அணுகி வணங்கல்.)

மாதவி : நயந்த கேண்மை வயந்தமாலையே! வருக! வருக! நம் தாய் நலன் உரைக்க. நகரில் திருவிழா இனிது நிகழ்வது கண்டு மகிழ்கின்றனையா?

வயந்தமாலை: பொன்னே யனையாய் புகுந்தது கேளாய்! தேவரும் மக்களும் செறிந்து மகிழும் திருவிழாவில், ஊரரெலாம் கூடிப் பேரலர் எழுப்பி ஆரவாரம் செய்கின்றனர். திருவிழாவின் காட்சி அங்கங்களில் ஒன்றாகிய ஆடல் பாடல் நிகழும் அரங்கில், நீயும் நின் மகள் மணிமேகலையும் தோன்றி, நகரினை மகிழ்ச்சி யூட்டாமைபற்றி, ஊரவர் எல்லோரும் ஒருங்கு சேர்ந்து, அலர் கூறுகின்றனர். உங்கள் ஆடல்பாடற் சிறப்புக்களை யெல்லாம் ஒருவர் ஒருவராகக் கூறிக் கூறிப் பாராட்டி, அந்தோ! இத்தகைய சிறப்பினர் வந்திலாமையின் இவ்விழாச் சிறப்பே இல்லையாயிற்றே என்று வருந்துகின்றனர். இவர்தம் அலரினைக் கேட்டு மனம் மாழ்கிய நின் தாய் சித்திராபதி, என்னை நின் பால் வந்து ஊரவர் அலரினைக் கூறி அறிவுறுத்தி அழைத்து வரப் பணித்திருக்கின்றனள். அந்தோ!

மாதவி! நின் நிலையினை யான் எங்ஙனம் கண்டு மனம் அமைவேன்!

மாதவி: வயந்தமாலையே! மாற்றம் என் கூறுவேன்!

காதலன் உற்ற கடுந்துயர் கேட்டேன்!

போதல் செல்லா உயிருடன் நின்றேன்!

பொற்கொடி! மூதூர்ப் பொருளுரை இழந்தேன்!

நற்றொடி நங்காய்! நாணுத் துறந்தேன்!

என்செயல் இது. பத்தினிப் பெண்டிர் பான்மை நீ கேளாய்!

காதலர் இறப்பின் கனை எரி பொத்தி,

ஊது உலைக் குருகின் உயிர்த்து அகத்து அடங்காது,
இன் உயிர் ஈவர்.

வயந்தமாலை: ஆம். பாண்டியன் தேவியின் செய்தி கேட்டறிந்தோம்.

மாதவி: இன் உயிர் ஈவர். ஈயார் ஆயின்,
நன்னீர்ப் பொய்கையின் நளி எரி புகுவர்.

வயந்தமாலை: ஆம்! அங்ஙனம் மாய்ந்தோர் நம் உலகில் விண் மீனிற் பலர்.

மாதவி: நளி எரி புகார் ஆயின் அன்பரோடு,

உடன் உறை வாழ்க்கைக்கு நோற்று உடம்படுவர்.

வயந்தமாலை: ஆம், அடுத்த பிறப்பில் தம் அன்பரைக் கூடிடக் கடுந்தவம் புரிவார்கள். 'துன்புறுவன நோற்றுத் துயருறும் மகளிர்' என்று கூறுவர் அன்றோ!

மாதவி: வயந்தமாலை! நம் பத்தினித் தெய்வம், கண்ணகியம்மை செய்தது என்ன?

கணவற்கு உற்ற கடுந்துயர் பொறுஅள் !
காவலன் பேரூர் கனைஎரி யூட்டி
நாயகன் திருக்கரம் நண்ணினள் அன்றோ !

வயந்தமாலை : ஆம் ! மாதவி! அத்தகைய பத்தினியை எத்தலத்தும் எஞ்ஞான்றும் உலகம் கண்டிலது.

மாதவி : வயந்தமாலை! அத்தகைய மாபெரும் பத்தினி மகள் மணிமேகலை அருந்தவப் படுதல் அல்லது, யாவதும் திருந்தாச்செய்கைத் தீத்தொழிற் படுவளோ! வயந்தமாலை: என் நிலை கேளாய்.

ஈங்குஇம் மாதவர் உறைவிடம் புகுந்தேன்
அறவண அடிகள் அடிமிசை வீழ்ந்தேன்
காதலன் உற்ற கடுந்துயர் கூறினேன்.
அடிகள் அருளிய திருமொழி கேளாய் !

வயந்தமாலை : ஆம். அம்மா ! மாதவி ! அத்திரு மொழிகளை எளியேனும் கேட்டு உயர்வுற அருளாய் !

மாதவி : வயந்தமாலை !

பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்.
பிறவார் உறுவது பெரும்பேர் இன்பம்.
பற்றின் வருவது முன்னது ; பின்னது
அற்றோர் உறுவது அறிகென்று அருளினர்.

வயந்தமாலை : மாதவி! நன்று! நன்று! நீ உண்மை யுணர்ந்து பற்றினை ஒழித்தது மிகவும் ஏற்புடையதே !

மாதவி : இவ்வுண்மைகளைக் கூறியவர், ஐவகைச் சீலத்து அமைதியும் காட்டி, உய்வகையும் காட்டி, இந்நெறி களில் நின்று உய்வாயாக என்று அருளினர். அந் நெறியில் யான் நிற்கின்றேன். இவைகளை என் தாய்க் குக் கூறுவாயாக.

வயந்தமாலை : அம்மா ! மாதவி ! பெறுதற்கரிய மணிகளைப் பெற்றிருந்தேம். அவைகளைத் தவக்கடலில் வீழ்த்தி விட்டேம். அவைகளோ நல்லிடம் புக்கன. யாமோ, துயர்க் கடல் புகுகின்றேம். போய் வருகின்றேன்.

---

# 3-வது மலர்வனம் புக்க காதை

## காட்சி 1

**இடம் :** மாதவி இருந்த மலர் மண்டபம்

**காலம் :** பகல்

**உரியோர் :** மாதவி, மணிமேகலை, சுதமதி

மாதவி : அம்மா ! மணிமேகலை, உன் அருமைத் தாய் தந்தையர்க்கு உற்ற கடுந்துயரம் கேட்டது முதல் நீ அடைந்து வரும் துயர் நிலை, மிக மிக இரங்கத்தக்கதாகின்றது. அந்தோ ! உனது அழகிய செங்கண்ணின் வரிவனப்பு எங்கு ஒழிந்ததோ ! ஒழிவின்றிக் கண்ணீர் உதிர்ந்துகொண்டிருக்கின்றதே ! (தனியே எண்ணல்) நல்லது கண்ணே ! (கண்ணீரைத்துடைத்தல்) நின் கண்ணீர் ஒழுகியதால், இம்மாலை தன் தூய்மையை இழந்து விட்டது. மீண்டும் ஒளியுடைய புதிய மலர் கொணர்ந்து கட்டுதல் வேண்டும். தக்கதோர் சோலைக்குச் சென்று மலர் கொணர்வாயாக.

சுதமதி : மாதவி ! இம்மணிமேகலை, தன் பெற்றோர்கட்கு உற்ற கொடுந்துயர் உணர, தணியாத துன்பம் மேன்

மேலுற்றெழுகின்றது. அழகிய நீல மலர் போன்ற கண்களின் சிறப்பைக் கடைக் கண்ணீர் சொரிந்து ஒழிக்கின்றது. இத்துயர் நிலையினைக் காமன் கண்டனனாயின், தன் படைகளை எறிந்துவிட்டு நடுங்குவானே! இப்பாவையை ஆடவர்கள் காணின், அப்பால் அகல்வதும் உண்டாமோ! அன்றித் தம் தன்மையில் நிற்பாராகில், அவர்கள் பேடியரே யாவர். மாதவியே! இது நிற்க, இங்கே நான் வந்த வரலாறு கூறுகின்றேன், கேட்பாயாக. வடக்கேயுள்ள காராளர் சண்பையில் நான் பிறந்தேன். என் தந்தை கௌசிகன் என்னும் அந்தணன். அவனுக்கு நான் ஒருமகளே உளன். ஒரு நாள், நான் பின்னே வருவது உணராமல், மிகவும் தனிமையாக மலர்கொய்வதற்குப் பூஞ்சோலை சென்றேன். அங்கு மலர் கொய்து கொண்டிருக்கும்போது, மாருதவேகன் என்ற ஒரு வித்தியாதரன் வந்தான். அவன், இந்நகரத்து இந்திரவிழாவைக் காண வந்தவன், வழியில், அவ்விடத்து நின்ற என்னைக் கண்டான். கண்டு, என்னையும் உடன்கொண்டு, வான் வழியே வருங்கால், என்னை மயக்கித் தன் வயப்படுத்திக்கொண்டான். முடிவில் இந்நகரில் என்னைக் கைவிட்டு, நெடுந்தொலையிலுள்ள தன் ஊர்க்குச் செல்வான் ஒரு நொடிக்குள் மறைந்தொழிந்தான்.

மாதவி: சுதமதி! ஆ! இதுவா உன் வரலாறு! அந்தோ! வித்தியாதரனின் புன்மையை என்னென்பது! தாம் விரும்பிக்கொண்ட மங்கையர்களை இடையில் அகற்றி ஒழிவாரும் ஆடவர் ஆவரோ! ஆடவராக! பெண்டிராக! காதலுற்றோர், கடைமுறை காணும் வரை இயைந்து ஒழுகாது, இடையிற் பிரிந்தொழிவாராயின் விலங்குகளிலும் புட்களிலும் கீழோராவர் அன்றோ?

சுதமதி: அம்மா! மாதவி! நம் மணிமேகலை தனித்துச் சென்று மலர் கொய்து வரற்கு உரியாள் அல்லள். அவளோடு யானும் போய் வருவேன்.

மாதவி: சுதமதி! எங்குச் சென்று மலர்கொய்து வரல் நலம்? இலவந்திகைச் சோலைக்குச் சென்றுவரலாமா?

சுதமதி: மாதவி! அது பன் மலர் அடுக்கிய நன் மரப் பந்தர் உடையதே. ஆயினும், ஆங்கு நம் உலக மன்னவனைச் சார்ந்தவர்கள் வந்திருப்பர். ஆதலால் அங்கே செல்லலாகாது.

மாதவி: உய்யானம் செல்லலாமன்றோ?

சுதமதி: அங்குள்ள மலர்கள் தெய்வங்கட்கு உரியன. வண்டுகளும் மொய்த்தல் இல்லை. பூதங்களால் காக்கப்படுவது அது. அறிவுடையோர் அங்கே செல்லார். அப்படியே சம்பாதி வனம், கவேர வனங்கள் தீண்டி வருத்தும் முதிய பெண் தெய்வங்களாற் காக்கப்படுவன, அறிவுடையோர் செல்லாதன.

மாதவி: வேறு எங்குச் செல்லலாம்?

சுதமதி: உவவனம் என்று ஒன்று உண்டன்றோ! அங்கே அருளும் அன்பும் ஆருயிர் ஓம்பும் ஒரு பெருங்கொள்கையுமுடைய புத்ததேவனது ஆணையால் பல மரங்களும் என்றும் பூக்கும். அங்கே செல்வதால் ஒரு தீங்கும் வாராது. மாதவி! மணிமேகலை! அங்கே வியப்பினதாகிய காட்சியொன்றுண்டு. அது யாவரும் காண்டற்குரியது. வேறு எங்கும் இல்லாதது அவ்வரிய காட்சி!

மாதவி: சுதமதி! அக்காட்சி யாதோ!

சுதமதி: அங்கு ஒரு பளிக்கறை மண்டபம் உளது. அதன் உள்ளிருக்கும் உருவம் புலனாகும். அதன் உள்ளெழும் ஒலி வெளிப்போந்து புலனாகாது. அதனுள் மாணிக்க ஒளி பரந்த தாமரைப்பீடமாகிய இருக்கை யொன்று உண்டு. அவ்விருக்கையில் அரும்பை யிடின் மலரும். மலர் என்றும் வாடாது!!! மலரில் வண்டுகள் மொய்த்திடா. இன்னும் சிறந்ததொரு காட்சி அதன்கண் உளது. அந்த இருக்கையில், ஒரு தெய்வத்தை நினைத்து அதன் அடியிற் சேர்க என ஒரு மலரை வைப்பின், அம்மலர் அவ்வடியிற் சேரும்! யாதோர் எண்ணமுமின்றி வாளா ஒரு மலரை அங்கு வைப்பின், அம்மலர் அங்கேயே தங்கியிருக்கும்!

மாதவி: இங்ஙனம் உள்ள அதன் செயலால் நாம் அறியும் உண்மைகள் யாவை?

சுதமதி. ஒருவர் ஒரு வினை செய்யின், அது கருத்துடன் செய்யப் பட்டதாயின், அதனாலாகும் நன்மையோ தீமையோ செய்தாரை அடையும். கருத்தின்றிச் செய்யப்படின் அதன் பலன் அவரை அடைவதில்லை என்போர் உரையின் உண்மையினை இஃது எடுத்துக் காட்டுவதாகும். அதற்கு மாறுபட்டு, ஒருவினை கருத்துடனோ, கருத்தின்றியோ செய்யப்பெறினும் அதனாலாகும் நன்மை தீமைகள் செய்தாரை அடைந்தே தீரும் என்பார் உரையினை, இது மறுத்துக் காட்டுவதாகும்.

மாதவி: ஓ! இது மிகச் சிறந்த தெய்வக்காட்சியாகும். சுதமதி! அவ்வனமே தீமையற்றதும் சிறந்த காட்சிகளை யுடையதுமாகலின், நீ, மணிமேகலையுடன் அங்குச் சென்று மலர் பறித்து வருவாயாக.

## காட்சி 2

**இடம் :** நகரத் தெரு

**காலம் :** பகல்

**உரியோர் :** சுதமதி, மணிமேகலை, நகரமாந்தர்.

மணிமேகலை: அம்மா ! சுதமதி ! அதோ ஒரு கூட்டம் வருகின்றதே ! யாதென உணர்ந்து ஏகுவோம்.

சுதமதி: அதுவா ! அது நாம் உணர்ந்து நகையாடிச் செல்லற்குரிய களிமகனைப் பற்றித் தொடரும் ஒரு கூட்டம். அங்கு நிகழ்வனவற்றைக் கண்டு கேட்டு உணர்வோம்.

ஒரு களிமகன்: ஐயீர் ! உண்ணா நோன்பிகளே ! காணாத உயிர்களுக்கும் கவலைப்படுகின்றவர்களே ! மண்ணாத யாக்கையுடையவரே ! அடிகளே ! மலரடி தொழுதேன். அந்தோ ! உம் உயிர், புழுக்கறைப்பட்டோர் போன்று வருந்துகின்றதே ! பாவம் ! இதோ என் கையிலுள்ள அமிழ்தத்தைப் பார்ப்பீராக ! இதன் பெருமையைக் கேட்பீராக ! எங்கள் குருமகன் அருளிய திரு அமிழ் தம் இது. இது, உமக்கு இம்மை மறுமை வீட்டின் பயன்களை யெல்லாம் இப்போதே தந்தருளும். இது, கொழுமடற்றெங்கில் விளைந்த பூந்தேறலாகிய அமிழ்து. இதில் ஏதேனும் கொலைப்பாவம் உளதா ? இலை, இலை, உண்டு தெளிவுறுவீர். ஏதேனும் தீங்கு உளதாயின், அன்றி, நும் யோகத்தில் இதனைவிட மிக்க பயனைக் காண்பீராயின் இந்த அமிழ்தையேயன்றி, என்னையும் புறக்கணித்து விடுமின் ! இது உறுதி, உறுதி ! (உண்ணா நோன்பிகள் செவி புதைத்து வாளா ஏகல்)

சுதமதி : மணிமேகலை, இக் களிமகன் கூற்றினைக் கேட்டனையோ? அதோ பார் ஒரு பித்தன் கோலத்தினை!

மணிமேகலை : அவன் அணிந்திருப்பன யாவை?

சுதமதி : அலரி மாலை. எருக்க மாலை. கந்தல் உடை, சுள்ளிகளின் தொடுப்பு, வெண்ணீறு, சந்தனம். அம்மம்ம! பண்பில்லாக் கூற்றுக்கள். அழுதல், விழுதல், அரற்றல், தொழுதல், சுழலல், தன் நிழலொடு பகைத்தல் முதலியன பார்!

மணிமேகலை : பாவம்! திருவருளால் இன்னோரெல்லாம் நன்னிலையுறுவார்களாக! அதோ! பேடிக் கோலத்தோன் ஆடல் முதலியன பார்.

சுதமதி : ஆம். அவன் ஆடுவது காமன் தன் மகன் அநிருத்தனைச் சிறை மீட்கப் பண்டு வாணன் நகரத்து ஆடிய பேடிக் கூத்து. அம்மா! இத்தெருவின் இரு புறத்துமுள்ள மாடமாளிகைகளிலுள்ள ஓவியங்களைக் கண்டு வியந்து நிற்பார்களைப் பார்!

மணிமேகலை : சுதமதி! அதோ பார், அழகிய காட்சிகள்! சிறிய பொற்றேர்களின்மீது அமைத்த யானைகளின்மீது அழகிய சிறுவர்களை ஏற்றிவைத்துப் பாராட்டுதலை!

சுதமதி : ஆம். அவர்கள் அணிச் சிறப்புக்கள் கண்ணைக் கவருவன. அவர்களது உற்றோர் கூறுமாறு அவர்கள் முருகனே என்னத்தக்காரே! இச் சிறார்கள் இனிது வாழியர்! இனி நாம் அதோ தோன்றும் உவவனத்துட் புகுவோம்.

---

# 4-வது பளிக்கறை புக்க காதை

## காட்சி 1

**இடம் :** *அரச வீதி.*

**காலம் :** *காலை.*

**உறுப்பினர் :** *அரச குமரன், ஏவலர்.*

ஏவலன் : *அரசகுமர ! வணக்கம். நம் பட்டத்து யானை, காலவேகன் களி மயக்கம் உற்றுவிட்டது. மாவுமிகள் நடுங்க, பாய்க் கயிறுகள் அறுபட, பாய் பீறுண்டு ஒலிப்பக் கடலில் எங்கும் ஓடித் திரியும் மரக்கலம்போல் ஓடித் திரிகின்றது !*

மற்றொருவன் : *அரசர் ஏறே ! குத்துக்கோற்காரர் செயலற்று ஓடி விட்டனர். பாகர்கள் அகன்றொழிந்தனர். அரசர் பெருந்தெரு, தேரோடும் வீதி, கடைவீதி முதலாயவற்றில் பெருங் கலக்கம். நகரில் எவ்விடத்தும் தங்கிற்றிலது. ஒருநெறிப்பட்டிலது. மேலே பருந்துக் கூட்டம். கீழே பாகர், பறையடிப்போர், எளியர் இவர்கள் அலறுதல். பெரிய கரிய மலை வருவதுபோல வருகின்றது. அரசகுமர ! என் செய்வோம் ! (அடி வீழ்தல்)*

அரசகுமாரன் : *ஏவலர்காள் ! எழுமின்! அஞ்சாதீர்கள்! நகர மாந்தர்க்குக் கூறிக் கவலையை அகற்றுமின். யான் இதோ இக் கடும் பரியினைச் செலுத்தி, அக் கடுங்கண் யானையின் கடாத்தினை அடக்கி வருவேன். (உதய குமரன் மறைந்து பின் தேரில் வருதல்)*

## காட்சி 2

**இடம்:** நாடகக் கணிகையர் வீதி.

**காலம்:** காலை.

**உரியோர்:** அரசகுமரன், எட்டி குமரன், ஒருகணிகை.

உதய குமரன்: எட்டி குமர! இதென்ன முகச் சோர்வு! இம்மாதினொடும் கூடிநிற்கும் நீ, முகமலர்ச்சி யொழிந்து இங்ஙனம் மயக்கமுற்றிருப்ப தென்னை ?

எட்டி குமரன்: மன்ன குமர! வணக்கம். நமது நகரில் பரத்தையர் குலத்திற்கு ஒரு மணி விளக்காக விளங்கும் மாதவியையும், அக்குடியின் முடி மணியாக விளங்கும் மணிமேகலை என்னும் அம்மாதவி மகளையும், எம் அரசகுமாரர் அறிந்திருக்கலாம்.

அரச: ஆம்! மணிமேகலை! மணிமேகலை!

எட்டி: அரசகுமர! அம் மணிமேகலை தன் அழகெலாம் ஒழிந்து, செப்பினுள் பொதியப்பெற்ற மலர்போல் மணமும் ஒளியும் இன்றிக் கழிய, மிக்க வாட்டமுடன் பூம்பொழிலுக்குச் செல்வது கண்டேன். கண்டதும் கோவலனுக்கு உற்ற கொடுந்துயர் நினைவிற்கு வந்து வாட்டியது. இனிய யாழ் ஒலியை எழுப்பி வந்த என்னை, இரங்கற்குரிய நரம்பிற்குச் சென்றுளது.

அரச: ஓ, அங்ஙனமா! மணிமேகலை வானளாவிய அப் பூம்பொழில் சென்றனளோ! தன் மலர்த்தாள் வருந்த நடந்து சென்றனளோ! நான் விரைந்து சென்று, அந்த உவ வனத்திலுள்ள மணிமேகலையைக் கண்டு, அவள் துயரை ஒழித்து, மனமகிழ்வளித்து இத்தேரின் மீது ஏற்றி வருவேன். பாக! தேரை அங்கே செலுத்துக.

## காட்சி 3

**இடம்** : உவவனம்.

**காலம்** : பகல்.

**உரியோர்** : சுதமதி, மணிமேகலை, உதயகுமரன்.

சுதமதி : மணிமேகலை ! உலகத்து இருள் எல்லாம் திரண்டு, ஞாயிற்றின் கதிர்களால் வளைப்புண்டு கிடக்கும் காட்சிபோலும் நிழல் செறிந்த இந்த உவவனத்தின் அழகுகளைக் காண்பாயாக. இதோ ஓர் இனிய ஆடரங்கு !

மணிமேகலை : ஆடரங்கா ! அதற்குரிய அரங்கு, ஆடுவோர், காண்போர், இயங்கள்—எங்கே ?

சுதமதி : இதோ இந்த இளமரக்காவே, வெயில் நுழையாததும், குயிலும் நுழைந்தே செல்வதும் ஆகிய நிழல் செறிந்த இளமரக்காவே, ஆடரங்கு ! அதோ அந்த மயில்களே ஆடுவார் ! தும்பி வண்டுகளின் ஒலியே குழலிசை ! மழலை வண்டுகளின் ஒலியே யாழ்இசை ! மந்திகளே, கண்டு மகிழ்வோர் !

மணிமேகலை : ஆம், ஆம் ! என்ன இனிய ஒலிகள் ! என்ன அழகிய காட்சிகள் !

சுதமதி : மணிமேகலை ! இது ஒரு பொது அரங்கு ! இனி அதோ ! அரசன் அமர்ந்து காணும் வேத்தரங்கினைக் காண் ! பளிங்குமணி போன்ற நீரினையுடைய பொய்கையில், பசிய இலைப் பரப்பின் இடையே உயர்ந்து தோன்றும் அழகிய தாமரை மலரினைக் காண்பாயாக ! அதன்மீது அமர்ந்துள்ள அரச அன்னத்தைப் பார்ப்பாயாக !

மணிமேகலை : சுதமதி ! ஆம் ! ஆம். தாமரையும் அன்னமும் மிக்க சிறப்புடைய ஆசனமும், அதன்மீது வீற்றிருக்கும் அரசனும் !

சுதமதி : அதோ கரையில் நின்று ஆடும் ஒப்பற்ற மயிலினைக் காணாய் ! அதுவே ஆடும் விறலி ! மேலேயுள்ள ஒரு கிளையில் ஒரு குயில் அமர்ந்து பாடுவது காணாய் ! அதோ அந்தச் சம்பங் கோழிச்சேவலினது குரலாகிய முழவொலியைக் கேளாய் !

மணிமேகலை : ஆம் ! சுதமதி! எல்லாம் இனிது அமைந்து தனிச் சிறப்புடன் கூடிய வேத்தரங்கேயாக மிளிர்கின்ற காட்சி நன்று நன்று !

சுதமதி : மணிமேகலை ! இதோ இத்தாமரை மலரினைப் பார் ! இதன்கண், அந்தத் தாழை மடலினின்றும் உதிர்ந்த வெள்ளிய மகரந்தப்பொடிகள் விழுந்து சிவந்த ஒளியினை மறைத்திட்டதைப்பார்! இந்த மலர், தோழி! நீ தேரோடு வீதியில் வருங்கால், அவ் வீதியினின்று எழுந்த துகள் நின் முகத்திற்பட்டு ஒளியினை மறைத்திருந்ததை ஒக்கின்றது ! (மணிமேகலை-மீண்டும் முகத்தைக் கழுவிக்கொள்ளல்.) மணிமேகலை! அதோ அத்தாமரை மலர்களிலே செங்கயல்கள் பாய்ந்து பிறழ்வனவற்றைப் பார் ! அவற்றைச் சிச்சிலிப் பறவைகள் இரையாகக் கோடற்குப் பாய்வதையும், அம் மீன்கள் விரைந்து அகன்று நீரிற் பாய்ந்திட, அப்பறவைகள் இரையை இழந்து வருந்தி மீள்வதையும் பார் ! இக்காட்சியினை இங்கும் காண்கின்றோம். தோழி ! நின் அழகிய கண்களை மலரெனக் கருதி வண்டினம் இடையறாது வந்து வீழ்கின்றன! நின் செங்கைகள் அச்

சிச்சிலிப் பறவைகள்போல அவற்றின்மீது பாய்ந்து அவை அகன்றிடலும் மீள்கின்றன !

சுதமதி : மணிமேகலை ! என்ன ஏதோ தேர் ஒலி ! ஓ, அதோ ! அரண்மனைத் தேர் போல்வது ஒன்று!

மணிமேகலை : தோழி! இவ்வூர் அரசகுமரன், உதய குமரன் என்பால் உள்ளம் வைத்துளான் என்பது, சித்திராபதி வயந்தமாலைக்கு உரைக்க, அவள் என் தாய் மாதவிக் குரைக்க, அதுபோது யான் கேட்டுக் கொண்டிருந்தேன். சுதமதி! இவ்வொலி அவன் தேர் ஒலிபோலும். இதற்கு யான் என் செய்குவேன், தோழி!

சுதமதி : அம்மா! என் உள்ளமும் கலங்குகின்றது. என் செய்குவம்! (எண்ணல்) தோழி! நீ விரைந்து வந்து இப்பளிக்கறை மண்டபத்தினுள்ளே புகுந்து ஒளிந்து கொள்வாயாக.

மணிமேகலை : நன்று, அங்ஙனமே புகுகின்றேன்.

சுதமதி : நல்லது, தாழைக் கோத்திடுவாம். நான் இங்கே விலகி நிற்கின்றேன்.

அரசகுமரன் : சுதமதி! இங்கே யாரும் இல்லாத ஒரு பக்கத்தே நீ தனியே நிற்கின்றாய்! நின் வருகையின் திறம் அறிந்தேன். நின் தோழி மணிமேகலை, அழகின் உரு எனலாகும். அவள் ஆடவர் தளர்ச்சி யறியும் தன்மையளோ! அவள் தன் மழலை மொழி முற்றியதோ! முளைத்து எழுந்த பற்கள் முத்துக்களின் நிலையை உற்றனவோ! செங்கயல் நெடுங்கண்கள் காதற் குறிப்பை உணர்ந்து குறிக்கும் செவ்வி வாய்ந்தனவோ! மணிமேகலை, பௌத்த சங்கத்தார் உறையும்

இடத்தில் நீங்கித் தனியே இங்கு வந்துற்றது என்னையோ !

சுதமதி : அரசகுமர ! மிகத் துயருற்றுத் தவத்திறம் பற்றினுள் இம் மணிமேகலை. இவள் திறத்து நின் உள்ளம் இங்ஙனமாயின் யான் என் கூறவல்லேன்? நீயோ இளமை நாணி முதுமை எய்தி, உரை முடிவு காட்டிய உரவோன் வழிவந்த அரசகுமரன் ! நினக்கு யான் கூறலாகும் அறிவுரையும் உளதோ ? ஐயா, அனையதாயினும் யான் ஒன்று கூறுவேன். வென்றி விறலோய், கேட்டி :—

> வினையின் வந்தது வினைக்கு விளைவாயது
> புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது
> மூப்புவிளிவு உடையது தீப்பிணி யிருக்கை.
> பற்றின் பற்றிடம் குற்றக் கொள்கலம்
> புற்றடங்கு அரவில் செற்றச் சேக்கை
> அவலக் கவலை கையாறு அழுங்கல்
> தவலா உள்ளம் தன்பால் உடையது
> மக்கள் யாக்கை இதுவென உணர்வாய்.

அரசகுமரன் : ஓ! அஃதென்னை மின்னொளி ! பவளப் பாவை ! உள்ளங் கவர்ந்த தெள்ளிய அமிழ்தம் திகழ் மணிமேகலை!

# 5-வது மணிமேகலா தெய்வம் வந்து தோன்றிய காதை

## காட்சி 1

**இடம் :** உவவனம், பளிக்கறை.

**காலம் :** பகல் முதல் அந்தி முடிய.

**உரியோர் :** மணிமேகலை, சுதமதி, உதய குமரன், மணிமேகலா தெய்வம்.

உதய குமரன்: ஓ! இஃது என்ன சிறந்த ஓவியம்! இதனை எழுதியோன் உள்ளத்துச் சிறப்புத்தான் என்னையோ? வானவரும் வியக்கும் ஓவியம்! திருவின் செய்யோள் ஆடிய பாவையின் அமைப்பு! மீனக்கொடியுடைய மதனன் உருவினையும் உடன்கொண்டு தோன்றுகின்றதே! இல்லை இல்லை! காவியங் கண்ணி மணிமேகலையே! நன்று! இவ்வொளி மண்டபத்தின் வாயில் யாங்குளதோ? யாங்கும் காணப்பட்டிலதே! சுதமதி! ஈண்டுத் தோன்றும் சித்திரக் கைத்தொழில் எங்கெங்கும் நிறைந்திருத்தல் என்ன வியப்போ? இந்த ஓவியம் நின் இளங்கொடியாகிய மணிமேகலையே யாதல் உணர்ந்தேன். நின் தோழி எவ்வியல்பினளோ!

சுதமதி: முருகவேளை ஒத்த அரச குமர! மணிமேகலை நின் இளமையழகினை முகந்து தன் கண்ணுற் பருகாள்; அவள் ஊழ்தருதவத்தள் ஆயினமையின். அன்றியும் சாபமாகிய அம்பையுடையள். காமனை வென்ற மெய்ம்மையை உடையவள்.

உதய குமரன்: நங்காய்! சுதமதி! நின் கூற்றினை உணர்ந்தேன். செழும்புனல் மிக்கவழி அதற்குச் சிறையுமுண்டோ? பேதாய்! காமம் மிக்க விடத்து அதற்கு நிறையுமுண்டோ? அவள் எத்தகைய தவம், சரம், மெய்ம்மைகளை உடையளாயினும் என்னை! பின்னர் நிகழ்வதனைக் காண்போம். அழகிய சிவந்த சாயலையுடையாய்! இப்பெரிய நகரின்கண் உள்ள பல்லோரும் நீ இந்நகர்ச் சமண்பள்ளியில் ஒரு விஞ்சையனால் இடப்பட்ட ஒரு பெண் எனக் கூறுவரன்றே? அங்ஙனமாக நீ அம்முனிவர் வாழ்விடத்தை நீங்கிப் பௌத்த சங்கத்தைச் சேர்ந்த இம்மணிமேகலையுடன் இங்கு எய்திய காரணம் என்னையோ?

சுதமதி: வார்கழல் வேந்தே! வாழ்க நின் கண்ணி. நின் உள்ளம் தீ நெறிப் படராது செவ்வழிச் செல்வதாக. இவளொடு யான் இங்கு எய்திய காரணம் கேட்டருள்வாயாக. என் தந்தை உறுதிமிக்க உள்ளமுடைய ஓர் அந்தணர். விரதநோன்பினர். முத்தீயோம்புவோர். என் தாய் மிக முன்னரே வீடு பேறுற்றனள். முன் செய்த தீவினையின் பயனால், யான் மாருத வேகன் எனும் ஒரு விஞ்சையன் வயத்தன் ஆயினேன். அவன் இந்நகரில் என்னை விட்டுப்பிரிந்தொழிந்தனன். என் தந்தை குமரிக் கடலில் நீராடுதற்குச் செல்லும் மக்களோடு கூடிச் செல்பவர், என்னை ஆங்காங்குத் தேடிவருமிடத்துக் காவிரியின் சங்கமத்தே நீராடுங்கால் என்னைக்கண்டு, என்வரலாறு உணர்ந்து, மிக இரங்கினர். யான் அந்தணர்களுடன் இருத்தற்கும் பொருந்தாதவளாயினும், என்பால் வைத்த பேரன்பினால் இரந்துண்டு வாழ்தலைக் கைக்கொண்டு, இவ்வூரின்

கண் தங்கியிருப்பாராயினர். எங்கள் தீவினை இன்னும் பெருகவே, ஒருநாள், ஒரு புனிற்று என் தந்தையின் வயிற்றைக் கிழித்துக் குடரை வெளிப்படுத்தியது. அக் குடரினைக் கையிலேந்திப், பண்டு யானிருந்த இடமாகிய சமணப் பள்ளியிற் புகுந்து, அடைக்கலம் வேண்ட, அன்னார், எம்மை வெறுத்துப் புறம்போக்கி விட்டனர். பின்னர், யாங்கள் கண்ணிறைந்த நீரேமாகிப் பாது காப்பாரைத் தேடித் தெருக்கள்தோறும், செல்லாநிற்க ஆங்கோர் புத்த முனிவர், சங்கதருமர் எனும் பெயரி னரை எங்கள் நல்வினையாற் கண்டனம்.

உதய குமரன்: சங்கதருமரா! தவமுனியா? அவர் எத் தகையர்? எங்குள்ளவர்?

சுதமதி: அன்னோர் பிச்சைப் பாத்திரம் கையிற்கொண் டவர். அது கொண்டு தாம் செல்லும் நண்பகலிலும் குளிர்ந்த முகத்தினையுடையோராய்க் காணப் பெறு வர். பொன் போல் விளங்கும் அழகிய ஆடையினர். அவரது பேரருளினை யான் எங்ஙனம் புகல்வேன்!

உதய குமரன்: சுதமதி! அம்முனிவர் செய்த பேரருள் யாதோ?

சுதமதி: அம்முனிவர் எம்மை அருள்கூர நோக்கி, என் னுற்றனிரோ! என வினவியருளி, எமது நெஞ்சகத் தைக் குளிர்ப்பித்துத் தம் கைப்பாத்திரத்தை எம் கைத் தந்து விட்டு, அம்மம்ம! பின்னர் அவர் செய்த பேர் அருட்செயலை என்னென்பது! எந்தையைத் தழுவி யெடுத்துச் சுமந்துசென்று, புத்தமுனிவர்கள் உறை விடத்தை யடைந்து, வேண்டுவன செய்து எந்தையின் இறப்புத் துன்பத்தை நீக்கியருளினர். அம்முனிவர் எமக்கு அருளியபடியே யான் ஒழுகி வருகின்றேன்.

எங்கோன் இயல்குணன் ஏதமில் குணப்பொருள்
உலக நோன்பிற் பலகதி யுணர்ந்து
தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்
இன்பச் செவ்வி மன்பதை யெய்த
அருளறம்பூண்ட ஒருபெரும் பூட்கையின்
அறக்கதிர் ஆழி திறப்பட உருட்டிக்
காமற் கடந்த வாமன் பாதம்
தகைபா ராட்டுதல் அல்லது யாவதும்
மிகைநா இல்லேன் வேந்தே வாழ்க!"

உதய குமரன் : சுதமதி! நின் வரலாற்றினை உணர்ந்தேன்! நின் உள்ளத் துணர்வை உணர்ந்தேன். இவ் அழகிய மணிமேகலையினை, யான், சித்திராபதியாற் சேர்தலும் உண்டு. நன்று, நான் சென்று வருகின்றேன்.

(சென்று மறைதல்)

மணிமேகலை : (வெளிவந்து) சுதமதி! என் உள்ளத்துப் பான்மையை யான் என்னென்று கூறுவேன்!. இங்கு வந்த அரச குமரன், இவள் கற்பில்லாதவள், தவ உணர்ச்சியில்லாதவள், தன் மரபிற்குரிய காவல் இல்லாதவள், பொருள் விலையாட்டி என்றெல்லாம் என்னை இகழ்ந்துரைத்து நயந்தவன் அன்றோ! அங்ஙனமாகவும், என் உள்ளம், ஏதும் எண்ணாது, அவன் பின்னே செல்லத் துணிந்ததே! அன்னையே! இதுதான் காமத்தின் இயல்புபோலும். காமத்தியல்பு இதுவே யாமாயின், இதன் திறம் ஒழிவதாக! (இங்கு மணிமேகலா தெய்வம் அந்நகரத்துப் பெண்ணொருத்தி போல வந்து தோன்றல்.)

சுதமதி : மணிமேகலை! இதோ இங்கு வருகின்ற அம்மை யாவரோ! ஆம், இந்நகரத்துள்ள ஒரு பெண். ஓ! மணியறைப் பீடிகையை வலம் வருகின்றார். ஓ!

இஃதென்னையோ! ஒரு பேரொளிப்பிழம்பு விசும்பில் உயர்கின்றதே! ஏதோ தெய்வம்போலும். இறை வணக்கம் கூறுகின்றதே! கேட்போம்.

மணிமேகலா தெய்வம் :

*புலவன் தீர்த்தன் புண்ணியன் புராணன்*
*உலக நோன்பின் உயர்ந்தோய் என்கோ!*
*குற்றங் கெடுத்தோய் செற்றம் செறுத்தோய்*
*முற்ற உணர்ந்த முதல்வா என்கோ!*
*காமற் கடந்தோய் ஏமம் ஆயோய்*
*தீநெறிக் கடும்பகை கடிந்தோய் என்கோ!*
*ஆயிர ஆரத்து ஆழியன் திருந்தடி*
*நாவா யிரமிலேன் ஏத்துவ தெவனோ!*

(மறைதல்)

மணிமேகலை : அம்மா! சுதமதி! ஏதோ தெய்வம் போலும், அந்த உருவம் மறைந்திட்டதே!

சுதமதி : ஆம்! மணிமேகலை! இவ்வனம் புத்ததேவன் அருள் ஆணையாற் காக்கப்படுவதாகலின் நாம் எத்தகைய காட்சிக்கும் அஞ்சுதற்கில்லேம்.

மணிமேகலை : சுதமதி! உதயகுமரன் கூறிச் சென்றதைக் கேட்டுக் கலங்கி நாம் இங்கு அயர்ந்திருக்கின்றோம். நமது வருகையை எதிர்நோக்கி என் தாய் முதலியோர் வருந்தாநிற்பர். அந்திமாலை வருகின்றது. தாழ்த்திருந்ததிலும் ஒரு நன்மை யுளதாயிற்று. இந்த அம்மை கூறிய அருமை இறைவணக்க அமிழ்தினை நாம் எய்தினோம்.

சுதமதி : நன்று. நன்று. இந்த அந்தியின் சிறப்பினை நாம் நோக்குவோமாக. நமது இந்தப் புகார் நகரமாகிய பூங்கொடிமாதின் அந்தி நலச் சிறப்பு அணி முதலிய

வற்றைக் காண்போம். ஆம், அகழிதான் அவள் திரு வடி! அகழி மலர்களே அவள் சிலம்பு! புட்களின் ஒலியே அச்சிலம்பின் ஒலி! ஒளி வீசும் மணிகளால் ஆகிய மேகலை, பல்வகை உறுப்புக்களையுடைய அழகிய மதிலே! ஆம், ஆம்: அவள் தோள்கள் வாயிலின் பக்கத்தே அமைந்த பெரிய தோரண கம்பங்களே! அரசனுக்கு அமைந்த பெரிய கோயில் அவள்தன் திருமுகமாகும். இக்கோயில் எத்தனையோ ஊழிக் காலமாகச் சிறந்து விளங்கி நிற்பதன்றோ! மணிமேகலை! அத்திருமுகத்தின் தோடுகளைக் காண். அதோ கீழ்த் திசையில் ஒளிர்ந்து எழும் முழுமதியமே, அழகிய வெண்பொற்றோடு! அதோ மேற்றிசையில் நிறைந்து அமைதியுறும் செஞ்ஞாயிறே, செம்பொற்றோடாகும்.

மணிமேகலை : சுதமதி! நினது நுண்ணறிவும், பொருளின் இயற்கையமைப்பை உற்று நோக்கி உருவகப் படுத்தும் அணி நல ஆற்றலும் போற்றத்தக்கன! இந்த அந்தியின் இயற்கை அழகுகளை உற்று நோக்கிய எனக்கு, இன்பமும் துன்பமும் கலந்த காட்சிகளின் உணர்ச்சி எழுகின்றது. அதோ! அன்னப்பேடை யொன்று அயர்ந்து தங்கியிருக்கும் தாமரை இதழ் குவிந்திட, அதனுட் பொதிந்த அப் பேடையை அதன் சேவல் அன்னம் பற்றி மேலெழுந்து, தெங்கின்மடலில் அமர்தலைக் காண்! அங்கே! அன்றிலின் பேடு ஒன்று, தன் சேவற்கு ஞாயிறு சென்று மறைதலை மெல்லிய, குரலாற் கூறி அழைத்தலைக்காண்! குவளை மலர்களை மேய்ந்துவரும் பசுக்கள், கன்றுகளை நினைந்து பால் சொரிந்து கொண்டே வந்து, கன்றுகளை அழைக்கும் குரலவாய், மன்றுகளில் நுழைதலைக் காண்பாயாக! சுதமதி! உலகத் தோற்றமே, பொதுவாக நோக்க

காதலன், காதலி, பெற்றோர் இவர்கள் ஒருவர் ஒருவர் பாற் கொள்ளும் அன்பின் உருவமே யாகின்றதன்றோ! அதோ! அந்தணர் தம் அந்திக் கடமையாம் செந்தீ வளர்த்தல்! அதோ! கற்புடை மங்கையர் விளக் கேற்றித் தம் சுற்றத்தின் நல்வாழ்வு வேண்டி நிற்றல்! அங்கே யாழ்ஒலி! அப்பால் வேய்ங்குழல் ஒலி! இங்ஙனமெல்லாம் மகிழ்ச்சி நிகழ்ச்சிகள் ஒருபுறம்! இனி, சுதமதி, மகிழ்வும் துயரும் பகலும், இரவும் என அடுத்து அடுத்து இணைந்து நிற்பன அன்றோ! போர்க் களத்தில் கணவனை இழந்து தமர் அகம் புகும் ஒரு தனி மகளை இங்கே காண்கின்றோம். அவளே, அந்தி என்பாள்! உடலெலாம் அழகிய நிறம் மாறியது! தன் நாயகனாகிய ஞாயிற்றினை இழந்து வந்து சேர்ந் தனள்!

சுதமதி: மணிமேகலை! உன் கவிப்புல மாட்சி மிகவும் பாராட்டற்குரியது!

---

# 6-வது சக்கரவாளக் கோட்டம் உரைத்த காதை

**காட்சி:** மேற்காட்சியின் தொடர்ச்சியே.

சுதமதி: மணிமேகலை! அந்திப்பொழுது அகன்றது. மாதவி முதலியோர் எத்தகைய துயர் உறுகின்றனரோ? வருவோம், வருவோம் என்று எதிர் நோக்கி யிருத்த லின், இங்கே தேடி வந்திலர். அரசகுமரன் இங்கு வந்ததும், நம்முடன் உரையாடிச் சென்றதும், அது

பற்றி நாம் மயங்கி யிருப்பதும் அவர்கள் எங்ஙனம் அறிவார்கள்? நாம் இதுபோதும் வெளிச் செல்லல் நன்றன்று. ஆகலின், இவ்விரவினை இங்கேயிருந்து கழிக்க வேண்டியதுதான் போலும். பகவனது அரு ளால் இன்று நல்ல நிலவு! நல்ல காட்சிகள்!

மணிமேகலை : ஆம், சுதமதி, நாம் இக்காட்சிகளில் நம் கருத்தினைச் செலுத்தி, நம் காலத்தினைக் கழிப்போம்! அம்மா! சுதமதி! அம்மதியினிடத்துள்ள ஒரு சிறு களங்கம் யாவர்க்கும் நன்கு விளங்கித் தோன்று தலைப் பார்! மிகப் பெரியோரிடத்து ஒரு சிறிய தவறு தோன்றினும், அது யாவர்க்கும் நன்கு புலனாவதனைக் காட்டுகின்றது இது!

சுதமதி : ஆம். மணிமேகலை! சிறந்ததோர் உவமை! மற் றொன்று காண்! அம்மதி தெய்வத்தன்மையுள்ள ஒரு பாற்குடம். அதினின்று இடையறாது ஒழுகிப் பெருகி உலகெலாம் பரவிய பால் வெள்ளமே, இந்த இனிய நிலவு!

மணிமேகலை : ஆம். ஆம். நல்ல மகிழ்ச்சி யளிக்கும் நிலாத் தோற்றம். அதோ அந்த அம்மையார் மீண்டும் தோன்றுகின்றாரே! நம்மை நோக்கி வருகின்றாரே! நாம் விசும்பிலெழுந்திடக் கண்ட ஒளி உருவக் காட்சி, ஏதோ வேறு தெய்வக் காட்சிபோலும். இந்த அம்மை இந்நகரத்துப் பெண்களுள் ஒருவர் போலும். இதோ வந்து விட்டார். அம்மையே! வருக! வருக! வணக்கம்.

மணிமேகலாதெய்வம் : நீங்கள் இந்நேரத்து இங்குத் தங்கியிருப்பதன் காரணம் என்னையோ!

சுதமதி : அம்மா! அந்நங்கை இந்நகரத்து மாதவி என்பாளின் மகள் மணிமேகலை. இவள் தந்தை கோவலனுர்க்கு மதுரையில் கொடுந்துயர் எய்தியது. அதுகேட்ட இவள் தாயும் இவளும் அருந்துயரில் ஆழ்ந்து, தவநெறி யொழுகும் உள்ளமுடையோர் ஆயினர். இன்று காலை நாங்கள் மலர் கொய்ய இவ் வனத்திற்கு வந்தோம். அம்மா! என் கூறுவேன். இங்கு வந்த இந்நகர் அரசகுமரன் உதயகுமரன் என் பான், இம்மணிமேகலையின்பால் தான் கொண்டுள்ள காதற்குறிப்பை வெளியிட்டு, இவளது தவ ஒழுக்கம் பற்றி யான் என் கூறியும் செவிக் கொள்ளாது, எங் ஙனமும் இவளை அடைவேன் எனக் கூறிச் சென்ற னன். அவ்வுரைகேட்டு மயங்கிய நாங்கள், இங்கேயே அமர்ந்து இனி என் செய்வது எனச் சிந்தித்திருக் கின்ருேம்.

மணிமேகலா தெய்வம் : சுதமதி! அவ்வரசிளங்குமரன் இம்மணிமேகலைமேல் தணியாக் காதல் கொண்டுளான். இது தவத்தோர் உறையும் பொழிலென்று அஞ்சி இங்குநின்றும் நீங்கினனுயினும் உங்களை இதன் புறத்தே தெருவிற் காண்பனுயின், இவளைக் கைப்பற் றுதலினின்றும் நீங்கான். ஆகவே நீங்கள் வெளியே தெருக்கட்குச் செல்லாதீர்கள். இவ்வனத்து மதிலின் மேற்றிசையில் ஒரு சிறிய வாயில் உளது. அதன் வழியே சென்ருல், அப்பாலுள்ளது சக்கரவாளக் கோட்டம் என்பது. அது மிக்க தவமுனிவர்கள் விரும்பி உறையும் இடம். அங்கே நீவிர் இவ் விரவினைக் கழிப்பின், கொடிய துன்பம் ஏதும் உண்டாகாது. ஆகலின் நீவிர் அங்கே செல்வீராக.

சுதமதி : அம்மா ! நீங்கள் கூறும் இடத்தை இந்நகரினுள்ளார் எல்லோரும் சுடுகாட்டுக் கோட்டம் என்று உரைப்பரே ! என்னை இந்நிலையாக்கிய வஞ்ச விஞ்ஞையன் மாருதவேகன் என்பான் ஒருவன் சக்கரவாளக் கோட்டம் என்று கூறியது உண்டு. இப்போது நீங்களும், அவ்வாறு கூறுகின்றீர்கள். அதன் காரணம் என்னையோ?

மணிமேகலா தெய்வம்: நல்லது. சுதமதி! அதன் காரணம் அறியக் கூறுவேன். நேரம் மிகினும் அமைந்து கேட்பீராக. இப்பெரிய நகர் உண்டாகிய காலத்தே உண்டாகிய சுடுகாடு ஒன்று இந்த உவவனத்தை அடுத்துள்ளது உண்மைதான். அதற்கு நான்கு வாயில்கள் உள. அவற்றுள் ஒன்று, தங்கள் விமானங்களை விசும்பின்கண்ணே நிறுத்தி இறங்கிவரும் விண்ணவர் நுழைந்து செல்லும் வாயில். மற்றொன்று, நெல், கரும்பு, பொய்கை, பொழில் இவற்றை ஓவியப்படுத்திய வாயில். இனி ஒன்று, வெண்சுதை பூசிய மாடத்தில் ஓவிய வடிவங்கள் எவையும் எழுதப்பெறாத வெள்ளிய இடத்தினையுடையது. நான்காவது, மடித்த வாய், கடுத்த நோக்கம், தொடுத்த பாசம், பிடித்த சூலம், நீண்ட தோற்றங்களையுடைய ஒரு பூத வடிவம் நிற்கின்ற வாயில். அவ்விடம் காவலுடைய மதில் சூழ்ந்தது. பேய்கள் நடமாடுவது.

சுதமதி : அம்மணி ! நீவிர் கூறுவதைக் கேட்கும்போதே வியப்பும் அச்சமும் தோன்றுகின்றன. யாங்கள் அதனைக் கண்டதே இல்லை. அங்குள்ள அரிய காட்சிகளையெல்லாம் நீங்கள் அறிவீர்கள்போலும். அருள்கூர்ந்து கூறுவீர்களாக !

மணிமேகலா தெய்வம்: நங்கைமீர்! கேளுங்கள், கூறுகின் றேன். அங்கே துர்க்கையின் பெரிய கோயில் ஒன்று உளது. அதன் முன்றிலில் பெரிய பலிபீடம். அதனைச் சுற்றி நீண்டுதழைத்த மரங்கள். அம்மரங்களிலெல்லாம் அஞ்சாத உள்ளத்தராய் உயிர்ப்பலி கொடுத்த வீரர்க ளின் தலைகள். இனி நால்வேறு வருணங்களிலும் சிறந் தோராய கற்புடைமகளிர், அருந்தவத்தோர், அரசர் முதலாய சிறப்புடையோரை அடக்கம் செய்த இடத்து வருண வேறுபாடுதோன்ற அமைத்த பெருநிலக் கோட்டங்கள் பல. கடவுட்குப் பலியிடற்குரிய தூண் கள். கல்லாலாகிய திண்ணைகள். பல வழிகளும் சேரும் சந்திகள். காவலர் கண்படுக்கும் குடில்கள். கொடியும்தோரணமும் போலும் புகை யொழுங்குகள். தீக்கொழுந்துகள். பந்தர்கள். இத்தகைய காட்சிகள் மிகப் பல! சுடுதல், வாளா வெளியில் இடுதல், குழியில் இடுதல், பள்ளங்களில் இட்டு அடைத்தல், தாழியிற் கவித்தல், இங்ஙனம் பலவகைகள். பிணங்களுக்கு ஈமக் கடன் செய்யும் நெறிகள் பல. இவற்றிற்காக வருவோர் பெயர்வோர்களின் ஒலியாகும் நெய்தற் பறையொலி, இறந்த துறவியர்க்குச் செய்யும் துதி முழக்கம், இல்லறத் தோர் பால் எழும் அழுகை ஒலி, நரிகள், பேராந்தை கள், கோட்டான், ஆண்டலைப் பறவை எனும் இவற் றின் ஒலிகள், கடலொலியைப் போன்று எழும் இன் னுத ஒலிகள், எங்கும் முழங்கும்! தான்றி முதலிய ஓங்கிய மரங்கள், சூரை கள்ளி முதலிய அடர்ந்த செடி கள் சூழ்ந்ததும், மிக்க பசியுடைய பேய்கள் திரண்டி ருப்பதுமாகிய வாகைமன்றம், ஊனைத் தின்று உள்ளம் மகிழ்ந்து பறவைகள் தங்கி ஒலிக்கும் விளா மன்றம், காபாலிகர் அட்டுண்ணும் வன்னிமன்றம், விரதிகள்

உடைந்த தலைகளைத் தொகுத்துப் பெரியமாலைகள் செய்யும் இலந்தைமன்றம், பிணந்தின்னும் மாக்கள் விருந்து செய்து மகிழும் வெள்ளிடை மன்றம் என இத்தகைய மன்றங்கள் பல. இம்மன்றங்களில் எல்லாம் தீப்பெய்த பானை, பண்ணியம் இட்ட கலம், பாடை துணிகள், பாடை மாலைகள், உடைந்த குடம், நெல் பொரி, பலி அரிசி ஆகிய ஈமத்திற்குரிய பொருள்கள் பாழிடங்கள் எங்கும் சிதறிப் பரந்து கிடக்கும்!

நங்கைமீர்!

தவத்துறை மாக்கள், மிகப் பெரும் செல்வர்,
ஈற்றிளம் பெண்டிர், ஆற்றுப் பாலகர்,
முதியோர் என்னான் இளையோர் என்னான்
கொடுந்தொழிலாளன் கொன்றனன் குவிப்பவிவ்
வழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்
கழிபெருஞ் செல்வக் கள்ளாட்டயர்ந்து
மிக்க நல்லறம விரும்பாது வாழும்
மக்களிற் சிறந்த மடவார் உண்டோ!

மணிமேகலை: நீங்கள் கூறும் இடம் பேய்கள் முதலியன இருப்பதாகலின், அறியாது செல்வோர்க்குத் துன்பம் விளைவிப்பதாகுமே!

மணிமேகலா தெய்வம்: ஆம்! மணிமேகலை! அங்ஙனம் சென்றான் ஒருவனுக்கு எய்திய தீங்கும் அதுபற்றியபின் னைய நிகழ்ச்சிகளும் உங்கட்கு உரைத்தற்குரியன; நேர மாயினும் ஆக. யான் கூறுவன யாவும் பிற்பயன் அளிப் பனவாகும். இந்நகரில் மிக முதிர்ந்த கணவனும் மனைவி யும் உள்ள ஓர் அந்தணர்குடி இருந்தது. அவர் இருவர்க் கும் கண்ணொளி யிலது. அவர்கட்குச்சார்ங்கலன் எனும் சிறுவன் இருந்தான். அவன் இச்சுடுகாட்டுப்பக்கம்

அறியாது தனியே சென்றனன். அங்கே பிணங்கள் தின்னும் ஒரு பேய்மகள், நரி யொலி, கழுகின் ஒலி, நாயின் ஒலி, பருந்தின் ஒலி இவற்றை மத்தள முழக்கமாகக் கொண்டு, சாம்பற்குவையாய அரங்கில், ஒரு பெண் பிணத்தின் தலையைக் கையிலேந்தி, அதன் கண்களைத் தோண்டி உண்டு, மிக்க மகிழ்ச்சியுடன் ஆடுங் கூத்தினைக் கண்டான். கண்டு அஞ்சினான். அப்பேயால் தீண்டப்பெற்றான். அவன், "அன்னையே! ஒரு பேய் என் உயிரைப் பற்றிக்கொண்டது" என்று அலறி ஓடித் தன் அன்னையின் முன்னே வீழ்ந்து உயிர் துறந்தனன்.

சுதமதி : அம்மா! அந்தப் பார்ப்பனியின் தீவினைகளை என்னென்பது? கணவனுக்கும் கண்ணில்லை. தனக்கும் கண்ணில்லை. இப்போது தங்களைப் போற்ற வல்ல ஒரு மகனையும் இழந்தாள். அந்தோ! பின்னர் அவள் நிலை என்ன ஆயிற்றோ?

மணிமேகலா தெய்வம் : கோதமை யென்பாள் தன்மகனை எடுத்து மார்பில் ஏந்திக்கொண்டு இக்கோட்டத்திற்கு வந்து, 'சம்பாபதி யெனும் தாயே! இக்கோட்டத்திலுள்ள நீர்த்துறைகளையும் மரங்களையும் மற்றுமுள்ள தங்குமிடங்களையும் கோயில்களையும் காத்துவரும் தெய்வமே! யான் போற்றுவார் யாருமற்ற ஏழை யென்பதைக் கருதாமல், என் மகனது அரிய உயிரை உண்டது அணங்கோ! பேயோ, நான் அறிந்திலேன். எவர்க்கும் எவ்விதத் தீங்கும் இன்றிக் காக்கும் நீ என் மகனுயிரைக் காத்திலை! அது தகுதியாமோ?' என்று மதிற்புறத்து வாயிலினின்று தன் கொடுந்துயரைக் கூறி முறையிட்டாள்.

சம்பாபதி அங்கே தோன்றி, 'இந்த இருளில் பேய்கள் நடமாடும் இவ்விடத்தே யிருந்து, நின் கொடிய துயரி னைக் கூறி என்னை அழைக்கின்ற அம்மையே! நீ யார்? உனக்கு உற்ற துயர் யாது?' என்று வினவினள். அப் பார்ப்பனி, "தேவியே! யான் யாருமற்றவள். இந்த ஈமப்புறங்காட்டின் வழியே வந்த என் அறியாப் பால கனை, அணங்கோ, பேயோ, ஆருயிர் உண்டது. அந்தோ! உறங்குவான் போலக் கிடக்கும் இத்தீவினைக் காட்சியைக் காண்பாயாக" என்று கூறி அழுது அரற்றினள்.

சுதமதி: அம்மையே! தேவியின் அருளால் அந்தணச் சிறுவன் ஆருயிர் பெற்றிருப்பன். தாயும் துயர் தவிர்ந் திருப்பாள். அந்நிகழ்ச்சியைக் கேட்டு மகிழ என் உள்ளம் விரைகின்றது.

மணி-தெய்வம்: அம்மா! பிந்திய நிகழ்ச்சியைக் கூற என் மனம் வருந்துகின்றது. என் செய்வது! அத் தெய்வம் அப்பார்ப்பனியை நோக்கி "அம்மா, அணங் கும் பேயும் ஆருயிர் உண்ணு; ஊழ்வினையே வந்து இவனுயிரை உண்டு கழிந்தது! இவனது அறியாச் செயல் அதற்கு ஏது வாயிற்று! அம்மா! நின் பெருந் துன்பத்தினை நீ நீக்குவாயாக" எனக் கூறியது. அந் தப் பெண் மீண்டும் "தேவி! அங்ஙனம் கூறியருளாது என் உயிர் கொண்டு என் மகனுயிரைத் தந்தருள் வாயாக. கண்ணில்லாத என் கணவனை இவன் காப் பாற்றுவான்" என்று வேண்டினள். அது கேட்ட அத் தெய்வம், மிக இரங்கி, அம்மா, ஓர் உயிர் உடலை விட்டு நீங்கின், தான் செய்த வினைக்கேற்ப வேறு பிறப்பினை அடைந்துவிடும். அங்ஙனம் வேறு பிறப்படைந்த நின் மகன் உயிரைக்கொண்டு வந்து நின் அரிய துன்பத்தை

நீக்குதல் இயல்வதன்று. அங்ஙனம் சென்ற உயிரை மீட்கலாம் என்பது கொடுந்தொழில் மாக்களது அவலப்படிற்றுரையாகும். மாதே! உலக மன்னர்க்கு உயிர்க்கு உயிர் ஈவோர் இலரா? அங்ஙனமாகவும் இந்த ஈமத்தில், அரசர்கட்கு அமைத்த கோட்டம் எத்துணை ஆயிரம் பார்! நின் எண்ணத்தினை, நிரயம் தரும் கொடு மொழிகளை நீ அறவே ஒழிப்பாயாக என்றது. அது கேட்ட பார்ப்பனி தேவி: தேவி! நான்மறைகள் தேவர்கள் எவ்வரமும் தரவல்லவர் எனக் கூறுமே. மாபெருந் தெய்வமாகிய நீ அருளாவிடின் யான் இங்கு என் உயிரையும் விடற்பாலனே என்றனள். சம்பாபதி: அம்மா! இறைவன் உயிர்தரின் அல்லது, இச்சக்கர வாளக் கோட்டத்திலுள்ள எண்ணிறந்த தேவர்களுள் எவராவது தர வல்லராயின், யானும் தருவேன். இங்கு என் ஆற்றலைநீ காண்பாயாக. இதோகாண். யான்எண்ணி வேண்டியபடி உலகில் எங்கெங்கும் உள்ள எல்லாத் தேவர்களும் வந்து கூடி விட்டனர்; அவர்களைக் கேட் போம். தெய்வங்களே! வருக! வருக! வணக்கம் பல. இந்தப் பார்ப்பனியின் சிறுவன் உயிர் நீத்தனன். அவன் உயிரை மீட்டுத்தருகவென இவ்வம்மை என்னை வேண்டுகின்றனள். எவரேனும் முன் வந்து அவள் வேண்டுகோளை நிறைவேற்றி யருள்வீர்களாக, என்ற னள். அதுகேட்ட தெய்வங்கள், சம்பாபதி! அச்செயல் இறைவன் ஒருவனாலன்றி எம்மனோர் எவரும் செயற்கு இயலாததொன் றென்பதில் ஐயம் என்னை? என்றன. உடனே, சம்பாபதி, அம்மா! தெய்வங்களின் உரை கேட்டனை யன்றே! உள்ளந்தெளிந்து மேல் உறுவன செய்வாயாக என்றனள். பின் கோதமை ஈமச்சுடலை

யில் மகன் உடலையிட்டுப் பின் தானும் அத்தீயிற் சேர்ந்தனள்.

சுதமதி: அம்மா! இரவில் நெடு நேரங் கழிந்ததாயினும், எய்தற்கரிய உங்கள் காட்சியும், கேட்டறிதற்குரிய பல அரிய உணர்வுகளும் எய்தினோம். அங்குள்ள பிற சிறப்புக்களையும் அருள்வீர்களாக.

மணி-தெய்வம்: அங்கு, மேருமலை, அதனைச் சூழ்ந்திருக்கும் ஏழு குலமலைகள், நால்வகைப் பெரும் தீவுகள், ஈராயிரம் சிறு தீவுகள் இவைகளின் இடவகைகள் அளவு வகைகளை, உரியவாறே சுருக்கி அமைத்துக் காட்டியுள்ள காட்சி மிக வியக்கத்தக்கது. அவ்வவ்விடங்களில் வாழும் உயிர் வகைகளும் இங்கே உரிய இடங்களில் உரிய வடிவங்களுடன் தோன்றும் காட்சி மிக மிக வியக்கத்தக்கது. இத்தகைய சிறப்பினதாகிய இதனை அறிஞர் சக்கரவாளக் கோட்டம் என்பர். ஈமப் புறங்காட்டின் மதிற்புறத்துள்ளது இது ஆகலின், ஏனைய மக்கள் இதனைச் சுடுகாட்டுக் கோட்டம் என்றே கூறுவர்!

(தெய்வம் மறைதல்)

மணிமேகலை: சுதமதி! "மக்கள் வாழ்க்கை இத்தகையதே! என் செய்வது! அம்மா! சுதமதி! தூக்கமா? நன்று துயில்வாயாக.

# 7-வது துயில் எழுப்பிய காதை

## காட்சி 1

**இடம் :** மன்னவன் கோயில்.

**காலம் :** இரவு.

**உரியோர் :** மணிமேகலா தெய்வம், உதயகுமரன்.

**மணி-தெய்வம் :** மணிமேகலையினை, மணிபல்லவத்தீவில் விட்டு வந்ததனை நாம் சுதமதிக்கு உரைத்து அவளைத் தெளிவித்து அனுப்பல் வேண்டும். முதலில் இந்த உதய குமரனுக்கு அறவுரை கூறிப்பார்ப்போம். உதய குமர! துயில் எழுவாயாக.

**உதய குமரன் :** அம்மையே, வணங்குகின்றேன்.

**மணி-தெய்வம் :** அரச குமர! இன்று இரவு நீ துயிலின்றி வருந்தும் காரணம் உணர்வேன். நின் எண்ணம் அற நெறியின தன்று.

மாநிலம் போற்றும் மன்னவன் மகனே!
கோனிலை திரிந்திடிற் கோள்நிலை திரியும்.
கோள்நிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்.
மாரி வறங்கூரின் மன்னுயிர் இல்லை.
மன்னுயி ரெல்லாம் மண்ணாள் வேந்தன்.
தன்னுயிர் என்னும் தகுதியின்றாகும்.

ஆகவே உதய குமர! நீ தவத்திறம் பூண்டோள் தன் மேல் வைத்த அவத்திறம் ஒழிக; அதுவே நற்றிறம்.

**உதய குமரன் :** ஆ. இஃதென்ன மயக்கம்! ஏதோ தெய்வம் தோன்றி அறிவுரை கூறிச் செல்கின்றதே! என்

உள்ள மயக்கம் ஒழிவதாக இல்லையே ! நான் என் செய்வேன்!

காட்சி 2

**இடம்:** உவவனம்.

**காலம்:** இரவு.

**உரியோர்:** சுதமதி, மணிமேகலா தெய்வம்.

மணி-தெய்வம் : சுதமதி! எழுக. எழுக. அஞ்சாதே. நான் மணிமேகலா தெய்வம். இந்திர விழாக் காண்டற்கு வந்தேன். அந்தியில் உங்கள் முன் இந்நகர் மடந்தை யொருத்திபோல வந்து பீடிகையை வலங்கொண்டு உயர்ந்து துதித்ததும், பின்பு உங்கட்குச் சக்கரவாளக் கோட்டத்தின் சிறப்பினைக்கூறி விடுத்ததும் யானே. மணிமேகலைக்குப் புத்ததேவன் அறநெறியிற் செல்லும் பருவமாகிய ஏது நிகழ்ச்சி எய்தியது. ஆதலின் அவளை எத்தகைய வஞ்சனையும் நிகழ்தற்கு இல்லாத மணிபல்லவத்தின்கண் வைத்துளேன்.

சுதமதி : ஆ. தேவியே! வணக்கம். நான் மணிமேகலையை எங்கு எப்போது காண்பேனோ?

மணி-தெய்வம் : சுதமதி! கவலுறேல். மணிமேகலை தனது முற்பிறப்பு வரலாற்றினை நன்கறிந்துகொண்டு, இன்று ஏழாம் நாள் இந்நகர்க்கு வந்துறுவாள். வரினும், தன் பண்டை உருவத்தை மறைத்து வேற்றுருவம் கொண்டு இயலுவாள். ஆயினும், நின்னிடத்தே தன் உண்மை யுருவினை மறையாள். அவள் இந்நகர்க்கு வரும் நாளில் இங்கு நிகழும் புதுமை நிகழ்ச்சிகள் பலவாகும். சுதமதி! மாதவிக்கு, யான் உங்கள்பாற் றோன்றிச் செய்தவைகளையும், அவள் மகள்

மணிமேகலை குற்றமற்ற நன்னெறியிற் சேர்ந்த தன்மையினையும், நீ விளங்கக் கூறுவாயாக. அம்மாதவி முன்பே என் வரலாற்றை அறிவாள்!

சுதமதி: தேவி! அஃதென்னை? வியப்பாக உளதே! யாங்கள் அங்ஙனம் ஏதும் கேட்டறியேமே!

மணி-தெய்வம்: சுதமதி! கோவலன், தன் குலத்தான் ஒருவனை நான் கடலில் காப்பாற்றியதுபற்றி, என்பால் என்றும் நன்றியுடையனுவான். மணிமேகலைக்குப் பெயரிடுங்கால், எங்கள் குலதெய்வமாகிய மணிமேகலா தெய்வத்தின் பெயரை, இக்குழந்தைக்கு இடுக என்று கூறினன். அன்று இரவு, மாதவி கனவில் யான் தோன்றி "மாதே, யானே மணிமேகலா தெய்வம். நீ ஈன்ற மகவு எளியள் அல்லள். மாபெரும் தவக்கொடி. காமன் செயலற, அவனாலாகும் பெரிய துன்பங்களையெல்லாம் அறுக்க வல்லள் என்று உரைத்துளேன். இவற்றையெல்லாம் மாதவிக்கு உரைப்பாயாக. அவள் இனிதுணர்ந்து கொண்டு ஆறுதலுற்றிருப்பாள்.

## காட்சி 3

**இடம்:** சக்கரவாளக் கோட்டத்து உலக வறவி.

**காலம்:** இரவு.

**உரியோர்:** சுதமதி, கந்திற்பாவை.

சுதமதி: அந்தோ! உவவனத்தினை நினைக்க அச்சமாகின்றதே! நடுயாமம், மிக்க இருள். நகரில் அரங்கில் ஆடும் மகளிர் அயர்ந்து ஒழியும் காலம்! குழல், யாழ் முதலிய கருவியொலிகள் எல்லாம் அடங்கியொழியுங் காலம். கணவன்மாரை வெறுத்து ஊடித் துயிலும் மகளிர், அவ்வூடலை யொழித்து அன்புற்றுத் துயிலுங்

காலம்! காவல் மகளிர் குறுநடைப் புதல்வர்கட்குப் பேய் அணுகாதனவெல்லாம் செய்து, துயில்கொள்ளும் காலம். பறவை யொலிகளும, விழா ஒலிகளும் அடங்க, நகரெல்லாம் துயில்கொள்ளும் காலம். யான் தனியே அங்கு அஞ்சி அஞ்சி யிருந்த காலம்! அப்போது அங்கு எழுந்த ஒலிகளை என்னென்பேன்! ஓ! அரசன் கோயிலில் நாழிகைக் கணக்கர் யாமம் தெரிவிக்க எழுப்பிய ஒலி! நிறையழிந்த யானையின் நெடிய கூப்பீடு! ஊர்காப்பாளர் எறிந்த துடியொலி! மரக்கலத் தொழிலோர் களி மயக்கிற் பாடிய ஒலி! புதல்வரைப் பயந்தவர் பேய் அணுகாதனவெல்லாம் செய்து நீராடிய ஒலி! பகைவர் இல்லாதிருக்கவும், எம் அரசன் வெற்றியுறுவானாக வென்று, வீரர்கள் பூத சதுக்கத்துப் பலி இடும் ஆரவாரம்! மந்திரவாதிகள் பலியிடும் ஒலி! இத்தகைய ஒலிகள் இடையறுது ஒலித்தனவே! மணிமேகலா தெய்வம் கூறியது போன்று, நான் இச் சக்கரவாளக் கோட்டத்திற்கு வந்து இங்குத் தங்காவிடின், அங்கெழுந்த அச்சத்தால் மாய்ந்திருப்பேன்! மணிமேகலா தெய்வம் அங்கு அஞ்சுதற்கு உரியன இல்லை என்றபடியே, இங்கு அச்சம் தோன்றிலது. ஓ, இஃதென்ன! ஒரு தெய்வக்காட்சி!

(வணங்கல்)

இந்திற்பாவை: சுதமதி! அஞ்சாதே! நான் இந்தக் கந்தில் அமர்ந்திருக்கும் ஒரு தெய்வம். ஈங்கு வந்துறும் மக்கள் அனைவர்க்கும் அவர் தம் பழவினைகளை எடுத்துரைப்பவள். சுதமதி! உன் பழம்பிறப்பின் வரலாறு கூறுவன். நீ அசோதர நகரத்து அரசன் இரவிவன்மன் மகள். கச்சய நகரத்து அரசன் துச்சயன்

என்பான் மனைவி. நின் பெயர் வீரை என்பது. நின் தமக்கை தாரை என்பாள். தங்கை இலக்குமி என்பாள். நீ களிமயக்கால் யானைமுன் வீழ்ந்திறந்தாய். அது கேட்ட நின் தமக்கையும் உயிர் நீத்தனள். நீ இப் பிறப்பில் சண்பையில் கௌசிகன் மகளாகப் பிறந்து வளர்ந்தனை. மாருதவேகனால் கொணரப்பட்டு இந்நகரில் வதிகின்றாய். நின் தமக்கை தாரையே மாதவி. தங்கை இலக்குமியே மணிமேகலை.

சுதமதி: பாவையே! ஓ இதுவா என் பழம்பிறப்பு வரலாறு! மணிமேகலையின் நிலையினைக் கூறியருள்வாயாக.

கந்திற்பாவை: சுதமதி! கவலாதே. முன் மணிமேகலா தெய்வம் கூறியபடி இன்று ஏழாம் நாளில் இடையிருள் யாமத்தே அவள் இந்நகர்க்கு வருவாள். வருங்காலை, தன் பிறப்போடு நின் பிறப்பு வரலாறுகளும் அறிந்து வருவாள். நீ இங்கு விடியளவும் அஞ்சாதிருந்து ஏகுவாயாக.

(பாவை மறைதல்)

சுதமதி: ஓ. விடியற்காலம்! ஊர்காவலர் ஒலியடக்கம்! மக்கள் விழிப்பு ஆரவாரம்! வலம்புரிச் சங்க ஒலி! புலவர் சங்கத்தின் பொருள் செறிந்த ஒலி முழக்கம்! யானையின் முழக்கம்! கோழியின் கூவல்! புரவிகளின் ஒலி! புட்களின் ஒலி! மகளிர் கைவளைகளின் ஒலி! இவை மிகுகின்றன. இங்ஙனம் விடியற்காலை நிகழ்ச்சிகள் பலவும் தோன்றுகின்றன. ஓ. அதோ கீழ்த் திசையில் ஞாயிற்றின் தோற்றம்! நான் புறப்படுகின்றேன்.

## காட்சி 4

**இடம் :** மலர் மண்டபம்.
**காலம் :** காலை.
**உறுப்பினர் :** சுதமதி, மாதவி.

**சுதமதி:** அம்மா ! மாதவி !

உவவன மருங்கில் உற்றனம் யாங்கள்;
பலவளம் கண்டோர் பளிக்கறை மேவினம்
உதயகுமரன் யாம் உற்றதை யுணர்ந்தே
ஆங்கண் வருதலும் அம்மை! நின் மகளைப்
பளிக்கறைப் படுத்தே பாங்கர் நின்றனன்,
மன்ன குமரநின் மகட்பாற் காதலன்
அறைந்தனன் பலவும், அறிவுறாக் கூறினேன்,
ஆயினும் உள்ளம் அமையான் செல்வோன்
என் வரலாறெலாம் இனிது கேட்டுணர்ந்தோன்
எங்ஙனமேனும் இவள் என் வயத்தள்
என்றுரைத் தேகினன் ஏங்கினம் இருந்துழி
அப்பகல் அகல, அந்திவந் துற்றது
மீப்புகழ் சேர்மணிமேகலா தெய்வம்
அவண்வந் துற்றெமை அருளியங் கிராது
சக்கர வாளகம் சார்மின் னென்றதன்
தனிச்சீர் பலவும் சாற்றி யகன்றது
மற்றியான் துயில்கால் மணிமே கலையினை
மணிபல் லவமாம் மலிசீர்த் தீவில்
வைத்ததன் நலங்களென் மனங்கொள வுரைத்தது :
மாதவி ! தேவியின் மாண்பு நன்குணர்வையாம்
இன்றேழ் நாளில் முன்சேர் பிறப்பின்
வரலாறுணர்ந்து வருவளாம் நின்மகள்
சுக்கரவாளம் சார்ந்ததோர் பாவையால்
எளியேன் முற்பிறப் பேய்ந்தவா றுணர்ந்தேன்
மாதவி கவலல் மலிகநின் தவத்திறம்

மாதவி: சுதமதி! அந்தோ யான் நன்மணியிழந்த நாகம் போன்றனன். (அயர்ந்து வீழ்தல்)

சுதமதி: அந்தோ! உயிரிழந்த யாக்கையாயினன். (அயர்தல்)

---

# 8-வது மணிபல்லவத்துத் துயருற்றது
# 9-வது பீடிகைகண்டு பிறப்புணர்ந்தது

## காட்சி 1

**இடம்** : *மணிபல்லவத் தீவு.*

**காலம்** : *விடியற்காலை.*

**உரியோர்** : *மணிமேகலை.*

மணிமேகலை: ஓ! இஃதென்ன அழகிய இடம்! எங்கெங்கும் முத்துக்கள், பவளங்கள் முதலியவற்றை அலைக்கும் அலைகள் பொருந்திய கடற்கரை. ஆங்காங்கே அல்லி, குவளை மலர்களுடைய பொய்கைக் கரை. வெயில் புகல் இயலாத அழகிய மரப்பந்தர். நிலாப் போன்ற வெள்ளிய மணல். மலர்ப்பள்ளி. இத்தகைய அழகிய இடத்தில் யான் எங்ஙனம் வந்து படுத்துறங்கினேன்! எனது சுற்றத்தை, நகரத்தைக் காணேனே? யான் முன் கண்டறியாதனவே எங்கெங்கும் உள்ளனவே. எங்கும் நீலமாக் கடல். அதோ காலை ஞாயிறு கதிர்விரித்தெழுகின்றது. இஃது உவவனத்தில் ஓரிடமோ, அன்றி வேறிடமோ! சுதமதி! சுதமதி!! நீ யாங்கு ஒளித்தனையோ! என் மனம் நடுக்குறுகின்றதே!

மாற்றம் தாராயோ! ஒரு பகலும் இரவும் நம்மைக் காணாத மாதவி, மயங்கி இரங்குமே! சுதமதி! வாராய்! என்னைவிட்டு எங்கேனும் சென்றொளித்தனையோ? நம்முன் தோன்றிய மடந்தை, விஞ்சை மகள், ஏதேனும் வஞ்சம் செய்தனளோ? மிக்க தனிமையால் அஞ்சுகின்றேனே! திருவே! வாராயோ! அலையில் தவழும் கடற் பறவைகளே! விரிசிறைப் பறவைகளே!! நீங்கள் சுதமதியைக் காணீரோ? கூட்டம் கூட்டமாகப் பகையரசர் இருவர்தம் படைகள் எதிரெதிர் இருத்தல் போல, எதிரெதிர் இருக்கும் பறவைக் கூட்டங்களே! அவைகட்கு அரசு போலிருக்கும் அன்னங்களே! நீர்த்துறைகளே! நீங்கள் சுதமதியைக் காணீர்களோ? என் இனங்களுள் யாரையும் காணேனே! ஆ! மாதவியே! வயந்தமாலையே!! என்செய்வேன்! அந்தோ! என் தந்தையே! என் அன்னை கண்ணகியோடு வேற்று நாடு அடைந்து வெட்டுண்டு மாய்ந்த என் ஐயாவே! உங்கள் புகழுடம்பினையாவது காட்டீரோ? ஆ! என்ன வியப்பு! இதோ ஒரு பீடிகை தோன்றுகின்றது! விரிந்து விளங்கும் ஒளியினையுடையது. பூமியினின்றும் உயர்ந்து மிக அகன்றுள்ளது. பதும சதுரம் மேலெழுந்து விளங்குகின்றது. பூமரங்கள் சூழ வளர்ந்து நறுமலர்களைச் சொரிகின்றன. பறந்துவரும் பறவைகள் இங்கே வந்ததும் விலகிச் செல்கின்றன! ஓ! இங்குப் பொறிக்கப் பெற்றிருக்கும் பொருள்கள் என்ன? ஆ! புத்தனுக்கு அமைந்த ஆசனம் ஆமே! தேவர்கோன் இட்ட மாமணிப் பீடிகையாமே! மக்களின் பழம் பிறப்பு விளங்கும் அறத்தகை ஆசனமாமே! ஓ, இத்தகைய ஆசனத்தைக் காண யான் என்ன நல்வினை செய்தேனோ! மற்றும் இதனைச் சூழப்பொறிக்கப்

பெற்றுள்ளவற்றையும் காண்போம். நாகநாட்டினை ஆளும் மன்னவர் இருவர். இஃது எமது எமது என்று எடுக்க முயன்றும் இயலாதவராயினர். செங்கண் சிவந்து செருப் புரிந்தனர். ஓ! புத்ததேவர் தோன்றி யருளி, இஃது எமது; நீர் செரு ஒழிமின், என உரைத் தருளினதாம். உயர்ந்தோர்கள் துதித்துக்கொண்டிருக் கும் இத்தகைய தெய்வத்தன்மை வாய்ந்த இத்திருப் பீடத்தினைத் தொழுதுகொண் டிருப்பதினும் என்ன பேறு உண்டு! (தொழுது நிற்றல்)

[மணிமேகலை அயர்தல்; தலைமேற் கைகுவித்தல்; அழுதல்; பீடிகையை மும்முறை வலம் வருதல்; நிலத்திற் சேர்ந்து வணங்கி எழுந்து நிற்றல்; முற்பிறப்பினை உணர்ந்து மொழிதல்.]

மாதவனே! காந்தாரமன்னன் அத்திபதியின் மைத்துன னே! பிரமதருமனே! நீ நின் மைத்துனனுகிய மன்ன னிடம் சென்று, வருங்கால நிகழ்ச்சியைக் கூறினையே! இந்த நாவலந்தீவில் இன்றைக்கு ஏழாம் நாளில் பூமி நடுக்குறும். அக்காலத்து இந்நாகநாட்டு நரனூறு யோசனைப் பரப்பும் பாதலத்தில் வீழ்ந்து கேடெய்தும் என்று கூறினையே! அதுகேட்ட மன்னன் தன் நகரத்து மக்களோடும் பசு முதலியவற்றொடும் படைக ளொடும் தன் நகரமாகிய இடவயத்தினை விட்டுப் புறப்பட்டு, வடக்கே அவந்தி நகருக்குச் செல்லுங்கால் இடையில் காயங்கரையாற்றின் கரையிலுள்ள பூஞ் சோலையில் தங்கியிருந்தானே. எம்பெருமானே! நீ கூறியபடியே கூறியநாளில் நகரம் முதலியன கேடுற் றழிந்தனவே. அரசனும் மக்களும் நின் அடிவணங்கி ஏத்தினரே! அந்நிகழ்ச்சிகள் இன்று நடந்தனபோல

எனக்குத் தோன்றுகின்றனவே! எம்பெருமானே! யான் அப்பிறப்பில் அசோதர நகர வேந்தன் இரவிவன் மனுக்கும் அவன் தேவி அமுதபதிக்கும் பிறந்தவள், இலக்குமி என்னும் பெயரினள். அத்திபதி எனும் அரச னுக்கும் நீலபதி எனும் தேவிக்கும் பிறந்த இராகுல னுக்கு மனைவியானவள். பிரமதருமா! யானும் இராகுல னும் நின் அடியினை வணங்குங்கால், நீ இவ்விராகுலன் பதினாறு நாளில் திட்டிவிடம் என்னும் பாம்பால் இறந் திடுவன். அதுபோது நீயும் அவனொடு தீப்புகுவாய் என்றனையே! மற்றும் என்னை நோக்கி இதனொடும் உங்கள் பிறவி யறு. நீ புகாரிற் சென்று பிறப்பாய். உனக்கு ஓர் அருந்துயர் வரும். அந்நாள் மணிமே கலா தெய்வம் நின்னை இரவில் எடுத்துச் சென்று தென்றிசையில் ஒரு தீவில் வைத்திடும். ஆங்குப் புத்தன் ஆசனம் தோன்றும். அதனை வணங்குவாய். உடனே உன் முற்பிறப்பினை உணர்ந்து கொள்வாய் என்றனையே! எம்பெருமானே! அங்ஙனமெல்லாம் நிகழ்ந்துளவே! அப்பிறப்பில் என் மறுபிறப்புக் கூறி யது போல, என் கணவன் மறுபிறப்பும் கூற வேண்டி னேனே! நீ கூறுது, மறுபிறப்பில் உன்னைக் கொண்டு செல்லும் தெய்வமே, அதனை உனக்கு உரைக்கும் என்றனையே! அத்தெய்வம் இதுபோது வாராதோ! அந்தோ! (அழுதல்)

# 10-வது மந்திரங் கொடுத்த காதை

## காட்சி 1

**இடம் :** மணிபல்லவத் தீவு.

**காலம் :** பகல்.

**உரியோர் :** மணிமேகலா தெய்வம், மணிமேகலை.

**மணி-தேய் :** மணிமேகலை, நம்பெருமான் புத்ததேவனது பாதபீடிகைக் காட்சியால் தன் பிறவியை அறியும் சீரினை எய்தினாள். இவள் பெற்றபேறு மிக்க அழகியது. நாம் அங்குச் சென்று அதனைத் துதித்து அவட்கு அருள்வாம். (விண்ணினின் றிறங்குதல்)

**மணிமேகலை :** ஓ. அதோ பீடிகையின்பால் ஒரு தெய்வம் வந்து நிற்கின்றது; துதிக்கின்றது.

**மணி-தேய்:**

> உயிர்களெல்லாம் உணர்வு பாழாகிப்
> பொருள் வழங்கு செவித்துளை தூர்ந்தறிவிழந்த
> வறந்தலை யுலகத்து அறம்பாடு சிறக்கச்
> சுடர்வழிக் கற்றுத் தடுமாறு காலை, ஓர்
> இளவள ஞாயிறு தோன்றியதென்ன
> நீயோ தோன்றினை ! நின்னடி பணிந்தேன் !
> நீயே யாகிநிற் கமைந்த இவ் வாசனம்
> நாமிசை வைத்தேன் தலைமிசைக் கொண்டேன்
> பூமிசை ஏற்றினன் புலம்பெலாம் அறுகவே !

**மணிமேகலை :** தேவி ! அடிவணங்கினேன். உன் திருவருளால் என் பிறப்பு உணர்ந்தேன். என் பெருங் கணவன் யாங்குளானோ? அருள்வாய் !

**மணி-தேய்:** இலக்குமி ! கேளாய் ! நீ நின் கணவன் இராகுலனொடு ஒருகால் ஊடியிருந்த காலத்தே, அவன் மிக்க காதலொடு நின்னை அடிவணங்கி, வேண்ட, அதுபோது வான் வழியே சென்ற சாதுசக்கர

முனிவன் அங்கு வந்தனன். நீ அம் முனிவனைக் கண்டு மயங்கி, நடுங்கி, நாணி வணங்கினை. நின் கணவனோ, இங்கு வந்தோன் யாவன் எனக்கூறி வெகுண்டனன். அதுகண்ட நீ, அவன் வாயினைப் புதைத்து, 'வானின்று இறங்கிய முனிவன் திருவடிகளை வணங்கிலை, துதித்திலை' என்று கூறி, அம்முனிவன் மலரடிகளை நீ மீண்டும் வணங்கி, நின் கணவனையும் வணங்கச் செய்தனை! அதன் மேலும் நீ 'தேவரே! யாங்கள் உமக்கு விருந்தளிக்கும் தகுதியுடையோம் அல்லோம் ஆயினும் எங்களிடம் உள்ள இந்த நீரமுதினை உண்டருள்க. அடியேம் உமது குறிப்பின்வழித் தொண்டு செய்து ஒழுகுவோம்' என்றனை. அம்முனிவன், தாயே! உண்பேன் என்று கூறி உண்டனன். மணிமேகலை! அப்பேரறம் நின்பால்நின்று நின்பிறப்பினை அழித்திடும். மாதே! உவவன மருங்கில் உன்பாற் றோன்றிய உதயகுமரனே, உன் நாயகன் இராகுலன் ஆவன். நினக்கு அவன் பாலும் அவனுக்கு நின்பாலும் தோன்றித் தொடரும் காதல் இன்றும் நீங்கவில்லை. நீயோ அறத்தின் வித்து. நின்பால் பல நல்லறங்கள் தோன்றி வளர்ந்து சிறக்கும். அத்தகைய நின் உயர்வுள்ளம், பற்று வழியுற்றுப் பயனின்றிக் கழிவது, சிறந்துயர்ந்த கந்தசாலி எனும் நெல்லின் விதை களர் நிலத்து வீழ்ந்து பயனின்றி ஒழிவதேபோலும். ஆகவே, நின் மனம் திறம்பெற்று உயர்தற்கு ஆவன செய்தனன். இலக்குமி! இன்னும் கேளாய்! நின் தமக்கையர் தாரையும் வீரையும் ஆவர் அன்றோ!

மணிமேகலை : (கண்ணீர்ப் பெருக்குடன்) தேவி! அவர்களது முற்பிறப்பின் வாழ்க்கை எவ்வாறாயிற்றோ? இன்று எங்கு எவ்வாறுளரோ?

மணி-தெய் : மணிமேகலை ! அவர்கள் முற்பிறப்பின்கண், கச்சய நகரத்து அரசன் துச்சயன் என்போன் மனைவியர் ஆயினர். அவர்கள் ஒரு சமயம் கங்கையாற்று அடைகரையில் இன்புற்றிருக்குங்கால், அறவண அடிகள் என்பார் ஒரு முனிவர் அங்கே வந்தார். அவர்கள் மூவரும் அம்முனிவரை வணங்கி நின்றனர். அம் முனிவர் தாம் வணங்குவதற்காக வந்த பாதபங்கயமலை என்பதன் பெருமைகளைக்கூறி, அதனை அவர்களையும் வணங்கக் கூறினர். பாதபங்கயமலை என்பது புத்த பெருமானது திருவடிகளை முடியிற் கொண்டதோர் மலை. அம் மலையில் நின்று ஒருகால் புத்தபெருமான் மக்கட்கும் விலங்கு முதலியவற்றிற்கும் உள்ளவாய துன்பங்களெல்லாம் ஒழியவும், எல்லா உயிர்களும் ஒற்றுமைகொண்டு இனிது வாழவும் அறங் கூறியருளினர். மணிமேகலை! அங்ஙனமே நின் தமக்கையரும் அவர் கணவரும் அம் மலையினைத் தொழுது அங்குத் திருவிழாச் செய்தனர். அவ்விருவருமே இங்கு மாதவியும் சுதமதியும் ஆகி நின்னோடு கூடினர். மாதே! நீ முற்பிறப்பொடு இப்பிறப்பின் தொடர்புகளும் அறிந்தனை. அறத்தின் திறங்களும் அறிந்தனை. பிற சமய வாதிகள் கூறும் அவரவர் சமய உண்மை முதலியவும் அறிய விருக்கின்றாய் ! பிற சமயவாதிகள் கூறுவன வெல்லாம் பொய்யுரைகள் ஆகும். அன்னோரிடம் இந் நிலையில் நீ சென்று கேட்பின், இவள் இளையள் என்று நினக்கு ஒன்றும் உரையார். நினக்கு இரண்டு மந்திரங்கள் கூறுவேன். உணர்ந்து கொள்வாயாக.

(மறைகளை மெல்லக் கூறுதல்)

இவற்றுள் முதலது, வேற்றுவடிவம் கொள்வது பற்றியது. பின்னது விசும்பின் வழியாகச் செல்வது

பற்றியது. மணிமேகலை நீ நம் புத்தபெருமான் திரு அறத்தினை அடைதல் உறுதி! உறுதி! இப்பீடிகையை வணங்கித் துதித்து நின் பதிக்குச் செல்வாயாக. நான் போய் வருகின்றேன்.

மணிமேகலை : தேவி! நின் திருவடிக்கு வணக்கம்.

(தேவி மறைதல்; மீளல்)

மணி-தெய்வம் : மணிமேகலை! ஒன்று மறந்தேகினேன். நினைந்து மீண்டேன். மக்கள் யாக்கை உணவின் பிண்டம். உணவின்றேல் உடல் உயிர் நில்லா. இம் மந்திரம் பெரும் பசியை நீக்கவல்லது. இதனையும் கொள்வாயாக.

(கூறி மறைதல்)

---

# 11-வது பாத்திரம் பெற்றது

## காட்சி 1

**இடம் :** மணிபல்லவத் தீவு.

**காலம் :** பகல்.

**உரியோர் :** மணிமேகலை, தீவதிலகை.

மணிமேகலை : ஓ! என்ன அழகிய காட்சி. வெண் மணற்குன்றம், விரிபூஞ்சோலை, தண்மலர்ப் பொய்கை. இவை மூன்றும் ஓரிடத்திருப்பக் காண்பதினும் சிறந்த காட்சி யாதுளது! ஓ! அதோ வருவார் யாவரோ? அம்மையே வணக்கம்! வருக! வருக!

தீவதிலகை : அம்மா! இத் தீவகத்தே, மரக்கலம் கவிழ்ந்திட, அதனின்றும் தப்பி உய்ந்து வந்த மகளி ரைப்போல் இங்கே நிற்கின்றாய். நங்கையே! நீ யாரோ?

மணிமேகலை : அம்மா! எனக்கு இப்பிறப்பின் நிகழ்ச் சியே அன்றிச் சென்ற பிறப்பின் நிகழ்ச்சியும் தெரி யும். ஆகலின் இரண்டும் கூறுவேன். சென்ற பிறவியில் யான் இராகுலன் என்னும் மன்னன் தேவி. இலக் குமி என்பது என் பெயர். இப்பிறப்பில் நாடகக் கணிகையாய மாதவி பெற்ற மணிமேகலை யாவேன். மணிமேகலாதெய்வம் என்பது என்னை இங்கே சேர்த் தருளியது. தெய்வப்பெருமை வாய்ந்த இப்பெரும் பீடிகையால், எனது முற்பிறப்பினைமுழுதும் அறிந் தேன்! நான் இங்கு வந்த வரலாறும் இங்கு எய்திய பயனும் இவையே யாகும். தேவி! நீவிர் யாவிரோ?

தீவதிலகை . அம்மா! மணிமேகலை! இத்தீவின் அய லிடத்தே, இரத்தின தீவம் என்பது ஒன்று உண்டு. அதன்கண் சமந்தம் எனும் உயர்ந்த மலையொன் றுளது. அதன் உச்சியில் புத்தபெருமானின் இணையடிக்காட்சி எழில் பெற்றுளது. அது, பிறவிப் பெருங்கடற்கு அறவியாகிய மரக்கல மாகும். அதனை வலங்கொண்டு பணிந்து இங்கே வந்தேன். சிறந்த காட்சியினையுடைய இத்தெய்வப் பீடிகையைக் கண்டு வணங்கி மகிழ்ந்தேன். அப்போது இந்திரன் தோன்றி, இதனை என்றும் காவல் பூண்டிருக்கும் பெரும்பேற்றினை எனக்கு அளித்தனன். என் பெயர் தீவதிலகை என்பதாகும்.

அம்மா! மணிமேகலை! நமது பெருமான் புத்ததேவன் கூறிய நல்லறத்தினைப் பற்றியொழுகும் நோன்பினரே

இப்பீடிகையைக் கண்டு வணங்குதற்கு உரியராவர். அங்ஙனம் கண்டு வணங்குவார்க்கு, அவர் முற்பிறப்பின் உணர்ச்சி இனிதின் எய்தும். அங்ஙனம் கண்டு வணங்கி முற்பிறப்புணர்ந்தோர், உலகத்திற் சிறந்தோர் ஆவர். அன்னவர்களே பின்னர் அறமொழி கேட்டற்குரிய ராவர். அத்தகு சிறப்பினையுடைய மாதே! யான் கூறுவதனைக் கேட்பாயாக.

இதோ, எதிரே, குவளை நெய்தல் மலர்களை அணிந்து விளங்கும் இப்பொய்கை, கோமுகி யென்பதாகும். இதன்கண், ஒவ்வோராண்டிலும் வைகாசித் திங்கள் முழுமதி நாளில், அமுதசுரபி யென்னும் பெருமையுடைய தோர் பாத்திரம் தோன்றும். அஃது ஆபுத்திரன் என்பானது. இன்று அது தோன்றும் நாள் ஆகும். இந்நேரமே அது தோன்றும் காலமுமாகும். அதுபோது தக்கார் எவரேனும் இங்கு உளராயின், அஃது அவர் கையில் வந்துறும். இன்றேல் மீண்டும் இப்பொய்கையில் மறைந்திடும். மணிமேகலை! நீ உரிய சிறப்புக்களெல்லாம் எய்தியிருத்தலின், நின் கையில் அப்பாத்திரம் வந்துறுமென எண்ணுகின்றேன். நாம் அங்குச் செல்வோம்.

மணிமேகலை : தேவி! நன்று! இதோ பீடிகையை வணங்கி வருவேன். (வணங்கல். இருவரும் சென்று கோமுகியை வலம் வந்து நிற்றல்)

தீவதிலகை : மணிமேகலை! நின் சிறப்பினை என்னென்பது! இதோ தோன்றிய அமுத சுரபி, நின்னை நோக்கி வருகின்றது! இதோ நின் கையில் அமர்ந்துளது!

**மணிமேகலை :** புத்ததேவனே!

மாரனை வெல்லும் வீர நின்னடி
தீநெறிக் கடும்பகை கடிந்தோய் நின்னடி
பிறர்க்கறம் முயலும் பெரியோய் நின்னடி
துறக்கம் வேண்டாத் தொல்லோய் நின்னடி
எண்பிறக் கொழிய இறந்தோய் நின்னடி
கண்பிறர்க் களிக்கும் கண்ணோய் நின்னடி
தீமொழிக் கடைத்த செவியோய் நின்னடி
வாய்மொழி சிறந்த நாவோய் நின்னடி
நரகர் துயர்கெட நடப்போய் நின்னடி
உரகர் துயரம் ஒழிப்போய் நின்னடி'
வணங்குவன் வாழ்த்துவன் மலரடி வாழியர்!

**தீவதிலகை :** மணிமேகலை! பசியின் கொடுமையினை என்னென்பது!

குடிப்பிறப்பு அழிக்கும் விழுப்பம் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாணணி களையும் மாணெழில் சிதைக்கும்
பூண் அணி மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி யென்னும் பாவி!

அப்பசியைத் தீர்த்தோரது புகழோ அளந்துரைத்தற் கரியது. மணிமேகலை! செல்வமுடையார்க்கு அளிப் போர் அறவிலை கூறுவோராவர். செல்வமற்ற வறிஞர் களின் பசிப்பிணியை நீக்குவோரே உண்மை அறநெறி யிற் செல்வோராவர். அம்மா! உயிர்கட்கு உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே யாவர். ஆகலின், நீ அத்தகைய சிறந்த அறத்தினை மேற்கொள்ளும் அறிவினையுடையை யாகி, அந்நல்லறம் கண்டு சிறப்புறு வாயாக.

**மணிமேகலை .** அம்மா தீவதிலகை! சென்ற பிறப்பில் என் கணவன் திட்டிவிடம் எனும் பாம்பு தீண்டியதால்

உயிர் நீங்கின விடத்து, உடன் தீக்குளித்த யான், அப் பிறப்பில் சாதுசக்கரன் என்னும் பெரியாரை உச்சிப் பொழுதில் உண்பித்த செயலாகிய கனைக் காண்பே னுயினேன். அதன் பயன்போலும் இப்பாத்திரம் என் கையிற் புகுந்தது. இவ் வுலகத்தே நல்லறம் செய்து செல்வத்தை உற்ரோர் வாழும் இடங்கள் பல. அத் தகைய நல்லறம் செய்யாது வறிஞராய்ப் பிறந்து, உடுக்கத்தக்க உடையுமின்றிப், பெரும்பசி அலைத்த லால் மிகவருந்தி, வெயில் மழையெனப் பாராது அச் செல்வர் மனைகளின் முன் அலைந்து திரிந்து அயர்வோர் பலர். அத்தகைய வறியர்முன் தோன்றிக் குழவி முகம் கண்டு இரங்கும் தாய் போன்று, இப் பாத்திரத் தின் வழியாக அவர்தம் ஆருயிர் மருந்தாகிய உணவினை யளிக்கும் தொண்டினை அடைய மிக்க விருப்பம் உடையேன்.

தீவதிலகை : அம்மா! மணிமேகலை! அப்பாத்திரத்தின் மற்ரொரு சிறப்பினைக் கூற யான் மறந்தேன். நீ எடுத் துக் கூறினை. அறமே சான்ருக, நிறைந்த அருளால் உலகத்துயிர்களை யுண்பிக்க விரும்பும் சிறந்தோர்க் கல்லது, அப்பாத்திரம் போலியறம் செய்வார் பிறர்க்கு நன்கு சுரவாது. நீ அறத்தொடும் அருளொடும் நின்று உயிர்கட்குப் பசிப்பிணி போக்கும் பேரவா உடையை யாகலின், அது நன்கு சுரந்து உதவும். மணிமேகலை! நின் பதிக்கு எழுவாயாக.

(மணிமேகலை தீவதிலகையையும், புத்த பீடிகையையும் வலங்கொண்டு வணங்கிப் பாத்திரத்தைக் கையில் ஏந்தி வான் வழியாகத் தன் பதிக்கு ஏகல்)

## காட்சி 2

**இடம் :** புகார்.

**காலம் .** பகல்.

**உறுப்பினர் :** மாதவி, சுதமதி, மணிமேகலை.

**மாதவி :** சுதமதி! நீயும் என் மகளும் சென்ற காலம், இன்றுடன் ஏழுநாள் ஆகிவிட்டனவே. அந்தோ! மணி மேகலை வரக் காணோமே! ஏதேனும் தீங்கு நிகழ்ந் திருக்குமோ என்று என் உள்ளம் அஞ்சுகின்றது.

**சுதமதி :** மாதவி! இதோ பார்! மணிமேகலையை!

**மணிமேகலை :** தாயே வணக்கம். சுதமதி வணக்கம்.

**மாதவி :** மணிமேகலை! நின்னைப் பிரிந்த யாங்கள் எய்திய துயரினை என்னென்போம்! நீ சென்றவிடத்து என் உற்றனையோ!

**மணிமேகலை :** அம்மா! முதலில் நிகழ்ந்தன சுதமதி கூற அறிந்திருப்பாய்! சுதமதியினின்றும் என்னைப் பிரித்தெடுத்த தெய்வம் சுதமதிக்குக் கூறியனவும் அறிந்திருப்பாய். இப்பால் நடந்தனவற்றுள் சிறந்தது நம் பழம் பிறப்பினை யான் அறிந்து வந்திருப்பது. அதனைச் சுருங்கக் கூறுவேன். நீயும் சுதமதியும் யானும் இரவிவன்மன் என்பான் மக்கள். நின் பெயரோ தாரை. சுதமதி, நின் தங்கையாகிய வீரை. யான் நுங்கள் தங்கையாகிய இலக்குமி. தாயே! நீ துச்சய மன்னனது தேவியாயினை. தாயரே! நுங்கட்கு இப் பொழுது இம் மானிட யாக்கையின் தீவினைகளை யறுக் கும் செய்தவம் உண்டாவதாக! உங்கள் பிறப்பின் வினை வரலாறுகளை அறவண அடிகள்பால் அறிந்து

கொள்ளுங்கள். இதோ என் கையிலுள்ள மாபெரும் பாத்திரம் அமுதசுரபியெனும் பெயரினது. இது ஆபுத்திரன் கையது. இதுகொண்டு வறிஞர் உலகத்தின் பசிப்பிணிகளை நீக்கும் பேரறத்தினை யான் மேற்கொண்டுள்ளேன். இதனை நீவிரும் வணங்குவீர்களாக. இனி, நாம் அறவண அடிகள் திருவடிகளை வணங்குவதற்குச் செல்லுவோமாக. எழுக !

(யாவரும் செல்லுதல்).

---

# 12-வது அறவணர்த் தொழுதது

## காட்சி 1

**இடம் :** அறவண அடிகளின் தவச்சாலை.

**காலம் :** பகல்.

**உரியோர் :** மணிமேகலை, மாதவி, சுதமதி, அறவண அடிகள்.

(மூவரும் அறவண அடிகளைப் பணிந்து துதித்தல்)..

அறவண அடிகள் : அம்மா ! மணிமேகலை ! நீ இந் நகரினின்றும் உவவனத்திற்குச் சென்றபின் நிகழ்ந்தனவற்றைக் கூறுவாயாக.

மணிமேகலை : அடிகளே ! யானும் சுதமதியும் அவ்வனத்தில் சென்றிருந்தகாலை உதயகுமரன் அங்கு வந்தனன். அவன் வருகையை உணர்ந்து அஞ்சிப் பளிக்கறையினுள் தாளிட்டிருந்த என்னைக் கண்டு, பல்வகையான காதல் மொழிகளை யுரைத்து, எங்கள் விருப்பின்மை புணர்ந்தும், தன் காதல் அகலானாகித்

தான் எங்ஙனமேனும் என்னைக் கைப்பற்றுவதாகக் கூறிச் சென்றனன்.

பின்னர், யாங்கள் அங்கு உள்ளம் சோர்ந்திருக்குங் கால், இரவு வர, யாங்கள் கண்ணயர, மணிமேகலா தெய்வம் என்னை எடுத்து மணிபல்லவத்திலிட்டுத் தனது அருளினை எனக்கும் சுதமதிக்கும் கூறிச் சென்றது. பின்பு, யான் தீவகத்துள்ள புத்ததேவனது பாதபீடத்தைக் கண்டு வணங்க, அக் காட்சியால் எனது பழம் பிறப்பினை ஓரளவு உணர்ந்தேன். பின்னர் மணிமேகலா தெய்வம், எனது பழம் பிறப்பில், தமக்கையராயிருந்த தாரையும் வீரையுமே இம்மாதவியும் சுதமதியுமாக வந்து பிறந்தனர் என்றும், அவர்கள் வரலாற்றை அறவண அடிகள்பால் விரிவாக அறிந்துகொள்வாயாக என்றும், முற்பிறப்பிற் கணவனாயிருந்த இராகுலனே உதயகுமரனாகப் பிறந்துளான் என்றும் கூறி, வான் வழியே இயங்கச் செய்வதும், நினைத்த உருவம் கொள்ளச் செய்வதும், பசிப்பிணியை அகற்றுவதுமாகிய மூன்று மந்திரங்களை அருளிச் சென்றது. இப்பால், தீவதிலகை தோன்றிக் கோமுகியில் இருந்த அமுதசுரபியை நான் பெறுமாறு செய்தருளியதுடன், அதற்கு உரியன் ஆகிய ஆபுத்திரன் வரலாற்றை அறவண அடிகள்பால் தெரிந்து கொள்வாயாக என்றும் கூறிச்சென்றது.

அறவண அடிகள்: மணிமேகலை! நீ கூறிய நிகழ்ச்சிகளால் மிக்க மகிழ்ச்சி எய்தலாயினேன். மாதே! நினக்கு நல்ல மேம்பாடுகள் எல்லாம் மேவுவனவாக! இவர்கள் வரலாற்றைக் கூறுவேன், கேட்பாயாக. மாதே! யான் புத்ததேவன் பாதபங்கய மலையைப் பரவிச் செல்லுங் காலத்தே, கச்சய நகர மன்னன்

துச்சயனை ஒரு பொழிலிற் கண்டு, அரசே! நீயும் நின் தேவியரும் நலமுற்றுள்ளீரோ?" என்று வினவினேன். அம்மன்னன் தன் மனைவியர் வினை வாய்ப்பட்டு ஒழிந் ததை உள்ள முடைந்து கூறிப் புலம்புவானாயினன். வீரையென்பாள் மது உண்ட மயக்கத்தால் யானை முன்னே சென்று மாய்ந்ததும், அத்துயரச் செய்தி கேட்ட தாரை, தன் துயரை ஆற்றலாகாது ஒரு நிலா முற்றத்திலேறி வீழ்ந்து இறந்ததும் கூறி வருந்துவா னாயினன். அதுகேட்ட யான், மன்ன! இது பழவினைப் பயன். நீ வருந்தற்க என்று உரைத்து வந்தேன். மாதரீர்! உங்கள் முற்பிறப்பு இப்பிறப்புக்களின் நிகழ்ச்சிகளை முற்றும் உணர்ந்தீர். நீங்கள் நாடக அரங் கில் நடிக்கும் கூத்தியர், காட்சிதோறும் கொள்ளும் வேறுவேறு கோலங்கள் போல, வேறுவேறு வகை யான கோலங் கொண்டுள்ளீர்கள். மணிமேகலை! மற் றும் கேட்பாயாக! நற்கதிக்குச் செல்லும் பெருவழி யானது, தீக்கதிகளாகிய அறுகு, நெருஞ்சி முதலியவற் றால், அடைக்கப் பெற்றுள்ளது. ஆகவே உயிர்கள் செல்லும் நெறியானது சிறப்பிழந்த பொதுநெறியாகி விட்டது. நற்கதிக்குரிய நன்னெறியோ, பொதுவகை யான் அன்றிச் சிறப்பு வகையான் இனிது அறியப் படாத தாகியது. அது, ஞாயிற்று மண்டிலம் ஒன்று உண்டு எனப் பொதுவகையான் அறிவாரேயன்றித், தெளிவாக அதனை நேரிற்கண்டு விளங்க அறிவார் இல்லை யாதல்போலும். இந்நிலையில், நல்ல அறங்களை எடுத்துரைத்தலும், அது பயன்படுதலும் இல்லையாயி னும், ஏதோ ஒரு சிறிதேனும் பயன்படலாம் என்று, யான் அறநெறி உரைத்து வருதலும் உண்டு. மாதே! சக்கரவாளத்துத் தேவர் எல்லோரும் ஒருங்குசேர்ந்து,

துடிதலோகத்து உள்ள புத்ததேவன் திருவடிகளில் விழுந்து வேண்டிக்கொண்டபடி, இவ் வுலகத்தே ஞாயிறு வந்து தோன்றினாற்போல, புத்ததேவன் பின்னொரு காலத்தே வந்து தோன்றுவன். அங்ஙனம் தோன்றுங்காலம் ஆயிரத்தறுநூற்றுப் பதினாறும் ஆண்டாகும். அதன்பின்பு பெரிய குளத்திலுள்ள மதகின் சிறுவழியால், மிகப் பெரிய வெள்ளம் புகுவது போல், மக்களின் சிறிய செவிகளின் வழியே அளவிடற்கரிய நல்லறங்களெல்லாம் மிக்க மகிழ்ச்சியொடு உயிர்களைச் சாரும். மணிமேகலை! உலகிருளைக்கெடுத்து ஞாயிறு தோன்றும்பொழுது, அதன் ஒளியினைச் சூரிய காந்தக்கல் பெற்று ஒளிர்ந்து காணுமன்றே! அங்ஙனமே, மன இருளைக் கெடுத்துப் புத்தனாகிய ஞாயிறு தோன்றுங் காலத்துத், திங்களும் ஞாயிறும் சிறந்து தோன்றும். விண் மீன்கள் செந்நெறியிற் செல்லும். வானம் பொய்யாது பெய்யும். மாநிலம் வளம்படும். உயிர்கள் துயருறா. திசைகள் செழுமையுறும். கடல் பல வளங்களையும் தரும். பறவை, விலங்கு, மக்கள் ஆய எல்லாம் பகை நீங்கி நலம்பெருகி வாழ்வுறும். நரகச்சாதியும் பேய்களும் துன்பம் விட்டொழியும். மக்கள், உருவும் திருவும் அறிவும் எய்தி மேம்படுவர். மணிமேகலை! மற்றுங் கேளாய்! அங்ஙனம் தோன்றும் புத்தனது அருளறத்தைக் கேட்போர் பிறவியை ஒழிப்போராவர். ஆகவே,

போதி மூலம் பொருந்திய சிறப்பின்<br>
நாதன் பாதம் நவைகெட ஏத்துதல்<br>
பிறவி தோறும் மறவேன் மடக்கொடி<br>
மாதர் நின்னால் வருவன இவ்வூர்<br>
ஏது நிகழ்ச்சி யாவும் பலவுள.

பின்னர், யான் அறவுரைகள் பலவும் கூறுவேன். அப்போதே அவை நின் உள்ளத்தில் நன்கு பதிவன வாகும். மணிமேகலை! இதோ ஈங்கு நிற்கும் மாதவியும் சுதமதியும், முன்பு பாதபங்கய மலையைத் தொழுத நல் வினை யுடையராதலின், நின்னுடன் கூடி நம் புத்தர் பெருமானது சிறந்த அடிகளைத் தொழுது வலங்கொண்டு, தமது வினைத் தொடர்புகளையெல்லாம் நீக்கி நல்வழியிற் செல்வர்.

மாதே! நினது நல்வினையால், ஆருயிர் மருந்தாம் இவ் வமுதசுரபியினைப் பெற்றனை. மக்கள் தேவர் என்ற இருபகுதியார்க்கும் ஒத்த முடிவினையுடைய ஓர் அறம், பசிப்பிணி தீர்த்தலேயாகும். நன்று! சென்று வருவீர் களாக! (மூவரும் வணங்கல்) மணிமேகலை! உனக்கு உணர்த்த வேண்டுவன சில வரலாறுகள் உள்ளன. அவற்றை நீ கேட்டறிவதினும், அவை நடந்த காலத்து நடந்தது போலக் கண்டும் கேட்டும் அறியுமாறு, நின் அகக்கண்களைத் திறந்து காட்டுகின்றேன். உணர்வாயாக.

---

# 13-வது ஆபுத்திரன் திறம் அறிவித்தது

## காட்சி 1

**இடம்:** வயணங்கோட்டை யடுத்த பூந்தோட்டம்.

**காலம்:** பகல்.

**உறுப்பினர்:** பூதி, அவன் மனைவி, ஆபுத்திரன் (குழந்தை).

பூதி: மாதே! இத்தோட்டத்தினுள் ஒரு குழவி இரங்கி இரங்கி அழுகின்றது. இதனைச் சென்று காண்போ மாக. ஓ! ஒரு பசு அதன் அருகே நின்று மிக்க

மகிழ்வுடன் அக்குழந்தையைப் போற்றுகின்றது. இவன், இந்த ஆவின் மகன், ஆபுத்திரன் எனத்தக்கான். மாதே! அல்லன் அல்லன்! இனி நம் மகனே! இதோ, இவனைக் கையிற் பெறுவாயாக. நமக்கு மகன் பிறந்தான். இனி நம் கிளை சிறப்புறும். நாம் இவனுக்கு நம் மறைகளைப் பயிற்றி, அந்தணர்கட்குரியன எல்லாம் செய்து வளர்ப்போமாக. இவன் ஆவின் பாதுகாவலில் இருந்தோனாகலின், இவனுக்கு ஆபுத்திரன் என்னும் பெயர் இடுவோமாக. நம் மரபிற்கு உரியன செய்து வளர்த்து வருவோமாக!

மனைவி : நாத! நமது நல்வினைப் பேறே இங்ஙனம் ஒரு குழவியாக நமக்கு வந்திருக்கிறது. இறைவன் செயல்.

காட்சி 2

**இடம் :** வயணங்கோட்டிலிருந்து வெளியே செல்லும் நெறி.

**காலம் :** காலை.

**உரியோர் :** ஆபுத்திரன், அந்தணர், பூதி.

ஆபுத்திரன் : ஓ! அஃதென்ன? யாகம் செய்யும் இடமா? என்ன யாகம்? ஊனுண்ணலைச் சூழ்கின்ற யாகம்! அந்தோ! இப்பசுவின் தீவினைதான் என்ன? நாளைக் கொலைக் களத்து உயிர்விட நின்றது! அப்பொழுது இதற்குச் செய்திருந்த கோலங்களை என்னென்பது? கொம்பில் எவ்வளவு சிறந்த மாலை! அந்தோ! வலையிடைப்பட்ட மானேபோல் உள்ளம் நடுங்கி, நெடுமூச் செறிந்து, கண்ணீர் சொரிந்து அழைத்த இதன் துயரினை என்னென்பது! ஆம் நான் துணிந்ததே நன்று! இங்கு இருளிற் கொணர்ந்ததே தக்கது. இச்செயல் திருட்டாயின் என்ன? தீவினையாயின் என்ன?

கொலை செய்யப் பற்றிய வேட்டுவர் கைப்பட்ட மானே போன்று, இஃது அஞ்சிக் கதறும் குரலைக் கேட்டும் இரக்கமின்றி ஏகலினும், இதனை விடுவித்து அதனால் வரும் எத்தகைய தீங்கினையும் ஏற்றுக் கோடலே சிறந்த தாகும். அதோ அந்தணர்கள் விரைந்து வருகின்றனர். வரட்டும். யான் அஞ்சுவேன் அல்லேன்.

அந்தணர் கூட்டத்தில் ஒருவர்: அதோ செல்கின்றான்! பிடியுங்கள்! அடியுங்கள்!!

மற்றொருவர்: ஓ! நம் ஆபுத்திரன், திருட்டுப் பையல். நல்ல பிள்ளைபோல் வளர்ந்து வந்தானே!

இன்னொருவர்: ஏ கள்வனே! இஃதென்ன திருட்டு நிகழ்ந்ததைக் கூறுவாய்!

ஒருவர்: ஏ! புலை மகனே! நீ நம் குலத்தினின்றும் தொலைந்தாய்!

மற்றொருவர்: அதுவே சரி! ஆசிரியரே! அக்கோலினால் நன்கு புடையுங்கள்!

இன்னொருவர்: அந்தோ! அப் பசு ஆசிரியரைத் தன் கொம்பினால் குத்திக் குடரைப் பற்றிச் சுற்றிக்கொண்டு ஓடிவிட்டதே!

ஆபுத்திரன்: ஐயன்மீர்! வணக்கம். நான் கூறுகின்றன வற்றைக் கேட்டு, ஆராய்ந்து உண்மையை அறியுங்கள். இப்பசுவிற்கு இரையளிக்கும் பொருட்டு நீங்கள் இவ் உலகைப் படைத்தீர்களா? புல்லை விதைத்தீர்களா? வளர்த்தீர்களா? இப்பசு இப்புவியில் தானாக வளர்ந்த புல்லைத் தின்றுகொண்டு உயிர் வாழ்கின்றது. அஃது அருள் சுரந்து ஊட்டும் அதன் பாலின் சிறப்பை என்னென்பது! பிறந்த உடனே தன் தாயை இழந்த

குழந்தைக்கும் பயன்படும் பாலை, அறந்தரும் நெஞ்சொடு அருள்சுரந்து ஊட்டுவதன்றோ இது. இத்தகைய பசுவை, உங்கள் கருமம் கருதிக்கொல்ல நினைக்கும் உங்கள் தந்நலமும் வன்கண்மையும் என்னென்பேன்! அந்தணர்காள்! உங்கள் எண்ணத்தினைக் கூறுங்கள்!

ஒருவர்: ஏ! புலைமகனே! உலக முதல்வனாகிய திருமாலின் மகன் நான்முகன் எங்கட்கு அருளியதன்றோ அருமறையாகிய நன்னூல்! அம் மறைகூறிய பெருமையதன்றோ வேள்வி யென்னும் தெய்வச் சடங்கு. அந்த மறை நூற்பொருளை அறியாமையாலன்றோ நீ இங்ஙனமெல்லாம் இகழ்ந்துரைத்தனை! அறியாமை நிறைந்த உள்ளத்தா லிழிந்த சிறியனாகிய நீ, பசுவின் புதல்வன் அன்றோ! விலங்கின் புதல்வன என்பதற்கு மிகவும் பொருத்தமானவனே! நீ ஒரு மகன் எனற்குச் சிறிதும் தகுதியில்லாய்! விலங்கின் மகன் விலங்கே யாவாய்.

ஆபுத்திரன்: அந்தணர்காள்! சில பெரியோர் வரலாறெனக் கூறும் அவற்றைக் கூறுவன், கேளுங்கள்: அசலன் பசுவின் மகன் அலனோ! சிருங்கி யார்? மானின் மகன் அலனோ! விரிஞ்சி யென்பான் புலிமகன் அலனோ! கேசகம்பளன் என்பான் நரிமகன் அல்லனோ! இவர்களெல்லாம் உங்கள் குலத்து வந்த முனிவர் கூட்டம் என்று பெருஞ் சிறப்புக் கூறுதல் உண்டோ? இன்றோ? அந்தணர்காள்! ஆவின் மகன் ஆபுத்திரன் என்பதால், உங்கள் குலத்திற்கு அழிவு வருவதும் உண்டோ?

ஒருவர்: அன்பர்களே! இவன் அந்தணனும் அல்லன்! ஆபுத்திரனுமல்லன் முன்பொருகால் ஒரு அந்தணப் பெண் சாலி யென்பவளை நான் கண்டேன். அவள் இளைத்த உடம்பும் களைத்த உள்ளமும் உடையவளாய் இருந்தாள். அவளையான் கண்டு "நின் ஊர் யாது? நின் துயர் யாது? இங்கு வந்த காரணம் என்னை?" என்று வினவினேன். அவள், வாரணவாசியில் வேதம் ஓதுவிக்கும் ஆசிரியனாகிய அபஞ்சிகன் என்னும் ஓர் அந்தணன் மனைவியாம். அவள் கற்பினை இழந்தனளாம். தன் தவறினை உணர்ந்து வருந்திப் பழிபாவங்களைப் போக்கத் தென் திசைக் குமரியாட எண்ணி, அங்குச் செல்லும் கூட்டமுடன் வந்தனளாம். கொற்கை நகரத்திற்கு இப்பால், ஆயர்கள் இருப்பிடம் ஒன்றில், ஒரு குழவியை ஈன்று, ஒரு தோட்டத்தில் இட்டு வந்தனளாம். இவைகட்குக் கழுவாயுமுண்டோ? தனக்கு நற்கதியுமுண்டோ? என்று கூறி அழுதனள். அக்குழந்தையே புலை மகனாகிய இந்த ஆபுத்திரன். இந் நிகழ்ச்சியைக் கூறுவதாற் பயனின்மையின், யான் இதுகாறும் கூறாதிருந்தேன். இனி இவனைத் தீண்டாது ஒழிவீராக. இவன் தொடர்பை முற்றும் அகற்றுவீராக.

ஆபுத்திரன்-(நகைத்து மலர்ந்து) மாமறை மக்களே! உங்கள் அந்தணர் குலத்தார் சிலர் மரபினைக் கேளுங்கள் உங்கள் குலத்தின் பெருமுனிவர்களுட் சிலர் பிரமன் முதலிய தெய்வங்கட்கும், திலோத்தமை முதலாகிய தெய்வக் கணிகையர்கட்கும் பிறந்தவர்களன்றோ? இது பொய்யுரையாமோ? அங்ஙனமாயின், சாலிக்குற்ற தவறு யாதோ?

பூதி-இவன் அந்தணர்க் கொவ்வான். இனி, என் மகனு மல்லன்.இவனை விடுத்து நாம் செல்வோம்.

### காட்சி 3

**உரியோர் :** ஆபுத்திரன்.

**காலம் :** பகல்.

**இடம் :** தென்மதுரை.

ஆபுத்திரன்-அந்தோ! வயணங்கோட்டின் அந்தணர் கொடுஞ் செயலை என்னென்பது! பசுவைக் கவர்ந்த கள்வன் என என்னை யாவரும் இகழ்ந்தனர். மறையோர் வாழ்கின்ற ஊர்களெல்லாம் பிச்சைப் பாத்திரத்தில் கற்களை இட்டனர்! அந்தோ! அவர்கள் செயலும் ஒரு வகையில் நன்றேயாயிற்று. அதனு லன்றே, இத் தென் மதுரையை நான் அடையவும், இப் பிச்சைப் பாத்திரத்தைக் கையிலேந்திச் சிறப்புப் பொருந்திய மாடங்கள் தோறும் சென்று பிச்சை யேற்று வரவும், இச் சிந்தாதேவியின் திருக்கோயில் வாயிலிலுள்ள அம்பலப் பீடிகையின் அடியிலிருந்து, குருடர், செவிடர், முடவர், பாது காப்பற்றவர், பிணியால் நடுக் குற்றவர் அனைவரையும் அழைத்து அவர்களை யெல்லாம் உண்பித்து மகிழவும், அவர்கள் உண்டு ஒழிந்த மிச்சிலை அமிழ்தென உண்டு உயிர்காத்து அத் தொண்டினை என்றும் செய்து வரவும், உரியனும் பேறு எனக்குக் கிடைத்தது. இதுகாறும் இத்தொண்டு ஏதும் தடையுறாது இனிது நடை பெற்று வருகின்றது. தேவியின் அருளால் என்றும் நடை பெறல் வேண்டும். (துயிலப் புகல்.)

# 14-வது பாத்திர மரபு கூறியது.

## காட்சி 1

**உரியோர்** : ஆபுத்திரன், சிந்தாதேவி, பசித்து வந்த மக்கள், முதிமறையோர், ஒருவர்,

**இடம்** : தென்மதுரைச் சிந்தாதேவி திருக்கோயிலின் முன் அம்பலம்.

**காலம்** : இரவு.

பசியுற்ற மக்கள் : ஐயா! ஆபுத்திரனாரே! யாங்கள் இம் மழை சொரியும் இருட் காலத்தே நெடுந் தொலைவி னின்றும் வருகின்றோம். பசிப் பிணியால் மிக நொந்து அயர்ந்துள்ளோம். இந்த அம்பலத்தில் இருக்கும் அரு ளறம் உடையீராகிய உங்கள் பெருமையினை உணர்ந்து வழி நெடுகப் புகழ்ந்து வருகின்றோம். ஐயீர்! ஏதே னும் அருள் கூர்ந்து அளித்தல் வேண்டும்.

ஆபுத்திரன் : அந்தோ, யான் என் செய்வேன்! யான் நாள்தோறும் ஏற்று வருவதில், பசிப்பிணியாளர்க்கு அருத்தி, எஞ்சிய துளதேல் என் பசியினைப் போக்கிக் கொள்பவன். இன்று அவ்வாறு நிகழ்ந்தது. இரவு நெடு நேரம் ஆகிவிட்டதே! இனி ஏதும் செய்தற் கில்லேனே! அந்தோ! இலன் என்னும் எவ்வம் உரைத்தல் எங்ஙனம் இயலும்? செழுங்கலை நியமச் சிந்தா தேவியே! அரு ளொளி விளக்கே! அடிமலர் போற்றி!

சிந்தாதேவி : ஆபுத்திரனே! நீ வருந்தியழியாதே! கெடுக நின் தீது! நீ எழுந்து இதனைப் பெறுவாய்! இது அமு சுரபி என்னும் பாத்திரம்! நாட்டின் கண் எத்தகைய பஞ்சம் நேர்ந்தாலும், நாட்டிலுள்ளோர் யாவரையும்

பசிப்பிணியினின்றும் காத்து அளிக்க வல்லது இது; நின் துயரினைவிடுதி. தெய்வத்தன்மை வாய்ந்த இதனைப் பெற்றுக் கொள்ளுதி.

ஆபுத்திரன்: (பெற்று வணங்கி ஈதல்)

சிந்தா தேவி செழுங்கலை நியமத்து
நந்தா விளக்கே நாமிசைப் பாவாய்
வானோர் தலைவி மண்ணோர் முதல்வி
இவ்வுல குற்ற இடர்களை தாயே!

நின் அருட் பாத்திரத்தின் மாண்பினை என்னென்பது. வாங்குவோர் கையகம் வருந்துகின்றதே யல்லது, இப் பாத்திரத்தின் பெருக்குக் குறைவது ஒரு சிறிதும் இல்லையே மக்காள், நீவிர் யாவிரும் பசியறப் பெற்றீர் களா?

மக்கள்: ஆம் ஐயீர்! நம் உள்ளம் போலும் பெருமையது. இதுபோது நம் கையகத்துள்ள தெய்வத் தன்மை வாய்ந்த பாத்திரம். நாங்கள் பசிப்பிணித் தொல்லை நீங்கினோம். சென்று வருகின்றோம். நம் உள்ளம், நம் தருமம் சிறப்பனவாக. யாவரும் மறைந்துமீண்டும் தோன்றல்.

சிலர்: ஐயீர் ஆபுத்திரனாரே! நீங்கள்பலகாலமாகச் செய்து வரும் இந்த அருளறத்தால் உலகமே பெரும் மாறுபா டடைந்துளதே! உங்களைச் சுற்றி இடையறாது வந்து போகும் மக்கட் கூட்டங்கள், விலங்குகள், பறவைகள் என்பவை அளந்துகூறமுடியாதெனவாகிவிட்டன.இங்கு எழும் ஒலியோ பழுத்த மரத்திற் பழங்களைத் தின்று ஆரவாரிக்கும் பறவை ஒலிகளினும் விஞ்சுகின்றதே! நுமது புகழ் இந்த உலகம் ஒன்றோ, விண்ணுலகெலாம் பரந்து சூழ்ந்திருக்கும்.

முதிய மறையோர் : ஆபுத்திரரே! வாழியர்!

ஆபுத்திரன் : ஐயிர் வருக வருக! அடி வணங்குகின்றேன். ஐயோ! இம்முதிய நிலையில் தண்டே காலாகத் தளர்ந்து தளர்ந்து நடந்து எளியேன் பால் வந்தது என்னையோ?

முதிய மறையோர் : ஆபுத்திர! நான் இந்திரன்! மல்லல் மா ஞாலத்து வந்தோர்க்கெல்லாம் உண்டி கொடுத்திங் குயிர் கொடுத்தாயே! ஆகவே, நீ ஆருயிர் முதல்வன் ஆவாய்! நின் பெருந் தானத்தின் சீரினை, என் பாண்டு கம்பள நடுக்கத்தால் அறிந்தேன். இவ்வுலகில் உண்மை அறச் சீலர்களிடத்து, ஏதேனும் இன்ப துன்ப வேறு பாடுகள் தோன்றின், என் கம்பளம் நடுங்கி அதனை அறிவிக்கும். அங்ஙனமே உனது புண்ணிய மிகுதியை உணர்ந்து, உனக்கு வேண்டும் வரம் கொடுக்க வந் துளேன். வேண்டுவன பெறுவாயாக.

ஆபுத்திரன் : தேவேந்திரரே! வணக்கம். (இகழ்தற் சிரிப்பு) உமது வருகையைப் போற்றுதற் கில்லேன். தேவர் தலைவரே! உங்கள் உலகத் தேவர்கள் இவ்வுலகிலே தாம் செய்த நல்வினைப்பயனை அங்கே வந்துநுகர்ந் திருப்பவர்கள். அவர்கள் தங்கள் மேனிலை குறித்துச் செய்யும் நல்லற முயற்சிகள் எவையேனும அங்கு உளவா ?

அறஞ்செய் மாக்கள் புறங்காத் தோம்புநர்
நற்றவஞ் செய்வோர் பற்றற முயல்வோர்
யாவரும் இல்லாத் தேவர்நன் னாட்டுக்கு
இறைவன் ஆகிய பெருவிறல் வேந்தே
வருந்தி வந்தோர் அரும்பசி களைந்துஅவர்
திருந்துமுகம் காட்டும்என் தெய்வக் கடிஞை!
பெண்டிர் கொல்லோ பேணுநர் கொல்லோ
யாவை ஈங்கு அளிப்பன தேவர்கோன் எமக்கே!

ஐயீர் இந்திரனாரே! யான் எவ்வரமும் வேண்டிலேன். இப்பாத்திரம் கொண்டு என் உலகத் தொண்டினைச் செய்துகொண்டே என்காலத்தினைக் கழித்திருப்பேன். வணக்கம்.

தேவேந்திரன்: ஆபுத்திர! நன்று! நன்று! நின் செருக்கு! நின் அருளறத்தின் பெற்றியினை யான் இன்னுஞ் சின்னாளிற் காண்பன்! (தனியே) ஏ! மேகங்காள்! நீங்கள் நிலவுலகத்தே இடையறாது சென்று சென்று, வேண்டுமிடத்து வேண்டும் அளவு சொரிந்து, நல்வளம் உண்டாக்குவீர்களாக. இந்த ஆபுத்திரன் இனி எங்கும் இரப்போரைக் காணாது செருக்கழிந்து ஒழிவானாக. இப்பாண்டி நாடு பன்னீராண்டு மழை வளமின்றி யிருந்தமையின், இவன் அறம், இங்ஙனம் உலகெலாம் புகழும் நிலை எய்துவதாயிற்று. இனி இவன் அருளறம் ஏது? ஊண் ஒலி அரவம் ஏது?

ஆபுத்திரன்: (மறைந்து தோன்றல்) அம்மம்ம! நாடெலாம் வளம் பெருகலின், எனது புல்லிய தொண்டு அறவே இலதாயிற்று வளம் பெருகல் நன்றே! இரப்பு ஒழிதல் மிக நன்றே! ஆயினும் அந்தோ! எங்கெங்கும் உள்ள விடரும், தூர்த்தரும், சுற்றத்தை ஒழித்துத் திரிவோரும். வழிச் செல்லும் வம்பர்களும் நகைத்துத் தங்கியிருக்கும் இடமாக வன்றோ இந்த அம்பலம் ஆயிற்று! அந்தோ, வட்டாடல், சூதாடல், வம்பக் கோட்டி இவையே எப்போதும் நிகழ்வன! இனி நான் இங்கிருந்து செய்யும் அறத் தொண்டு யாதுமில்லை. நான் ஊர்தொறும் ஊர்தொறும் சென்று ஆங்காங்கு வினவி யறிந்து, வேண்டுமிடத்து என் தொண்டினைச் செய்வேன். அதோ சிலர் வருவாரை வினவுவேன்.

ஐயன்மீர்! நீங்கள் வருமிடங்களில் எங்கேனும் வளம் குறைந்து பசிப்பிணி மேலோங்கி நிற்றலைக் கண்டீரா யின் கூறுங்கள். இது தெய்வத்தன்மை வாய்ந்த பாத் திரம். இதன்பால் எடுக்க எடுக்கக் குன்றுதலில்லை தரும் தெய்விக ஆற்றல் உண்டு. நான் அங்குச் சென்று, அவர்களுக்கு உணவளிக்கும் தொண்டு செய்திருப் பேன்.

வந்தவர்: பெரியீர்! நுமது பெருமையை யாங்களும் கேட் டறிவோம். நும்மைக் கண்டு வணங்கி ஏகவே நாங் கள் இவ்வழியே வந்தோம். இந்நாட்டில் எங்கெங்கும் வளம் பெருகி விட்டமையின் ஒரு குறைவுமிலாது மக் கள் மகிழ்வுற்றுள்ளனர். நாங்கள் கடல்வழியாக இங்கு வருங்காலை, சாவக நாட்டில் மழை வளம் இன்மையால் பலர் பசிநோயுற்று மடிகின்றனர் என்பது அறிந் தோம். பெரியீர்! அங்கே சென்றருளின் உங்கள் பேரறம் மிக்க உயர்ந்த பயன்படும்.

ஆபுத்திரன்: நல்லது: அன்பர்களே! உங்கள் மொழி எனக்கு மிக்க ஆறுதலை அளித்துளது. இதுகாறும் பய னின்றிக் கழிந்த இப்பாத்திரத்தைக் கொண்டு யான் இப்பொழுதே மரக்கலம் ஏறி அத்தீவிற்குச் செல் வேன். நன்று, நாம் போய் வருவோமாக.

## காட்சி 2

**இடம்:** மணிபல்லவம்

**காலம்:** பகல்.

**உரியோர்:** ஆபுத்திரன்.

ஆபுத்திரன்: சாவகநாடு செல்ல வந்த எனக்கு இடையே வந்த இடையூற்றினை என் என்பேன்! மரக்கலம் காற்றி

ளுல் கலக்கமுற்ற நிலையில், அம்மரக்கலம் இம்மணிபல்ல வத்தே ஒருநாள் தங்க நேர்ந்தது பற்றி எல்லோரும் இங்கு இறங்கியிருந்தோமே! அந்தோ! இத் தீவினை யடைந்தேன் தீவினையை என் சொல்வேன்! எல்லோ ரும் மீண்டும் மரக்கலம் சென்றது யான் அறியாது செய்துவிட்டதே! யாவரும் வந்துற்றனர் என்று மீகா மன் கப்பலைச் செலுத்திவிட்டனனே! இங்கு வாழ் வோர் எவரும் இலரே!

*மன்னுயிர் ஓம்பும்இம் மாபெரும் பாத்திரம்*
*என்னுயிர் ஓம்புதல் யானே பொறேன்.*

னது நற்றவம் நீங்கியது. அதனுல் இத்துயர் வந்தெய்தி யது. இனி யான் ஏற்போர் இல்லாத இடத்தே இத னைச் சுமந்து பெறும் பயன் யாது? ஏ தெய்விகம் வாய்ந்த அமுத சுரபியே! நின்னை இதோ இங்குள்ள நீர்வளம் குன்ருத இக்கோமுகிப் பொய்கையில் விடு கின்றேன். ஆண்டிற்கு ஒருநாள் வைகாசி நிறைமதி நாளில் வெளியே தோன்றுவாயாக. அன்று அருளறம் பூண்டோர், ஆருயிர் ஓம்புவோர், எவரேனும் வருவாராயின், அவர் கையிற் புகுவாய்! நல்லது; நான் உண்ணு நோன்பு இயற்றி இறையடி யுறுவேன்.

---

# 15-வது பாத்திரங் கொண்டு பிச்சைபுக்கது

## காட்சி 1

**இடம் :** *அறவண அடிகள் தவச்சாலை.*

**காலம் :** *பகல்.*

**உரியோர் :** *அறவண அடிகள், மணிமேகலை.*

அறவண அடிகள் : *மணிமேகலை! ஆபுத்திரன் வரலாறு நேரிற் கண்டறிந்தனை யன்றோ! ஆபுத்திரனைப் பாது காத்த அந்த நற்பசுவானது சாவக நாட்டில் தவள மலையில் இருந்த மண்முகன் என்னும் பெரிய முனிவ னிடம் சென்றடைந்து, இளம் பருவ முதல் யாவர்க்கும் பால்கொடுத்து வந்தது. அம் முனிவன் முக்கால உணர்ச்சியுடையவன் ஆதலின், அந்த ஆவின் சார்பாக ஒருவன் வந்து உதிப்பன். அவனால் மழை வளம் சிறந்து உலகத்து உயிர்கள் சிறந்த வாழ்வுறும் என் றுணர்ந்து கூறினன். அங்ஙனம் தோன்றிய பெரியோன் பிறந்த இயல்பினை நீ கேட்பாயாக. அவனே மணிபல்ல வம்எனும் தீவில் தன் உயிரினை அறஞ் செயற் கென்றே நீத்த ஆபுத்திரனாவான். அவன் மீண்டும் இவ்வுலகத்தே பிறந்து அறம் செய்வதற்கு எண்ணியே ஆருயிர் துறந் தானாகலின், முற்பிறப்பில் தன்னைக் காத்தளித்த அழகிய பசுவினையே அன்னையாகக் கொண்டு தேவர் கூட்டங்களெல்லாம் மகிழ, இந்த நாவலந் தீவிற்கு ஒப்பற்ற ஒரு முதல்வனாயினன் அவன் பிறந்த நாள் வைகாசித் திங்கள் விசாக நாள் ஆகும்.மாதே!*

*சக்கரவாளக் கோட்டத்துள்ள தவ முனிவர்கள் அக் காலத்துப் பூமழை பொழிந்தது கண்டு, இது புத்த*

தேவன் தோன்றும் நற்காலமல்லவா? இத்தகைய சிறப்புக்கள் நிகழ்தல் என்னையோ? நாம் கந்திற்பாவை யிடம் உண்மை யறிவோம் என்று சென்று அதனைக் கேட்டனர். அப்பாவை, மணி பல்லவத்தில் ஆருயிர் துறந்த ஆபுத்திரன் உலகத்துயிர்கள் உய்யும்படி சாவக நாட்டில் தோன்றியுள்ளான். அவனது வரலாற்றின் விரிவினை அறவண முனிவன்பால் கேட்டறியுங்கள் என்று அவர்களை என்பால் அனுப்பிற்று. யான் அவர் கட்கு அவ்வரலாற்றினைக் கூறினேன். அச் சாவக நாட்டு மன்னன் பூமிசந்திரன் என்பான், அம் மண் முக முனிவனது திருவடியை வணங்கி அப் புதல்வனை வாங்கிச் சென்று வளர்த்து வருவானாயினன். அந்த ஆபுத்திரன் இன்று அந்நாட்டு மன்னவனாயுளன். மணி மேகலை! இந்திரன் முதலிய தேவர்கட்கு அவிநுகர்ச்சி இல்லையோ! செங்கோல் மன்னன் அருளில்லாதவன் ஆயினனோ? காவிரி சுரந்து பரந்து செல்லவும், உல கத்து உயிர்கட்கெல்லாம் துன்பம் எய்தும் வறுமைக் காலம் தோன்றி வருத்துகின்றது. அம்மா! மணி மேகலை! பாற்கடலில் எடுத்த அமுதினைத் தேவர்கள் தாம் உண்டு களித்து மிகுதியை யாவர்க்கும் பயன் படுத்தாது வைத்திருப்பதுபோல யாவர்க்கும் பயன் படற்குரிய இப்பாத்திரத்தைப் பயன்படுத்தாதிருத்தல் தகுதியுடைத்தாகாது. ஆகவே உடனே அங்குச் சென்று, அது பயன் படுமாற்றினைச் செய்வாயாக.

(மணிமேகலை, சுதமதி, மாதவி மூவரும் மீண்டும் துதித்தல்; விடை பெற்றேகல்.)

## காட்சி 2

**இடம் :** காவிரிப்பூம்பட்டினம்.

**காலம் :** பகல்.

**உரியோர் :** மணிமேகலை, காயசண்டிகை, நகரமக்கள்.

ஊர்க்குறுமாக்களுள் ஒருவன் : ஒ! இதோ மணிமேகலை! இவளது இளமைச் செவ்வியும், பேரழகும், ஆடல் பாடற் றிறமும் இருந்தவாறு என்னை? இவள் கொண்ட பிச்சைக் கோலம் என்னை!

ஒருவன் : இந்நகரத்து அரசகுமரனாகிய உதயகுமரனது உள்ளத்தையே கவர்ந்துகொண்ட நங்கைக்கு, அந்தோ இக்கோலம் வந்தவாறு என்னையோ? இது ஏதோ தெய்வச் செயலாக உள்ளது.

காயசண்டிகை : அம்மா! மணிமேகலை! யான் முன் செய்த தீவினை வயத்தால், பல ஆண்டுகளாக யானைத்தீ யென்னும் பெரும் பசிநோயால் மிக வருந்தி வருகின்றேன். நல்லறம் சூழ்ந்து தவநெறியிற் சென்ற நின் தூய கையினால் கொஞ்சம் உணவளிப்பாயாக.

மணிமேகலை : அம்மணி! இப்பாத்திரத்தில் பத்தினிப் பெண்டிர் மனமுவந்து இடும் பிச்சையை முதலில் ஏற்றல் சிறந்ததாகும். அத்தகையார் உள்ள இடத்தினைக் கூறுவாயாக.

காய சண்டிகை : அம்மா மணிமேகலை! அதோ தோன்றும் இல்லம், ஆதிரை நல்லாள் என்பாள் இல்லமாகும். அவள் மழை வேண்டின் வருவிக்கும் மாபெருங் கற்பினையுடையாருள் முதன்மையில் நிற்பவள். ஆங்குச் சென்று முதலில் ஏற்பாயாக.

மணிமேகலை : நன்று! அம்மணி நீவிர் யாவரோ? உங்கட்கு இக்கொடுநோய் வந்த விதம் என்னையோ?

காயசண்டிகை : நான் முற்பிறப்பில் ஒரு வித்தியாதர

மங்கை; காஞ்சனன் என்பான் மனைவி. நாங்கள் பொதியின் மலையின் வளங் காணச் சென்றோம். உண்டோர்க்குப் பன்னிரண்டாண்டளவும் பசிப்பிணியை நீக்கும் நாவற்கனியைக் காலாற் சிதைத்துவிட்டேன். அக்கனியை உண்ண எண்ணியிருந்த விருச்சிகன் என்னும் பட்டினி விரதம் உடைய முனிவன் என்னை வெகுண்டு நீ பன்னிரண்டாண்டளவும் யானைத் தீயெனும் பசி நோயால் வருந்துவாயாக என்று சபித்தவர், மீண்டும், நீ மாதவி மகள் மணிமேகலை யெனும் தவமகள் அளிக்கும் பிச்சையால் அந்நோய் நீங்கப் பெறுவாயாக என்று அருளும் செய்தனர். அந்த நற்காலம் இன்று வந்தெய்தியது.

மணிமேகலை : அம்மணி! நன்று அந்த ஆதிரையின் இல்லிற் சென்று பிச்சை யேற்று வந்து, தங்கள் பசிப் பிணியைப் போக்குவேன்.

காய சண்டிகை : அம்மா! மணிமேகலை அந்த ஆதிரையின் கற்புச்சிறப்பு, மிக வியப்பினைத்தரும் வரலாறு ஆகும். அதனை நின் அகக்கண்ணால் காணுமாறு அருள, யாம் மணிமேகலா தெய்வத்தை வேண்டுவோமாக.

---

## 16-வது ஆதிரை பிச்சை யிட்டது

### காட்சி 1

**இடம் :** *பரத்தையின் வீடு.*

**காலம் :** *பகல்.*

**உரியோர் :** *பரத்தை, சூதாடிகள், சாதுவன்.*

**சூதாடிகள் :** (சூதாடல்) *சாதுவ! இம்முறையும் நீ தோற்றனை! எனவே, நீ தோற்ற இப்பத்து ஆட்டங்கட்கும் உரிய பணயப் பொருளைத் தந்து எழுக.*

**வட்டாடுவோர்:** *சாதுவ! வட்டு ஆட்டத்தில் தோற்றுக் கடன்பட்ட பணயப் பொருளைச் சூதாடி வென்று தருகின்றேன் என்று கூறி எங்களைக் காக்க வைத்தனையே! இப்பொழுது என் செய்வாய்?*

**பரத்தை :** *சாதுவ! நீ இங்குத் தங்கி உண்டு வயிறு வளர்த்து வருவதோடு இந்தச் சூதாடிகளையும் இங்குக் கூட்டி வைத்துக்கொண்டு வீண் ஆரவாரம் செய்கின்றனையே! இனி, உனக்கு உணவிடவும், இன்ன சூதாட்டங்கட்குக் கைப் பொருள் தந்து தொலைக்கவும், பொருள் எங்குளது? நீ கொணர்ந்து வைத்த மூலப் பொருளெல்லாம் எப்போதே தொலைந்து ஒழிந்தனவே! எனக்கும் எத்துணையோ கடன்பட்டுள்ளாயே! இனி இங்கு ஒரு கணமும் இருத்தல் கூடாது. எழுவாயாக.*

**சாதுவன் :** *நல்லது: என் தீவினை இருந்தபடியை என்னென்பேன்! கற்புக் கரசியாகிய ஆதிரையைக் கைவிட்டுக், கைப் பொருளெல்லாம் இங்கே கொணர்ந்து தொலைத்துவிட்டேன். அந்தோ! ஆதிரையின் கதி*

என்னுயிற்றே? இனி யான் இவ்விடத்து ஒரு கணமும் இருத்தற்குரிய னல்லேன். இதோ இவ்வணிகர்களுடன் கூடிப் பல இடத்தும் சென்று பொருள் தேடி வருவேன். வந்து உங்கள் கடன்களை யெல்லாம் தீர்த்துவிடுவேன். உறுதி, உறுதி.

## காட்சி 2

**இடம்** : *நாகர் மலை.*

**காலம்** . *பகல்.*

**உரியோர்** : *சாதுவன், நக்கசாரணர், அவர்கள் குரு.*

நக்கசாரணர் : *"ஆசிரியரே ! வணக்கம் ! இதோ இங்கே நிற்கின்றவன் நேற்றுக் கடலிற் கவிழ்ந்த மரக்கலத்தினின்றும் தப்பி வந்தவன் போலும். நாங்கள் கடற்கரையிற் கண்டோம். இவன் நமக்கு நல்ல உணவென்றெண்ணினோம். ஆயினும், இவன் நம்மொழியிற் பேசியதால், அவனைக் கொல்லாது உங்களிடம் கொண்டு வந்துள்ளோம்.*

குரு : *சாதுவ ! அதோ அங்கே இருப்பாயாக.*

சாதுவன் : (*தனிமையில்*) *இதென்ன காட்சி ! கள்ளைக் காய்ச்சும் பானை, புலால் நாறும் தசைகள், இவை தாமோ குருமகனார் திருமுகத்தின் முன்பு இருத்தற்குரியன? குருமகனையும் அவர் மனைவியையும் காணின், ஏதோ ஓர் ஆண் கரடி பெண் கரடியுடன் இருப்பது போலும் காட்சியன்றோ தோன்றுகின்றது.*

குரு : *நன்று ! நீ யார்? நின் பெயர் என்ன இங்கு வந்த காரணம் என்ன?*

சாதுவன். ஐயா! என் பெயர் சாதுவன். யான் இருப்பது காவிரிப்பூம்பட்டினம். எனது பழவினையால் கைப் பொருளிழந்து, எனது மனைவியையும் விட்டுத் திரைகடலோடித் திரவியம் தேடப் புறப்பட்டு வந்தேன். உங்கள் தீவிற்கு அருகில், எங்கள் மரக்கலம் கவிழ்ந்தது. அங்குத் தோன்றிய ஒரு மரத்தைப் பற்றிக்கொண்டேன். திருவருளால் இக்கரை சேர்வேனாயினேன்.

குருமகன்: அப்பா! இங்கு வா! கடலினின்றும் துன்புற்று வந்த இவன், மிக்க பசியால் வருந்தியுள்ளான். அந்தோ! இரங்கத் தக்கான். இவனுக்கு வெங்கள்ளும் ஊனும் வேண்டும் அளவு கொடுங்கள்! பின்பு, இளையாள் ஒரு நங்கையையும் கொடுங்கள்!

சாதுவன்: ஐயா! அத்தகைய கொடிய சொற்களை இனிக் கூறல்வேண்டாம். யான் அவற்றை வேண்டேன், வேண்டேன்!

குரு: (சினத்துடன்) சாதுவா! இவ்வுலகத்து மக்கட்குப் பெண்டிரும் உண்டியும் அன்றிப்; பெறலாவதோர் நற்பயன்களும் உண்டோ? உண்டாயின் கூறிக் காட்டுவாயாக?

சாதுவன்:

"மயக்குங் கள்ளும் மன்னுயிர் கோறலும்
கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்!
பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்
உறங்கலும் விழித்தலும் போன்ற துண்மையின்
நல்லறம் செய்வோர் நல்லுலகு அடைதலும்
அல்லறம் செய்வோர் அருநரகு அடைதலும்
உண்டென உணர்தலின் உரவோர் களைந்தனர்
கண்டனை"

குரு: (சினந் தணிந்து) சாதுவரே! ஏதோர் உடம்பை விட்டுப் பிரிந்து உயிர் ஓர் உருக்கொண்டு சென்று வேறோரிடத்துப் பிறக்கும் என்று சொன்னீரே. அவ் வுயிர் எவ்வண்ணம் போய்ப் புகும்? அவ்வகையினைச் செவ்வனம் உரைப்பீராக.

சாதுவன்: உடல், ஓர் உயிர் தன்பால் இருக்குங்கால், தன்னிடத்தே உறும் பொருளை அறிகின்றதே. ஆனால் அங்ஙனமாகிய உடலே அவ்வுயிர் பிரிந்த காலத்துத் தன்னை வெட்டினும், தீபின்கண் இடினும், ஒன்றும் அறிகின்றதில்லையே. அதனால் உடம்பிலிருந்து, அவ் வாறு அறியும் ஒரு பொருள் பிரிந்து சென்றது என்ப தனை நீ அறிவாய். அங்ஙனம் பிரிந்து செல்வதே உயிர். அவ்வுயிர்க்கு ஒரு புகுமிடம் வேண்டுமன்றோ? அவ் வண்ணம் செல்லும் அவ்வுயிர், தன் வினையின் பயனை நுகர்வதற்கு ஏற்ற உடலிற் சென்றடையும். இதனை எல் லோரும் அறிகுவர். ஏன்? கனவின்கண் உடம்பு இங்கே தங்க, உயிர் பல காவதம் கடந்துபோய் வரு தலை நீ கண்டறிந்ததில்லையோ?

குரு: சாதுவரே! நீர் கூறுவனவெல்லாம் உண்மையே யாகும் எனலை யான் இப்பொழுது உணர்கின்றேன். ஐயீர்! கள்ளையும் புலாலையும் அறவே கைவிட்டால் உயிரைப் பாதுகாத்தல் எங்கட்கு இயலாததாகுமே. யாங்கள் இப்பிறப்பினின்று இறப்பினை எய்துமளவும் எமக்குப் பொருந்தும் நல்லறங்களை எடுத்துரைப் பீராக.

சாதுவன்: நன்று சொன்னாய். இனி நீ நல்ல நெறியிற் செல்வாய்! உங்கட்குப் பொருந்தும் சில நல்லறங் களை யான் கூறுகின்றேன். கடலிற் கலம் உடைந்து

போவதால் தப்பிவரும் மக்களை நீங்கள் இங்குக் கண்டால், அவர்களைக் கொன்று தின்னாது, அவர்களது அரிய உயிரைக் காப்பாற்றுவீராக! மூத்து விளியும் விலங்குகளை ஒழிந்த வேறு எந்த உயிர்களையும் கொன்று உண்ணீராக.

குரு : ஐயீர்! நீர் கூறியது எமக்காகும் நல்லறமே யாகும். இவ்வாறு நாங்கள் ஒழுகுவதில் தவிரேம். இதோ, இந்தப் பொருள்களை யெல்லாம் கொள்வீராக. கலங்கவிழ வந்த மக்களைக் கொன்றுஉண்டே மல்லவா? அவர்களுடைய பலவகைப் பொருள்கள் இவைகளாகும். இவைகளால் எங்கட்குப் பயன் ஒன்றும் இல்லையன்றோ? இவற்றையெல்லாம் நீரே கொள்வீராக. இதோ, இந்த ஆடைகள், இச்சந்தனக் கட்டைகள், இன்னும் நமக்கு வேண்டிய சிறந்த பொருள்களெல்லாம் எடுத்துச் செல்வீராக.

சாதுவன் : நன்று! அதோ சந்திரதத்தன் வங்கம் வந்து நிற்கின்றது. அதன் வழியாக எனது ஊர் சேருவேன்.

### காட்சி 3

**இடம் :** காவிரிப்பூம்பட்டினச் சுடலை.

**காலம் :** பகல்.

**உரியோர் :** ஆதிரை, ஊரார், உடைகலப்பட்டோர், சாதுவன்.

உடைகலப்பட்டோர் : அம்மா! நின் கணவன் சாதுவன் எங்களுடன் மரக்கலத்தில் வந்தகாலை மரக்கலம் உடைய, ஆங்குக் கடலில் இறந்தவர்களுள் ஒருவனாயினன்.

ஆதிரை : அந்தோ! தெய்வங்களே! ஊரீரே! என் கணவர் இறந்தனராம்! யான் தீயில் மூழ்கி, என் கணவர்

புகுந்த இடத்திற்குச் செல்வேன். (தீ மூட்டி இறங்கல்)

ஒருவன் : இஃதென்ன ! தெய்வக் கற்பு ! இந்த அம்மை நன்னீர்ப் பொய்கையி லிறங்குவதுபோல, இந்தத் தீச் சுடரில் இறங்கினள். உடுத்திய ஆடையிலும் ஒள்ளிய அழல் பற்றவில்லையே ! கூந்தலிற் சூடிய மாலை ஒரு சிறிதும் வாடவில்லையே ! சாந்தம் நிறம் குன்ற வில்லையே ! ஓ ! இத்தீச்சுடர் தெய்வத்தாமரை போலவும், இம்மாது அதன்கண் நிற்கும் திருமகள் போலவும் காணுங் காட்சியை என்னென்பது !

ஆதிரை : அந்தோ ! தெய்வங்களே ! இத்தீவினையாட்டியைத் தீயும் கொல்லவில்லையே ! இனி யான் என் செய்வேன் !

வானொலி: ஆதிரையே! கேட்பாயாக! உன் அரும்பெறற் கணவன் கலங் கவிழ்ந்த காலை ஆருயிர் இழந்திலன். அவன், அலைகளினடுவே, ஒரு மரத்தினைப் பற்றிக் கொண்டவன், திருவருளால் நாகர் வாழும் மலையினை யடைந்தான். ஆங்குற்ற இடையூறுகளையும் திருவருளாற் கடந்து, சந்திரதத்தன் என்னும் ஒரு வணிகனது மரக்கலத்து வந்து தோன்றுவன். நீ நின் பெருந் துன்பம் ஒழிவாய்.

ஒருவர் : அம்மா ! இதோ நின் கணவர், சாதுவர் வருகின்றார். (கண்டு மிக மகிழ்தல்).

## காட்சி 4

**இடம் :** ஆதிரை இல்லம்.

**காலம் :** பகல்.

**உரியோர் :** மணிமேகலை, ஆதிரை, காயசண்டிகை.

மணிமேகலை : அம்மா, ஆதிரையே ! நீ தெய்வக்கற்பு

மிக்கவள் என அறிந்தேன். வணங்குகின்றேன். இப்பிச்சைப் பாத்திரத்து முதன்முதல் நீ நின் திருக்கையால் சோறு இடுவாயாக.

ஆதிரை : மணிமேகலை! இவ்வுலகத்துச் செல்வ வாழ்க்கையினும், அருளறம் பூண்டு உலகில் வறியாரைப் புரக்கும் பேரறத் தொண்டின் சிறப்பினை உணர்ந்து, அதனை மேற்கொண்ட தவநெறிச் செல்வி! உனக்கு முதலில் சோறிடும் இப்பேறு, எனக்கு எனது நல்வினைப் பயனால் எய்தியதேயாகும். வாழியர்!

---

# 17-வது உலக அறவி புக்கது

## காட்சி 1

**இடம் :** காவிரிப்பூம்பட்டினத்தொரு தெரு.

**காலம் :** பகல்.

**உரியோர் :** :மணிமேகலை, காயசண்டிகை, நகரத்தார் சிலர்.

காய சண்டிகை : அம்மா! மணிமேகலை! கற்பிற் சிறந்த இந்த ஆதிரை நல்லாள் இல்லற நெறியின் வழாது யாவர்க்கும் பகுத்துண்ணும் பேரறச் செல்வியாவள். அவள்பாற் பெற்று யாவர்க்கும் பசிப்பிணி போக்கி வரும் உனது இந்த அமுத சுரபியின் பெருமையை என்னென்பேன்! ஒரு நல்ல பேரறச் செல்வன், அற நெறியே பொருளீட்டுகின்றான், இடையறாது அறங்கள் செய்ய விரும்புகின்றான் அவன் எண்ணிய எண்ணியாங்கு அறச்செயல் இனிது நடைபெறுமாறு அப்பொருள் வளர்ந்தோங்கிப் பயன்படுமாறுபோல, இப்

பாத்திரமும் எடுக்க எடுக்க இடையறாத அன்னத்தைக் கொண்டுவிளங்குகின்றது. அம்மா, மணிமேகலை! எனது யானைத்தீ யென்னும் கொடிய நோயினை அறிவை. மணிமேகலை! பண்டு திருமால் மானிட வடிவங்கொண்டு மாறித் தோன்றிக் கடலை யடைத்த காலத்தே குரங்குகள் கொணர்ந்து வீசிய பெருமலைகளெல்லாம் கடலின் வயிற்றினில் புகுந்து மறைந்தாற்போல, என்பசிக்கிடும் உணவுகளெல்லாம் காணுமே கழிகின்றன! அன்னையே! நின் கைப் பாத்திரத்து உணவுதான், எனது அப் பிணிக்கு ஏற்ற மருந்தாகும். எனது பசி நோயைத் துடைத்தருள்வாயாக!

மணிமேகலை. அம்மணி! இதோ இந்த அன்னத்தை உண்ணுங்கள். இறைவனருளால் உங்கள் பெரும்பிணி யகன்று ஒழிவதாக.

காய சண்டிகை: ஆ! மணிமேகலை! நீ அளித்தது அன்னமன்று. அமிழ்தமேயாகும்! என்னுடைய கொடியபிணியினை இப்போது யான் காணேன்!

மணிமேகலை: அம்மணி! மிக்க மகிழ்ச்சி! நீங்கள் யாவர்? உங்கட்கு இப்பிணி எப்போது எவ்வாறு தோன்றிற்று?

காய சண்டிகை: அம்மா, யான் காஞ்சனபுரம் எனும் பெரிய நகரத்தேயுள்ள ஒரு விஞ்சையன் மனைவி. எனக்குக் கொடிய தீவினைக்காலம் வந்து தோன்ற, என் கணவனும் யானும் பொதியின் மலைவளம் காணும் பொருட்டு வெளிவந்தோம். வழியில் அருவிநீர்கொண்ட கான்யாற்று இடுமணல் ஒன்றில் யாங்கள் தங்கி இருந்தோம். அப்பொழுது பூணூலும் திரிசடையும், மர உரியும் உடைய விருச்சிகன் என்னும் முனிவன், அங்கு வந்து ஒரு தேக்கிலையில் ஒரு பனம் பழம்

போன்று பெரிதாயிருந்த நாவற் கனியை வைத்து விட்டுப் பொய்கையில் நீராடச் சென்றான். மணிமேகலை! எனது தீவினையின் பயனாக, யான் செருக்குற்றுச் சென்று, காலால் அந்தக் கனியைச் சிதைத்துவிட்டேன். அதனை யுண்ணும் வேட்கையுடன் வந்த விருச்சிகமுனிவன், யான் அப்பழத்தினைச் சிதைத்திட்ட செயலினைக் கண்டனன். உடனே என்னை நோக்கி, "நீ யார்? அறியாப் பேதை! தெய்வத்தன்மை விளங்கும் ஒரு நாவல் மரத்தில் தோன்றிக் கனிந்தது இப்பழம். அம் மரம் பன்னிரண்டாண்டிற்கு ஒரு முறையே ஒரு பழம் தரும். அக்கனியினை யுண்டோர், பன்னீரியாண்டு பசியின்றி இருப்பர். யான் பன்னீரியாண்டில் ஒரு நாள் அல்லது ஏனைய நாட்களில் உண்ணாத நோன்பினன். இன்று யான் அங்ஙனம் உண்ணும் நாள். அத்தகைய சிறந்த கனியினை நீ இன்று நின் காலாற் சிதைத்துவிட்டாய்! பேதாய்! நீ இன்று முதல், அந்தரம் செல்லும் மந்திரம் இழந்து போவாய். யானைத்தீ யென்னும் கொடிய பசி நோயால் மிக்க துன்பமடைந்து வருவாய். இன்னும் பன்னீரியாண்டு கழித்து இத்தகைய நாவற் கனியினை யான் இங்கு உண்ணும் நாளிலேதான் உனது பசி நோய் ஒழியும் என்றனர். அம்மா, இன்றுதான் அந் நாள் போலும்!

மணிமேகலை: அந்தோ! நீ அங்குச் சாபம் பெற்றபின் நிகழ்ந்தது என்னையோ?

காயசண்டிகை: பின்னர் என் கணவனார் வந்து, வினவி உண்மை யுணர்ந்தனர். அந்தோ! ஆராயாது செய்த செயலாலன்றோ இக்கொடுஞ் சாபம் நேர்ந்துவிட்டது! இனி என்செய்வேம்! இக்கொடிய பசிப்பிணி

பொன்றோ! வானிற் செல்லும் மந்திரமும் பயன்படா தொழிந்ததே! இனி என் செய்வோம்! இப்பழங்கள் கிழங்குகள் காய்கள் முதலாயவெல்லாம் நின்பசியைத் தீர்க்க இயலாதன ஆயினவே. இனி என் செய்வோ மென்று மிக வருந்துவோராயினர்.

மணிமேகலை: அப்பால் நீங்கள் இருவரும் இவ் வூரி லேயே இருந்து வருகின்றீர்களோ?

காய சண்டிகை: அம்மா! என் கணவனார் எங்கள் நகரத்தில் இருக்கவேண்டும் இன்றியமையாமையை நோக்கி, பெண்ணே! இந்த உலகில் புகார் நகர் என்பதொன் றுண்டு! அங்கு மிகப் பெரும் செல்வர்கள் ஆற்றுமாக் கட்கு வேண்டும் உதவிகள் செய்வார்கள். மிக்க தவம் புரிந்தோர் வாழ்கின்ற நகரம் அது. நீ மெல்ல மெல்லச் சென்று அந்நகரினை அடைந்திருப்பாய். நான் நம்பதிக் குச்சென்று என் கடமைகளைப் புரிந்துகொண்டிருப் பேன். ஆண்டுதோறும் இந்திர விழாநாளில் அங்கு வந்துறுவேன் எனக் கூறிச் சென்றனர். அங்ஙனமே யான் இந்நகரினும், அவர் எம்பதியிலுமாக இருக்கின் றோம். கூறியவாறே ஆண்டுதோறும் வந்து என்னைக் கண்டு வருந்தி ஆறுதல் கூறிச் செல்வர். இதுவே என் வரலாறாகும். அம்மா! இன்று நின் கையமுதால் பசி தீர்ந்தமையின், குறித்த சாபம் இன்று தீர்ந்தது. இனி நான் என்பதிக்குச் செல்வேன்.

மணிமேகலை: காயசண்டிகை! நீ நின் கணவருடன் சேர்ந்து, நல்வாழ்வு பெறுவாயாக!

காய சண்டிகை! அம்மா மணிமேகலை! இங்கே சக்கரவா ளக் கோட்டம் என்பது உண்டன்றோ? அங்கே குற்ற மற்ற மாதவர்கள் எப்போதும் உறைவர். அதன் கண்

உலக அறவி யென்ற அம்பலம் ஒன்று உண்டு. அது பலர் புகத்திறந்த பெருவாயிலையுடையது. அதன்கண் எங்கெங்கு முள்ள ஊர்களினின்றும் பசியால் வருந்து வோரும், பிணியால் வருந்துவோரும் வந்து கூடியிருப் பர். தங்கள் துன்பங்களை நீக்குவோரை எதிர்பார்த் திருப்பர். அம்மா! நீ அங்குச் சென்றிருப்பின் எத் தகைய இடையூறும் இன்றி, இப்பெரிய அறத்தினை இனிது செய்து வரலாம். (உலக அறவி புகுந்தாள்)

ஒருவர்: நண்பனே! அதோபார் மாதவி மகள் மணி மேகலையை! தவக்கோலம் பூண்டு பிச்சைப் பாத்திரம் கையேந்தித் தெருவிற் றிரிந்த அவள், உலக அறவியை வலம் வந்து பணிந்து சென்று சம்பாபதியின் கோயிலை யும் முறையாக வணங்கிக், கந்திற் பாவையையும் வணங் கிப், பின் அதோ அமர்ந்திருப்பதைப் பார்! அங் கிருந்துகொண்டு, வருவோர்களையெல்லாம் கூவியழைத் துத் தன் கைப்பாத்திரத்தைக் காட்டி, இதோ இஃது அமுத சுரபி, ஆபுத்திரன் கையிலிருந்தது, எடுக்க எடுக்கக் குறையாதது, என்றெல்லாம் கூறி, யாவரை யும் வயிறார உண்பிக்கின்றாள். உண்டு மகிழும் வறி ஞர்கள் பேரொலியை என்னென்பது!

---

*

# 18-வது உதயகுமரன் அம்பலம் புக்கது

## காட்சி 1.

**இடம்.** *சித்திராபதி வீடு.*

**காலம்:** *பகல்.*

**உரியோர்:** *சித்திராபதி, நாடகக் கணிகையர்.*

சித்திராபதி: நாடகக் கணிகையர்களே! என் தீவினையை என்னென்பேன்! மாதவியின் செயலோடு மணிமேகலையின் செயலையும் அறிந்தீர்களே! இவை மிக்க புண்ணில் தீக்கோல் சென்று சுடுவதுபோல் இருக்கின்றனவே! என் உள்ளம் கொதிப்புற்று எரிகின்றது. நடுக்கம் எய்துகின்றது. கோவலன் இறந்த பின், மாதவி கொடுந் துயர் எய்தினளே! அறவண அடிகள் பள்ளியை அடைந்தனளே! அவள் செயல் நகைக்கத்தக்க செயலன்றோ? இது அறிவாளிகள் இகழ்ந்து கூறுவதற் குரியதன்றோ? பத்தினிப் பெண்களே, தங்கள் கணவன் இறப்பின் மிக்க துயரையடைவர். உயிர் போகவில்லையே என்று வெறுப்பர். குளிர்ந்த பொய்கையில் மூழ்குவார் போல மிக்க தீப்பிழம்பில் மூழ்குவர். அத்தகைய குடிப் பிறப்புடையவர்களா நாம்? நமது வாழ்க்கை, பலப் பலர் கைப்பொருள்களால் நிகழ்வதொன்றன்றோ? பெண்களே! பாணன் இறந்தால் யாழும் ஒழிந்து போமோ? மற்றொருவர்பாற் சேர்ந்து பயன்பட்டு வருமன்றோ? அத்தகையதன்றோ நமது வாழ்க்கை! வண்டுகள் பூக்களிற் படிந்து தேன், மகரந்

தங்களை உண்ணுமன்றோ? அப் பூக்களில் அவை இல்லை யாயின், அவைகளுள்ள வேறு பூக்களைத் தேடிச் சேரு மன்றோ? யாமும் அத்தகையரன்றோ? ஒருவர்க்கு நல் வினை ஒழியும் காலத்து, அவர்களைவிட்டு நீங்கும் திரு மகளைப் போல, நாம் பொருளில்லாத ஆடவரை விட்டு நீங்கித் தக்காரை நாட வேண்டியவரன்றோ!

ஒரு பெண்: ஆம், சித்திராபதி! தவக் கோலம் பூண்பதும் பிச்சைப் பாத்திரம் ஏந்திச் செல்வதும் யாவரும் நகைத்தற்குரியன. ஏனம்மா! மணிமேகலை இயற்கை யழகும் செயற்கை நலன்களும் கொண்டு பருவமுற்றிருந்தனளே. அவளை விரும்பி வந்தார் யாவரோ?

சித்திராபதி: அந்தோ! நகரத்துச் செல்வக் குமரர்களைப் பற்றி என் கூறுவது! அரசகுமரனாகிய உதயகுமரனே அவளைக் காதலித்து, என் வழியாகவும் பிற வழியாக வும் அவளை அடைதற்குக் கொள்ளும் முயற்சிகளுக்கு எல்லையுண்டோ? பாருங்கள், அந்த உதயகுமரனாகிய வண்டு, அம்மணிமேகலையாகிய மலரின் பயன்கொள்ளு மாறு, அவளை அவன் கையகப்படுத்தி, அவள் கையில் ஏந்திய பாத்திரத்தை வேறு பிச்சை மாக்கள் கைப் படுத்தி வரப்போகின்றேன். அவ்வுதயகுமரன் பொற் றேரில் அவளை நீங்கள் காண்பீர்கள்! அங்ஙனம் செய் யேனேல், செய்யத்தகாத தீய குற்றங்களைச் செய்து, அதனால் ஏழு செங்கற்களைச் சுமந்து அரங்கினைச் சுற்றி வரும் தண்டனையேற்ற தீய மடந்தையர் போல்வேன். நம் நாடக மகளிர் இல்லத்தின்கண் நுழையாத மர பினள் ஆவேன்.

## காட்சி 2

**இடம்:** அரண்மனை.

**காலம் :** பகல்.

**உரியோர்:** சித்திராபதி, அவளைச் சார்ந்தோர், உதயகுமரன்.

ஒரு பெண்: ஓ! அரசகுமரன் அமர்ந்திருக்கும் இடத்தின் அழகினை என்னென்பது! பூத்து வண்டுகள் ஆரவாரிக்கும் மரநிழல் சூழ்ந்த மணல் முன்றில், பவளத்தூண், பசும்பொற்சுவர், ஒளிவிளங்கும் முத்துக்கள் பொருந்திய சித்திரவிதானம், பளிக்கு மண்டபம், சிங்கம் ஏந்திய செழுமலர் அரியணை! இருபாலும் மங்கையர் வீசும் வெண்கவரிகள்! உதயகுமரனது சிரித்த முகச் செவ்வியை நோக்குங்கள்.

உதயகுமரன்: சித்திராபதியே! வருக! மாதவியும் மணிமேகலையும் கொண்ட தவக் கோலங்கள் தவறின்றி யுளவோ?

சித்திராபதி: அரசகுமர! மாதவி யீன்ற ஒரு மணிக் காஞ்சி நாடகம் விரும்ப நன்னலம் நிறைந்தது.

உதயகுமரன்: (ஒரு புறமாக) ஓ! மாதவி-குருக்கத்திக் கொடி; மற்றொரு பொருள் மாதவி மடந்தை. மணிக் காஞ்சி, அழகிய காஞ்சிமரம்-மணிமேகலை! மணிமேகலை செவ்வியுற்றனள் என்பது, குறிப்பாகக் கூறும் பொருள்.

சித்திராபதி: அரசகுமர! உதய குமரன் எனும் ஒரு வண்டு உணீஇய, விரைவொடு வந்தேன். அக் காஞ்சி, உலக அறவியி லுள்ளது. அரசே! நின் கண்ணி வாழ்க.

உதயகுமரன்: சித்திராபதி! நயம் மிக்க நின் சொற் பொருளுணர்ந்தேன். கடலிற் கப்பல் உடையப் பெற்ற

வன் தெய்வம் பெற்றாற் போலச் சிறந்த நின் துணை எய்தினேன். பண்டு உவவனத்தின் மருங்கு பளிக் கறையின்கண், நீ கூறிய காஞ்சியைக் கண்டதுண்டு. இது பாவையென்று எண்ணி அகன்றதுண்டு. அங்கு, பவளவாயினுள் தோன்றிய முத்துக்கள் ஆருயிர் தளிர்க்கப் புன்முறுவல் பூத்ததுண்டு. குவளையையும் வேலினையும் வென்ற கருங் கயற் கண்கள், அம்மா நின் அறிவு வேறு பட்ட நிலையை அவள் காதின்கண் ஓடி உரைத்ததுண்டு. அப்பளிக்கறையிற் றோன்றிய பவளப் பாவை என் உள்ளம் கொண்டு ஒளித்ததுமுண்டு.

சித்திராபதி: அரச குமர! இத்தகைய நின் அமிழ்த மொழிகளைக் கேட்க யான் செய்த தவம் என்னையோ! என் கருத்து நிறைவேறியது.

உதயகுமரன்: சித்திராபதி! இப்பால் நிகழ்ந்தொன்றைக் கூற என் உள்ளம் வருந்தி அயர்கின்றது. அத்தகைய காட்சியோடு நள்ளிரவில் அயர்ந்திருந்த என் முன்பு, பொன் போன்ற மேனியினையுடைய ஒரு பெண் தெய்வம் தோன்றி, "அரச குமரனே! உங்கட்கு வேண்டும் செங்கோலின் சிறப்பினின்றும் நீ அகலல் ஆகாது. நின்னாற் காதலிக்கப்படும் மணிமேகலை, தவநெறியிற் செல்லும் பெண். அவள்மீது, நீ கொண்ட எண்ணத்தை மறப்பாய்" என்று சொல்லி மறைந்தது. அது தெய்வமோ வேறு யாதோ அறிந்திலேன்.

சித்திராபதி: (முறுவலுடன்) அரச குமரனே! நீ ஒருத்தி கனவிற் கூறியதனைப் பொருள் செய்யாது விடுவாயாக. அது தெய்வ மகளாயினும் ஆக; பிறராயினும் ஆக. தேவர்கள்பால் நிகழ்ந்த காமக் கள்ளாட்டின் செயல்கள் எத்தனையோ பல அன்றோ. தேவர்களுக்குத் தலை

வனுடைய இந்திரன் பெருமை, யாம் அறியாததொன்றே. மாதவன் மடந்தைக்கு வருந்தி ஆயிரங் கண்பெற்றோன் அவனேயன்றோ? அக்கினிதேவன் அரும்பெரும் சிறப்பினை என்னென்பது? அருந்திறல் முனிவர் எழுவர் பெண்டிரை அவன் விரும்பிப் பிதற்றியதும், அந்த அக்கினியின் மனையாள் சுவாகாதேவி அவன் கருத்தினை யுணர்ந்து, அம் முனிவர் மனைவியர் பலர் வடிவத்தைத் தனித்தனியே கொண்டு அவன் வேட்கையைத் தணித்ததும் நாம் கேட்டறியோமோ? அரசகுமரனே! கற்புடைப் பெண்டிர் நற்றிறங்கள் போற்றத்தக்கன. அவர் கன்னிப் பருவத்தும், மணத்தின் பின்னரும் தம் மனத்தைக் காத்திருப்பவர். கணவன் இறப்பிற் றாமும் இறப்பர். உள்ளத்தைக் கற்பு நெறியிற் காத்து பிறரைக்கண்ணாலும் நோக்காது, கொண்டோனைதெய்வமாகக் கொண்டு ஒழுகும் இயல்பினர். அத்தகையரிடத்து உள்ளத்தைச் செலுத்தல் முறையாகாது. ஆனல், யாங்கள் அத்தகைய குலமகளிர் மரபிற்றோன்றியவர்களா? எங்கள் குலமரபினைக் கூறுவேன்.

நாங்கள் அரங்குகளில் ஏறிப் பலருங் கண்டு காதலிக்க ஆடல் பாடல் இயற்றுவோம். அரங்கன் அம்புகளைப் பொழியக் கண் வலை வீசுவோம். அவ் வலையிலகப்படும் செல்வர்களைக் கொண்டு எம் மனையிற் புகுவோம். இனிய மொழியால் அவர்களுடைய பற்பல பொருள்களையும் பற்றிக் கொண்டு அவர்களைப் பண்டை நெறியிற் புக விடுப்போம். அரசே! இதுவே எங்கள் குலமரபு ஆனமையின், இம் மரபினில் தவறிப் பொய்க் கோலம் கொள்வார்களைப் பிணித்து, அவர்களை அவர்தம் மரபிற்குக் கொணர்வதன்றோ செங்கோன் முறைமை!

உதயகுமரன் : சித்திராபதி! நன்று. எனது உள்ளம் நின் இனிய சொல்லால் மாறி விட்டது. இனி ஆவன செய்வேன்.

காட்சி 3

**இடம் :** உலக அறவி.

**காலம் :** பிற்பகல்

**உரியோர் :** உதயகுமரன், மணிமேகலை.

உதயகுமரன் ; ஓ! அதோ மணிமேகலை நிற்கின்றாள். என் நெஞ்சம் கவர்ந்த வஞ்சக் கள்வி. பட்டினிவிட்டுண்ணும் விரத வாழ்க்கையை அடைந்தது என்னே? இரந்துண்ணுதலை மேற்கொண்டது என்னே? தனியே நிற்கின்றாள். யான் நேரே சென்று கேட்டு அறிவேன். (அணுகல்) மணிமேகலை! நீ நற்றவம் புரிய உள்ளம் கொண்டது என்ன காரணம் கருதியோ?

மணிமேகலை : (தனியே) ஓ! இவர், என் கணவராகிய இராகுலர். இவர் அடி தொழல் வேண்டும். அந்தோ! என் உள்ளம், நிறையில் நில்லாது இவரிடம் செல்லுகின்றதே! இவர் பழம் பிறப்பிற் கணவராயிற்றே, இவர் என்பால் நெருங்கி என் கையைப் பற்றினும், காதல் மொழி கூறினும், அவற்றைத் தடுத்தல் நன்னெறியாகாதே? என்செய்வேன்! அரசகுமர! நீர் சான்றோர்பால் நீதிகளைக் கேட்டறிந்த சிறப்பினிர் ஆவீர் என்று எண்ணி, நீர் கேட்டதற்கு மறுமொழி கூறுவேன். மக்கள் யாக்கையாகிய இது, பிறத்தலும் மூத்தலும் பிணிப்பட்டு வருந்தலும் இறத்தலும் உடையதன்றோ! இடும்பைகளுக் கெல்லாம் கொள்கலமாவதன்றோ! ஆகவே யான் மிக்க நல்லறம் புரிதலை விரும்புவேனாயினேன். வீரம் மிக்கோராய ஆடவர்க்கு, மெல்

லிய மகளிர் கூறும் பேரறிவும் உண்டோ? யான் கூறத் தக்கன கூறிவிட்டேன். கேட்டனிர். இனி, நீர் விரும்பியதைச் செய்வீராக.

## காட்சி 4.

**இடம்:** சம்பாபதி கோயில்.

**காலம்:** அந்தி.

**உரியோர்:** மணிமேகலை, (காயசண்டிகை உருவில்,) உதயகுமரன்.

மணிமேகலை: சம்பாபதித் தாயே! யான் அரச குமரனை நீங்கி வந்துவிட்டேன். ஆடவர் செயல்களை அறிவோரா யாவர்? எனது ஒழுக்கத்தினைக் காப்பாற்றுதல் நின் கடனேயாகும். தேவி! யான் மந்திரம் ஓதிக் காயசண்டிகையின் உருப்பெற்று வெளியே செல்ல எண்ணுகின்றேன். (அவ்வாறு செல்லல்.)

உதயகுமரன்: ஒ காய சண்டிகையா! மணிமேகலையின் பாத்திரம் இவள் கையில் உள்ளதோ! நல்லது. நான் மணிமேகலையைக் காணக் கோயிலினுள் செல்கின்றேன். ஓ! இதென்ன எங்கெங்கும் தேடினேன். மணிமேகலையைக் காணவில்லையே. ஓ! தேவி! சம்பாபதியே! இங்குள்ள பாவைகளுள் மணிமேகலை யார் என்று யான் அறிவேனாக. அங்ஙனம் அறியுமாறு நீ அருள் செய்யாவிடின், பல நாளாயினும் இங்கேயே வரங்கிடப்பேன். தேவியே! இன்னும் கேட்பாயாக! இக் கோயிலுட் புகுந்த மணிமேகலையின் செயலினை, யான் என்னென்பேன்! யான் மதக்களிறாக வந்தேன். அவளுடைய பவளச்செவ்வாய், தவள வெண்பல், செங்கயல் நெடுங்கண், சிலைப்புருவம், என்பவைகளே அக் களிற்றை அடக்கும் கருவிகள். அவளுடைய ஆடல்

பாடல் கல்விச் சிறப்பே பாகர்கள். அவளது இனிய வாய்மொழி, அதனை வயப்படுத்தும் யாழொலி. இவற்றைக்கொண்டு களிற்றியானையாகிய என்னை, வேட்டமாடி அகப்படுத்திக்கொண்டனள். தேவியே! அத்தகைய மணிமேகலையை ஒழியப் போகேன். உன் திருவடிகளைத் தொட்டுக் கூறும் சூளுறவு இது.

சித்திரத்திற் பொருந்திய தெய்வம்: உதய குமர! நறிய மலர் மாலை யணிந்த அரச குமரனே! எம் தேவியின் முன் கூறிய சூளுறவு நன்னெறிப்பட்டது ஒன்று அன்று. நின் மொழிகள் பொருள் அற்றன. அதனை விடுத்து ஏகுக.

உதயகுமரன்: ஆ! இது என்ன விந்தை! அழகிய சித்திரம் ஒன்று தெய்வமுற்று, இங்ஙனம் கூறுகின்றது. எங்கும் தெய்வ நிகழ்ச்சிகள்! முன்போ, மணிமேகலைபால் எழுந்த எண்ணத்தை நீ மறப்பாயாக என்று கூறிச் செங்கோல் முறையை வலியுறுத்திச் சென்றது ஒரு தெய்வம். மணிமேகலை உலகத்தே பசி நோயை ஒழியக் கையில் ஏந்திய பாத்திரமோ எடுக்க எடுக்கக் குறையாது வளரும் தெய்வத் தன்மை வாய்ந்துளது. இப்போதோ இச் சித்திரத் தெழுந்த தெய்வம், எனது செயல் தன் தேவியின் திருவடியில் பிழைபுரிந்ததாகும் என்கின்றது. இந்நிலைகளையெல்லாம், மணிமேகலையின் செயலைக் கண்டு, பின்னர் அறிந்து கொள்வோம்.

### காட்சி 5

**இடம்:** காவிரிப்பூம்பட்டினத்தெரு.

**காலம்:** இரவு.

**உறுப்பினர்.** உதயகுமரன், வழிச்செல்வோர்.

வழிச்செல்வோர்: ஓ! இது என்ன கரிய இருள். உல

கெல்லாம் தன் வயிற்றினுள் அடக்கி விட்டதே; பகல் எனும் அரசனையும் ஒட்டி விட்டதே! ஓ! இது இருள் அன்று. ஒரு பெரிய யானையே. இந்த யானை வருகின்றது எனும் பறை யொலி இந்த அந்தியில் எழும் ஒலி. அதோ! அந்த அந்திக் காலமே நெற்றி. அதோ, வானளாவிய பிறையே மருப்பு. பாகர் யாரும் இலர். எங்கெங்கும் தாவும் விருப்பமாகிய துதிக்கை. பூக்களின் மணமாகிய மதம். ஓ! இத்தகைய இரவில் அரசகுமரன் தனியே இங்கு நின்றும், அரண்மனை செல்வதென்னையோ? ஓ! ஏதோ காதற் றீயில் வேகின்றனன் போலும். ஆடவரும் பெண்டிரும் கூடி எழுப்பும் இன்னிசைகளை இவன் உள்ளத்தைத் தைக்கும் வேல் போல வெறுக்கின்றானே! உள்ளம் வேகின்றது! நெட்டுயிர்ப்பு, கொல்லன் உலை மூக்கின் ஒலிதான். அந்தோ! என் காரணமோ!

---

# 19-வது சிறைக் கோட்டம் அறக் கோட்டம் ஆக்கியது

## காட்சி 1

**இடம்** : *காவிரிப்பூம் பட்டினச் சிறைச்சாலை*

**காலம்** : *காலை.*

**உரியோர்** : *மணிமேகலை சிறைக்காவலர்.*

மணிமேகலை: ஆ! உதயகுமரர்! இராகுலர்! தவநெறி! நான் இந்த உலக அறவியில் இவ்வுருவோடு தொண்டு செய்துவரின், உதயகுமரர் என்னை ஒரு

நாளும் விட்டு நீங்கார். ஆம்! காயசண்டிகை உருவினை யான் கொண்டு, பசிப்பிணி கொண்ட வறியர்களுக்கு உதவி வருவேன். ஏற்றலும் இடுதலும் இரப்போர் கடன். வறியோர் பசிப்பிணி யுறுவோர் இருக்குமிடங் களைத் தாமாகத் தேடிச் சென்று கொடுத்தல் சிறந் தது. அமுதசுரபியை உள்ளே சென்று எடுத்துக் கொள்வோம். நகரத்தினுட் சென்று உதவி வேண்டு வோர் உள்ள இடத்தினை ஆராய்வோம்.

சிறைக்கோட்டக் காவலர்: அம்மா! நீங்கள் யாவர்? எங்கே செல்லுகின்றீர்கள்?

காய-மணி: ஐயா, நான் காயசண்டிகை என்னும் பெய ரைக் கொண்டவள். யான், யானைத்தீ என்னும் கொடிய பசிப்பிணியால் பல யாண்டு வருந்தினவள். இத்தெய் வத்தன்மை வாய்ந்த பாத்திரத்திலிருந்து எடுத்த உணவினைப் புசித்து அந்நோய் நீங்கினவள். பசிப்பிணி யால் வருந்துகின்றவர்கட்கு அப்பசிப்பிணியைப் போக்கும் அறத்தொண்டு செய்து வருபவள்.

காவலன்: அம்மா! இக்கோட்டத்திலுள்ளவர்கள், மன் னன் திருவடிக்குப் பிழை செய்து, தண்டிக்கப்பெற்ற வர்கள். பசியால் வாடி நிற்பவர்களே!

காய-மணி: நல்லது. சிறையாளர்களே! இதோ இந்த உணவினை ஏற்று உண்டு பசி யொழிந்திடுவீர்களாக.

காவலன்: நண்பர்களே! என்ன காட்சி! என்ன மாட்சி! இந்த அம்மணி கையில் உள்ளது ஒரு சிறு பாத்திரம். இங்குள்ள சிறையாளர்கள் அனைவரும் வயிறு நிறைந்து மகிழ்ச்சி பொங்கி வாழ்த்துகின்றனர். இந்த அரிய தெய்விக நிகழ்ச்சியை நம்மன்னனுக்குக் கூறிவருவேன்.

## காட்சி 2.

**இடம் :** பூஞ்சோலை.

**காலம்:** பகல்.

**உரியோர் :** அரசன், அமைச்சர், தேவி, ஏவலர், மணிமேகலை.

அரசன் : சீர்த்தி தேவி! திருமாலிற்கே மூவடி மண் அளித்த மாவலியின் மரபில் வந்த நின்வாழ்வால், எங்கள் சோணுடு ஒரு தனிச் சீர் பெற்றுளது. ஓ தேவி! என்னே பெரு நாண்! ஆம்! தம் புகழ் கேட்டார் தலை கவிழும் பெரு நாணே? இதோ, இந்தப் பூம் பொழிற் சிறப்பினைக் காண்பாயாக! தேவி! அதோ பார்! மண மலர்ப் பந்தர்!

தேவி: ஆம் நாத! அஃது ஓர் ஆடரங்கு!

அரசன் - அரங்கா? ஆயின் ஏனை அங்கங்கள்?

தேவி: அரசே! தும்பி வண்டின் ஒலி, குழலிசை. மழலை வண்டின் ஒலி, யாழ் இசை. குயில், பாடும் மகள். மயில், ஆடும் மகள்.

அரசன்: தேவி! நன்று கூறினை! ஒரு குறை! அதனை யான் நிரப்புவேன். இதோ என்பால் உள்ள நீயே, அதனைக் கண்டுகளிக்கும் பெடை அன்னம். ஓ! இஃதென்னை! மீண்டும் நாணம். தேவி! அதோ பார்! மணிவண்ணனும், கண்ணபிரானும் நப்பின்னையும் கூடி ஆடும் குரவைக் கூத்தினை!

தேவி: ஆம், உணர்ந்துகொண்டேன். அதோ, அந்த வெள்ளை அன்னச் சேவல், பலராமர்! அந்த ஆண் மயில், கண்ணபிரான். அதோ அந்த மயிற் பேடை, பின்னைப் பிராட்டி.

அரசன்: உன்து அறிவின் மாட்சி, யான் அறிந்தது

தானே! இத்தகைய காட்சி யொன்றினை நீ கண்டு கூறுவாயாக!

தவி: அதோ! ஒரு பெண், தன் பசிய கிளிக்குப் பொன் தட்டிலுள்ள பாலை ஊட்டுகின்றாள்.

அரசன்: அதோ பெண்---மயில். (சற்று எண்ணி) ஆம், அந்த மாங்கனி, அவள் கிளி; அக்கனியின் பாலுள்ள கோங்கம்பூ பாலுடைய பொற்றட்டு. நினது கற்பனைக் காட்சி மகிழ்வுறுத்துகின்றது. இனி என் முறை போலும். தேவி, பெண்டிர் பெருமிதமும், ஆடவர் அன்புடைமையும் என்பன காட்டும் ஒரு காட்சி ஒன்று ஈங்குக் காணலாம். அஃது யாது? தேவி! என்ன நாணம்? வாளாமை!

தேவி: அரசே! மகளிர்க்கு இட்ட ஊசலில் ஒரு பெண் குரங்கு! அவ்வூசலை அதன் கணவன் ஆட்டி மகிழ்தல்! நாத! அப்பெண் குரங்கு, தன் கணவன் விருப்பின்படி அமர்ந்துளதாகும். பெருமிதங் காட்டுவது அன்று.

அரசன்: தேவி! பசிய மூங்கிற்றிரளும், பூத்த வெண்கடம்பும் ஒருசேர நிற்கும் காட்சியினைக் காண்க! கண்ணன் தன் முன்னவன் பலராமனொடு நிற்றல் போலும் காட்சி! நாம் கை குவித்து வணங்குவோமாக! இதோ, நமது அமைச்சர் முதலியோர் வருகின்றனர். வருக, வருக! உங்கள் மகிழ்ச்சி நிலைகள் எத்தகையனவோ?

அமைச்சர்: அரசே! எங்கள் அரசரும் தேவியும் பார்த்துப் பார்த்து மகிழ்ந்து வந்த பல்வகை மகிழ்ச்சி நிலைகளில், அவரவர் உள்ளம் சென்றவிடங்களில், அவரவர் மகிழ்ந்திருந்தனர். ஆடற்கூத்து, நாடகக்கூத்துக்கள், நாடகக் காப்பிய நூல்நய ஆராய்ச்சிகள், யாழ்கொண்டு பண்களை யெல்லாம் முடித்துக் காட்டும் காட்சிகள்,

மத்தள மாண்புகள் காட்டும் வித்தகர் செய்கை, குழலோசை, மிடற்றோசை கூடிவர, தாள அறுதி செய்யும் தனிச் சீர் கேள்விகள் என்னும் இயல், இசை, நாடக நயப்புக்களில் நம் சுற்றங்கள் மகிழ்ந்திருக்கின்றன.

மற்றொருவர்: அரசரேறே! ஒருபால், முத்தங் கோப்பவர்; மாலை கட்டுவோர்; சாந்தம், தொய்யிற் குழம்பு, வேறு நறுமணப் பொருள்கள் என்பவற்றை அணிந்து கொள்வோர்: பொற்கண்ணாடி கண்டு நிற்போர். இத் தகையர் கூட்டத்து மகிழ்ச்சி ஆரவாரங்கள், நீங்கள் கண்டு வந்தன, இடையறாது ஓங்கி நிற்கின்றன.

ஏவலர்: மன்னர் பெருமானே! சேரரும் பாண்டியரும் போருக்கு வந்தவிடத்து, இளங்கோவினால் அவர்களைத் தொலைத்து, அவர்கள் கொடிகளையும் கைப்பற்றிக் கொண்ட மாவண்கிள்ளியே! வீரமும் கொடையும் சிறந்த வேந்தர் வேந்தே! எமது பெருமானே! நீர் ஊழிதோறும் இனிது வாழ்வீராக! நின் பகைஞர்கள் கெட்டு ஒழிவார்களாக! அரசர் பெருமானே! இந்த நகரத்தே காயசண்டிகை யென்னும் ஒரு பெண், யானைத் தீ என்னும் கொடிய பசிப்பிணியால் வருந்தி யலைந்துகொண்டிருந்தவள், இன்று ஒரு பிச்சைப் பாத்திரத்துடன் நம் சிறைச்சாலையினுள்ளே புகுந்தனள். பெருமானே! அப் பாத்திரத்தின் தெய்வத்தன்மையை என்னென்று சொல்வோம்! எடுக்க எடுக்கக் குறையாத அப்பாத்திரத்திலிருந்து, அன்னத்தினை எடுத்து எடுத்து, எங்கள் அரசபெருமானை வாழ்த்தி வாழ்த்திச் சிறைப்பட்டோர் யாவர்க்கும் உணவளித்து உண்பித்தனள். யாவரும் நிறைய உண்டு மகிழ்ந்து ஆரவாரித்திருக்கின்றனர். எம்பெருமானே வாழி! வாழி!!

அரசன்—தேவி! சீர்த்தி! இச்செய்தி கேட்டனையோ? நாம் அப்பெண்ணைப் பார்த்து மகிழ்தல் வேண்டும். ஏவல! அப்பெண் மணியை இங்கு அழைத்து வருக.

ஏவலன்—அரசர் பெருமானே! இதோ, அந்த அம்மணி வந்து விட்டனள்.

காய-மணி—எங்கள் வீரக் கழல் வேந்தனின் பேரருள் வாழ்வதாக!

அரசன்—மிக்க தவத்தினை யுடையாய்! நீ யார்? நின் கையி லுள்ள தெய்வத் தன்மை வாய்ந்த இப்பாத்திரம் எங் ஙனம் நினக்கு எய்தியது?

மணிமேகலை—வென்றி மாலை யணிந்த வேந்தர் வேந்தே! நீடூழி வாழ்வாயாக! யான் ஒரு வித்தியாதரமகள். ஒரு சாபத்தால், என் நிலை யிழந்து, இந்நகரின்கண் அலை கின்றேன். அரசர் பெருந்தகையே! தேவியே! நீங்கள் வாழ்வீர்களாக! உங்கள் நாட்டில் மழை வளம் பெருகி மண்வளம் சிறந்து யாவரும் எத்தீமையு மின்றி எல்லா நன்மையும் எய்தி இனிது வாழ்வார்களாக! அரசே! இது ஒரு பிச்சைப் பாத்திரம். உலக அறவியிலுள்ள ஒரு தெய்வம் எனக்குத் தந்தது. தெய்வத் தன்மை பொருந்தியது. எனது யானைத்தீ யென்னும் பெரும் பசியையும் போக்கியது. பசியால் வாடிய உயிர்கட்கு, அவர்கள் உயிர் வாழ்வினைத் தரும் சிறந்த மருந் தாவது.

அரசன்—காய சண்டிகையே! யான் நினக்குச் செய்ய வேண்டிய உதவிகளைக் கூறுக! அங்ஙனமே செய்வேன்.

காய-மணி—அரசே, சிறைச்சாலையில் உள்ளார்களை, நின் அருள் வழிப்படுத்தி, விடுத்து, அந்தச் சிறைக்

கோட்டத்தினை அறவோர் தங்கும் அறக் கோட்ட மாகச் செய்தருள்வாயாக.

அரசன்—அம்மா! அங்ஙனமே செய்வேன். அமைச்சரே! இந்த அம்மை கூறியபடியே சிறையிலுள்ளாரை விடுத்து, நன்னெறிப் படுத்தி, அங்கே பெருந்தவ முடையோர்களைச் சேர்த்து, அவர்களால் எய்தும் பெரும் பேரருட் பொருளை உலகம் எய்துமாறு ஆவன செய்வீராக.

---

## 20-வது உதயகுமரனைக் காஞ்சனன் வாளால் எறிந்தது.

காட்சி

**இடம்:** சம்பாபதி கோயில்

**காலம்:** மாலை, இரவு.

**உரியோர் :** மணிமேகலை (காயசண்டிகை வடிவுடன்.) காஞ்சனன், உதய குமரன், கந்திற்பாவை, நரை மூதாட்டி.

உதயகுமரன்— நமது நகரில் அண்மையில் நிகழ்ந்த சிறப்பு நிகழ்ச்சிகளை என்னென்பது? காயசண்டிகையுருவினை எய்தி அன்று வந்தவளே நம் மணிமேகலை! அவள் நம் அரசன் முன் சென்றதும், அவள் வேண்டுகோளும், அரசன் அளித்த ஆணையும், வியக்கத்தக்கன! சிறைக் கோட்டம் எய்திய சிறப்பினை என்னென்பது! புத்தன் கோயில்! அறவோர் பள்ளி! அட்டிற் சாலை! உணவருந் தும் சாலை! இத்தகைய சிறப்பு நிலைகளை யெல்லாம் எய்தி விளங்குகின்றதே! அம்மணிமேகலையினை என்

பொற் றேரேற்றி வந்து, அவள் கற்றறிந்த வித்தைகளையும் அவள் கூறும் முதுமொழிகளையும் யான் கேட்டே தீருவேன். அதுபற்றி என்னை அறிவுடையோர் இகழ்ந்து கூறினும், அரசன் வெகுளினும் பொருள்செய்தற் கில்லேன். நன்று. அந்த உலக அறவியினுட் செல்வேன்.

காஞ்சனன்—அந்தோ! காயசண்டிகையே! இப்பால் நீ எத்தகைய துயரங்கள் உற்றனையோ! முனிவன் இட்ட சாபத்தின் எல்லை முடிந்து விட்டதே! பசிப்பிணி ஒழிந்திருக்குமே. பூதசதுக்கம், பூமலர்ச்சோலை, மாதவரிடங்கள், மன்றங்கள், அம்பலங்கள், எங்கெங்கும் தேடி வருகின்றேனே; எங்கும் கண்டிலேனே; என் செய்வேன். ஓ! இதென்ன புதிய காட்சி! முன்பு சிறைக் கோட்டமா யிருந்த இது அறக்கோட்டமாகிப் பல்வகைச் சிறப்பும் கொண்டு விளங்குகின்றதே. ஓ! அதோ சம்பாபதி கோயிலின் முன்பு காயசண்டிகை! காயசண்டிகை! வாழி! பசிப்பிணி நீங்கி விட்டது போலும். ஆயினும் முகத்தோற்றம் சிறிது வேறுபடுகின்றதே! உள்ள நிலை, உலகியல் நிலையைக் கடந்து அருளற நிலையை மேற்கொண்டுவிட்டது போன்ற ஒரு காட்சி முகத்தில் தோன்றுகின்றதே! காயசண்டிகை இஃதென்னை. நின்கையில் ஏந்திய பாத்திரம் ஒன்றேயாயினும் அதன்கண் உள்ள உணவு எடுக்க எடுக்க வளர்ந்து பலர்க்கும் பசிப்பிணியை ஒழிக்கின்றதே! யானைத் தீ நோயினைப் போக்க, வானவர் எவரேனும் நினக்கு இதனை யளித்தனரோ? என்னை! காயசண்டிகை வாளாவிருக்கின்றனை!

(அவள் உதயகுமரன்பால் ஏகல்)

காயசண்டிகை வடிவத்தில் மணிமேகலை—உதயகுமர! இந் நரைமூதாட்டியின் முன் நிலை, இது போதுள்ள நிலைகளை நீ அறிந்துகொள்வாயாக. இக் கூந்தல் முன்பு கருமணல் வண்ணம்; இது போது, வெண்மணல். முன்பு பிறை நுதல், இப்போது திரை நுதல், விற்புருவம். இப்போது இருல் மீனின் வற்றல் கழுநீர்க் கண்கள், வழுநீர்ப் பண்டம். குமிழ் மூக்கு, உமிழ் சீ ஒழுக்கு. நிரை நிரையான பற்களாம் முத்துக்கள், சுரையின் வித்துக்கள். இலவிதழ்ச் செவ்வாய், புலவுப் புலால். இன்னனைய தோற்றங்கள் பலவற்றையும் காணாய்! பூவினும், சாந்தினும், ஆடையினும், அணியினும், அமையும் புற அழகினைக் கண்டு மயங்காது, மக்கள் யாக்கையின் உண்மையினை யுணர்ந்து, செந்நெறிச் செல்வாயாக.!

காஞ்சனன்—ஓ! இஃதென்ன விந்தை! காயசண்டிகையின் வேறுபாட்டினை. யான் என்னென்பது. தன்னை யான் பலபடியாகப் பாராட்டுகின்றேன். அவளோ, என் சொற்களின்பயனை உளங்கொள்வதாக, உணர்ந்திலேன். யானோ, அவள் பின் செல்கின்றேன். அவளோ, பிறன் பின் செல்கின்றாள். என்னைப் பிறன் போல நோக்குகின்றாள். அவன்பால் அருளுள்ளம் உடையள் ஆகின்றாள். அவனுக்குப் பேரறிவுடைய முதுமொழிகளை எடுத்துக் கூறுகின்றாள். கூறினும் என்? கூறுங்காற் காணும் முறுவற் குறிப்பும், பார்வைக் குறிப்பும், காதற் குறிப்புடன் கூடியன போலக் காண்கின்றனவே. இவன் இவட்குக் காதலன்போலும். ஆகவேதான், இவள் சாபநீக்கம் பெற்றும், என்பால் வாராது, இங்கே தங்கி விட்டனள் போலும்! (தனக்குள்) நல்லது! நான் இங்கு ஒளிந்திருந்து இன்னும் நிகழ்வனவற்றை யெல்லாம் உணர்ந்து, பின் ஆவன செய்வேன்.

உதயகுமரன்—மணிமேகலையே, இக் காயசண்டிகையாய் இப்பிச்சைப் பாத்திரத்தை ஏந்தி நிற்கின்றவள் என்பது திண்ணமே. அவள் கூறும் அறவுரைகளெல்லாம், அம்மா! என் உள்ளத்தை மயக்கும் காதலுரைகளாக அன்றோ மாறுகின்றன! இங்கே வந்திருக்கும் புதியன் யாரோ? இவன் இவள்பால் பழைய நிகழ்ச்சிகள் சில கூறுவது என்னே? எனக்கு ஒன்றும் புலனாக வில்லை! இவன் இங்கு இருத்தலின், இவ்விரவில் இவள் புறம் போக இயலாதவளாவள். இவளது செயலை நான் இடையாமத்தில் வந்து அறிவேன். எனக்கு இப்பொழுது யாரும் துணையிலர். தென்றலாகிய தேர்ப்பாகன், மீனக் கொடியோன், கரும்பு வில்லன், சிறந்த அரும்புகளாய அம்பினன், இவன்தான் என்னை விடாது தொடர்ந்து வருத்துகின்றான். வருக.

## காட்சி 2

**இடம்:** சம்பாபதி கோயில்

**காலம்:** இடையாமம்

**உரியோர்:** காஞ்சனன், கந்திற்பாவை.

காஞ்சனன்:—ஓ! நேற்றுப் பகலில் இங்கு நின்று இக்காய சண்டிகையுடன் அளவளாவிய உதய குமரன், இதோ இந்நடு இருளில் வருகின்றான். இந்த இருவரும் காதல் கொண்டவர் என்பது நன்கு புலனாகின்றது. நல்லது, இவனை விண்ணுலகிற்குப் போக்குவேன். (வெட்டி வீழ்த்தல்) இக்காய சண்டிகையைக் கைக்கொண்டு நான் அந்தரம் புகுவேன்.

கந்திற்பாவை:—ஏ காஞ்சன! நீ அம்மாதின்பால் அணுகாதே! அணுகாதே! அம்மாது, நின் காயசண்டிகை

யல்லள்: காயசண்டிகையின் வடிவத்தைக் கொண்ட மணிமேகலை யெனும் தவநெறிச் செல்வி. நின் காய சண்டிகையின் கதியினை என்னென்பேன்! அவள் சாபம் நீங்கியவுடன், நின்பாற் செல்ல, வான்வழி ஏகினள். அந்தரநெறியிற் செல்வோர், துர்க்கை தேவி எழுந்தருளும் விந்தமலையின் மேலே செல்லாராய், விலகிச் செல்ல வேண்டு மன்றோ! அங்ஙனம் ஏக அறியாது, அம்மலையின் மேலே சென்ற நின் காயசண்டிகையை அம்மலையைக் காவல் புரியும் விந்தாகடிகை யென்பவள் தன் சாயையினால் இழுத்துத் தன் வயிற்றுனுள் அடக்கி விட்டாள்! காஞ்சனனே! நின்னாற் கொல்லப் பட்டவன், இவ்வூர் அரச குமரனாகிய உதயகுமரன். இங்குள்ள, காய சண்டிகையின் வடிவம் பெற்ற மணிமேகலை யென்பாள் அவனது முற்பிறப்பில் மனைவியாகியவள். இந்நிலையினை யடைந்திருப்பாளை, நீ நின் மனைவியென்று எண்ணிச் செல்லாதே. காஞ்சன! இவ் உதயகுமரனைக் கொன்றது, ஊழ்வினையாயினும், ஆராயாது நீ செய்த செயல், தீவினையே யாகும். அத் தீவினை நின்னை அகலாமல் வந்து பற்றும்.

காஞ்சனன்: அந்தோ! என் தீவினைகள் இருந்தவாறு என்னே? மனைவியை இழந்தேன்! ஏதிலனைக் கொன்றேன்? இனி என் செய்வேன்!



# 21-வது கந்திற்பாவை வருவ துரைத்தது

## காட்சி 1

**இடம் :** சம்பாபதி கோயில்.

**காலம்:** இரவு.

**உரியோர் :** (கந்திற் பாவை.) மணிமேகலை.

மணிமேகலை : (படுக்கையினின்றெழுந்து) ஓ! இஃதென்ன பாவம்! இங்கு வந்த விஞ்சையன், என்னைத் தன் மனைவி காஞ்சனை யென்றும், அவளது கள்ளக் காத லன் உதயகுமரன் என்றும் நினைந்து, அந்தோ! இக் கொடிய தீவினையினைச் செய்துவிட்டனனே! உதய குமர! இராகுல! நினக்கு நேர்ந்த இத் துன்பினை என் னென்பேன்! கந்திற்பாவை அவ்விஞ்சையனுக்குக் கூறிய அற்புதக் கிளவிகளை என்னென்பேன்! அந்தோ! இந்நிகழ்ச்சிக்குக் காரணமாக இருந்தது, இவ் வேற்று வடிவ மன்றோ? இவ்வடிவம் கெடுவதாக.

(காயசண்டிகை வடிவொழித்துத் தன் உருக்கொண்டு) உதயகுமரனை நோக்கி (என் ஆருயிர்க் காதல!) முற்பிறப்பில் திட்டிவிடம் எனும் பாம்பு நின் உயிரினைப் போக்க, தீச்சுடரில் இறங்கி வீழ்ந்து என் உயிரினையும் போக்கினேன். இப்பிறப்பில் உவவனத்தின்கண் நின்னைக் கண்டகாலை, என் உள்ளம் நின்பால் அடைந் தது. அதுபோது, அதன் காரணத்தை யான் உணர்ந் திலேன். நம் பிறவியினை நீக்கியருள எண்ணிய மணி மேகலா தெய்வம், என்னை மணிபல்லவத்தின்கண் சேர்த்து, புத்த தேவனது திருவடிப் பீடிகையைக்

காட்டி, என் பிறப்பினை அறிவித்து, உன் பிறப்பு முத லிய எல்லாவற்றையும் கூறியருளியது. அந்தோ! பின்பு, யான் நின்னைக் கண்டு,

"பிறந்தோர் இறத்தலும் இறந்தோர் பிறத்தலும்
அறந்தரு சால்பும் மறந்தரு துன்பமும்"

நினக்கு உரைத்து, நின் இடர்களை ஒழிக்கவே, காய சண்டிகை வடிவானேன். அந்தோ! காதல! இங்ஙனம் கொடிய தீவினையால் இறந்தனையோ! காதல! இனி என்று எங்கு நின்னைக் காண்பேன்! ஓ! அவ்விஞ்சைய னுக்கு அறிவுறுத்திய கந்திற்பாவை! (வணங்கல்)

கந்திற்பாவை: மணிமேகலை! உதயகுமரன்பால் நீ செல் லாதே! செல்லாதே! மாதே, நினக்கு இவன் கணவனாக இருந்ததும், நின் மனதிற் கினிய இவனுக்கு நீ மனைவி யாக இருந்ததும், பண்டும் பண்டும், பலப்பல பிறப்புக் கள் உள்ளன. நீ உணர்ந்துகொண்ட முற்பிறப்பொன் றே அல்ல. மாதே! தாழ்வினையும் தடுமாற்றத்தினையும் தரும் பிறவித் தோற்றங்களின் கொடுமைகளை யுணர்ந்து அவற்றின் நீங்க முயல்கின்ற தவச் செல்வியே! நீ மீண் டும் பற்றுள்ளம் கொண்டு பிறவித் துன்பங்களை எய் தாதே!

மணிமேகலை: கந்திற்பாவாய்! இந்த அம்பலத்தின்கண் பொய்யாத நாவோடு பொருந்தி யருளும் தெய்வம் ஒன்று உண்டென்பர். அது நீயே யாதல் இதுபோது உணர்ந்தேன். நின் திருவடிகளை வணங்கினேன். தெய் வமே! இந்த உதயகுமரன் முற்பிறப்பில் திட்டிவிடத் தால் உயிர்விட்டதும், இன்று அக் கொடிய விஞ்சை யன் வாளிற்கு இரையாயதும் ஆகிய இவற்றின் கார ணத்தை, யான் அறியாது மயங்குகின்றேன். அருள் கூர்ந்து எனக்குத் தெரிவிப்பாயாக.

கந்திற்பாவை : ஆயிழாய்! கேட்பாயாக! பிரம தருமன் எனும் முனிவர் ஒருவர், காயங்கரை யெனும் ஆற்றங் கரையிலிருந்து புத்ததேவன் வருகையைக்கூறி, மயங் கிய மக்களின் மன இருளைப் போக்கி வருவர். அவர் முற்பிறப்பில் ஒரு அமையம் உங்கள்பால் வந்தார். நீங் கள் அவரை வணங்கி, அடிகளே, காலை உணவினை இங் குச் செய்தருளவேண்டும் என்று வேண்டி, அவர் இணக்கம் பெற்று, அதற்கு ஆவன செய்ய உங்கள் மடைத் தொழிலாளனுக்கு ஆணையிட்டீர்கள். அவன் தனது தளர்ச்சியால் மடைக்கலத்து வீழ்ந்து அதனைச் சிதைத்திட்டான். அதனை யுணர்ந்து முனிவர்க்குச் செய் யலாகும் தொண்டு தவறியதால் வரும் தீமைகளை எண்ணி வெகுண்ட நின் கணவன் இராகுலன், அவனைத் தன் வாளால் வெட்டி வீழ்த்தினன். அத்தீவினை இராகு லனைப் பற்றிக்கொண்டது. ஒருவர், மணிமேகலையே! அறத்தினைப் புரியும்காலை, அதன்பொருட்டுச் செய்யும் தீய காரியங்களை இறைவன் பொறுத்தருள்வான் என் பதும், அவற்றால் தீவினை விளையாது என்பதும் அறி யாமை யாகு மன்றோ? ஒரு தீவினை எக்காரியத்தால் நிகழ்ந்ததாயினும் அதன் பயன் வந்துறுங்காலை, அதனை இயற்றிய உயிர் அப் பயனை அடைந்தே தீரும். அத் தீவினை அடுத்த பிறப்புக்களிலும் வந்து எய்தினும் எய் தும். மணிமேகலை! இங்ஙனமேதான், முற்பிறப்பில் மடைத்தொழிலாளனைக் கொன்ற நின் கணவனுக்கு முற்பிறப்பிலும் இப்பிறப்பிலும் இத்தகைய துன்பங்கள் நேர்ந்தன.

மணிமேகலை : தெய்வமே! இனி நிகழவனவற்றை அறிய என் உள்ளம் விரைகின்றது. உரைத்தருள்க!

கந்திற் பாவை: மணிமேகலை! இந்நகர் வேந்தன், தன் மகன் நின் காரணமாக இறந்ததை முனிவர்களால் உணர்வான். உணர்ந்து நின்னைச் சிறையில் இடுவான். ஆயினும், அவன் பெருந்தேவி, நின்னைச் சிறையினின் றும் நீக்கித் தன் காவலில் வைத்துக்கொள்வாள். இந் நிகழ்ச்சிகளை உணர்ந்த மாதவி, அறவண அடிகள் திரு வடிகளை வணங்கி, நினக்கு எய்திய தீங்கினைப் போக்கி யருள வேண்டுவாள். அறவண அடிகளும் மாதவியும் பெருந்தேவிபால் வந்து, உண்மை நிகழ்ச்சிகளை எடுத் துக் கூற, அத் தேவி தன் அன்பிற் குரியளாய நின்னை அக்காவலினின்றும் நீக்கி வைப்பாள். மணிமேகலை! அப்பால், நீ அறவணவடிகளை வணங்கி, ஆபுத்திரனாகிய அரசனிடம் செல்வாய். அவனுடன் சென்று தரும சாவகன்பால் அறவுரைகளைக் கேட்டு, மணிபல்லவத் தீவு செல்வீர்கள். அரசன் கலத்தின் வழியாக வர, நீ விசும்பின் வழியாகச் செல்வாய். பின்னர் அம் மன்னன் தீவதிலகையினால் தன் வரலாற்றினை உணர்ந்து, தன் நாட்டிற்கு மீள்வன். நீ ஓர் அருந்தவன் வடிவுகொண்டு வஞ்சிமாநகரம் செல்வாய். அங்கு, எல்லா உயிர்களையும் முறைமையாகப் படைத்த முதல்வனே இறைவன் என்பார்களும், பிற உரு வங்களைத் தோற்றுவிப்பான், தனக்கென உரு இல்லா தவன், என்போனே இறைவன் என்பார்களும், நோன் புகளே தொடர்புகளை அறுத்து இன்ப உலகம் தரும் என்பார்களும், இவ் வுலகெலாம் பூதங்களின் விகா ரங்களாலானவை என்று கூறுவோர்களும், தத்தம் சமயக் கொள்கைகளைக் கூற, நீ கேட்டு உணர்வாய். அவருள் இறைவனுமில்லை, இறந்தோர் பிறவார், அறத் தால் வரும் பயன் யாதும் இல்லை என்பாருள் ஒருவனை

நோக்கி, நீ மறுபிறப்புண்டு என்பதனை நேரிற் கண்டறிந்தனை யாகலின், இகழ்ந்து சிரிப்பாய். அது கண்ட அவன் எனது உண்மைகளைக் கேட்டு இகழ்கின்றாயே; அவற்றின் மாறாக நீ அறிவன உளவேல், எனக்குக் கூறுவாயாக எனக் கேட்பான். நீ உண்மைப் பொருள்களைக் கூறுங்கால், அவன் கேட்டு அவைகளெல்லாம் கனா மயக்கம்; உன்னை மணிபல்லவத்திற்குக் கொண்டு சேர்த்த மணிமேகலா தெய்வத்தின் சூழ்ச்சிகள், என்று அவன் கூற, நீ அயர்ந்து ஒழியாது மீண்டும் அவன் கூற்றினை மறுப்பாய்.

மணிமேகலை! நீ தீவினை எங்ஙனமும் வந்து அடைதலும், அதனாலே பிறப்புறுதலும், உண்மையே யென்று தெளிவா யன்றோ? ஆகவே அவர்கள் மயக்க உரைகளை விட்டு அகல்வாயாக. மாதே! மற்றும் கேளாய். மரம், மண், கல், பாவை என்பவைகள் தாமாகவே பேச மாட்டா என்பதனை நீ அறிந்துளாயன்றோ? அறியாய் ஆயின் அதனைக் கூறுவேன் கேட்பாயாக. இம் மூதூர்களிலுள்ள தேர் வீதி, தேவர் கோட்டம், முதுமர நிலைகள், முதுநீர்த் துறைகள், பொதியில், மன்றம் முதலிய இடங்களில், நகர்க் காவலைக் கருதி அறிஞர்கள் நன்கு எண்ணி, மண், கல், மரம், சுவர் இவைகளில் தெய்வங்களை யமைக்க, அத் தெய்வங்கள் அவ்வவ் விடங்களிலமர்ந்து, மக்களைப் பாதுகாத் தருளி, உற்ற இடத்து அவர்களிடம் வேண்டுவன உரைப்பது முண்டன்றோ? இவ் வுண்மைகளை யுணர்ந்த நின்னை, அன்னோர் மயக்க உரைகள் என் செய்ய வல்லன?

மணிமேகலை! என் வரலாற்றினையும் கூறுகின்றேன்; கேட்பாயாக. யான் பெருந் தெய்வ கணங்களில் உள்ளவன். துவதிகன் என்னும் பெயருடையேன்.

இப்பழைய தூணில் மயன் என்பான் எனக்கு அமைத்த இப்பாவையை விட்டு யான் ஒருபொழுதும் அகலேன். என்நண்பன் சித்திரசேனன் எனும் கந்தருவன். அவனும் யானும் பல இடங்களிலும் சென்று விளையாடுவோம். இந்நிகழ்ச்சிகளை இவ்வுலக மக்கள் எங்ஙனம் அறிவார்களோ! அம்மா! மக்கள் அறிவு வானவர்க்கும் எய்தாதுபோலும்! அந்நிகழ்ச்சிகளை யெல்லாம் எங்களுடன் போந்துஉணர்ந்துகொள்வார்போல எங்கணும் எழுதி, ஆங்காங்குப் பூமாலையிட்டு நறும்புகையெடுத்து, என் நலங்களைப் பலவாறு பாராட்டுவர். மாதே! யான் ஆங்காங்கெல்லாம் தோன்றி அவரவர்கட்கு வருங்கால நிகழ்ச்சிகளையெல்லாம் கூறிவருவேனாயினேன். தெளிவாயாக.

மணிமேகலை: பாவையே! நின் தெய்வமொழிகளை யான் தெளியேனல்லேன். எனது வருங்கால நிகழ்ச்சிகள் யாவற்றையும் இறுதிவரைக் கூறியருள்வாயாக.

கந்திற்பாவை: நல்லாய், காஞ்சிமாநகரில் மழைவளம் கரக்க, மன்னுயிர் வருந்தும். அது கேட்ட நீ ஆருயிர் மருந்தாகிய நின் தெய்வப் பாத்திரத்தினைக் கையிற் கொண்டு அங்கே செல்வாய். நின் அன்னையருடன் அறவண அடிகளும் ஆங்கிருப்பர். அந்த அறவண அடிகள் அருளால் நினது ஆண்வேடத்தை நீக்கி, நின் இயற்கைத் தவ வடிவையடைவாய். பின்னர்ப் பஞ்சம் நீங்க, மழைவளம் பெருகினொத்த நினது அமுதசுரபியை ஏந்தி, அரிய உயிர்களைப் பாதுகாப்பாய். அவ்வூரில் நின்னால் பல அரிய நிகழ்ச்சிகள் உளவாம். நீ அங்குச் சென்று அறவண அடிகளிடம் வஞ்சி நகரிற் கேட்ட பற்பல சமய உண்

மைகளைக் கூறுவாய். அது கேட்ட அவர், யான் புத்த தேவன் தோன்றுமளவும், பல பிறவிகளை யெடுத்துத் தவம், தருமம், முதலாய அறநெறிகளை உயிர்கட்கு உரைத்துப் பாவம் அகலவும் இன்பம் ஓங்கவும் அறத் தினைப் பரப்பி அளவற்ற சித்திகளைச் செய்துகொண்டு இங்கு இருப்பேன். மணிமேகலை! நீயும் நின் அன்னை யரும் குறைவின்றி வாழ்வீராக! உன் உள்ளத்து நிக ழும் அருளறம் ஓங்கி வளர்வதாக என்று உரைத் தருள்வார். மாதே! நீ அம்முனிவர் கூறியபடியே ஒழுகி, நல்லறம் பலவும் செய்திருந்து, காஞ்சியில் இப் பிறப்பினை ஒழிப்பாய். பின்பு, நீ மகத நாட்டில் பல பிறப்புக்களை எய்துவை. அவைகள் யாவும் ஆண் பிறப்புக்களாக இருக்கும். இறுதியில் புத்த தேவனுக்கு முதல் மாணாக்கனாகிப் பற்றுக்களை நீக்கி உய்தி யடை வாய். மணிமேகலையே! அம் மணிமேகலா தெய்வம், நீ சாதுசக்கர முனிவனுக்கு உணவளித்த சிறப்பு நோக் கியே உவவனத்தில் நின்பால் தோன்றி, மணிபல்லவத் திற் கொணர்ந்து சேர்த்து, நினக்குப் பேரருளைச் செய் தது. மணிமேகலையே வாழ்வாயாக!

---

## 22-வது சிறை செய்தது

### காட்சி 1

**இடம் :** சம்பாபதி கோயிலின் முன்புறம்.

**காலம் :** காலை.

**உரியோர் :** நகர மாந்தர், முனிவர், மணிமேகலை.

**நகர மாந்தருள் ஒருவர் :** மாதவர்களே! நாங்கள் ஞாயிறு எழுகாலை, சம்பாபதி கோயில், கந்திற் பாவைகளை வழிபட்டு வருங்கால், அந்தோ, அங்கே கண்ட துயரக் காட்சியினை என்னென்போம்! நமது அரச குமரன், உதய குமரன், வாளால் வெட்டுண்டு மாய்ந்து கிடக்கிறான்.

**முனிவருள் ஒருவர் :** ஆ! இது என்ன துயரச் செய்தி! மணிமேகலை! இந் நிகழ்ச்சி பற்றி நீ யாதேனும் அறிவதுண்டோ?

**மணிமேகலை :** ஆம், முனிவர்களே! அரசகுமரன் என்பால் காதலுற்றுத் தொடர்வான் ஆயினன். யான், காயசண்டிகையின் வடிவம் கொண்டிருந்தேன். காயசண்டிகையின் கணவன் ஒரு விஞ்சையன் என்னைத் தன் மனையாள் என்றும், உதய குமரனை என்னைக் காதலித்து ஒழுகுகின்றவன் என்றும் பிறழ உணர்ந்தனன். அரச குமரன், யான் அங்குளேன் என்று நள்ளிருளிற் போந்திட, அவ் விஞ்சையன் அவனை வாளால் மாய்த்தனன். இத் தீவினையை என்னென்பது!

முனிவர்: அந்தோ! பாவம்! நாம் அரசகுமரன் மெய்யினையும் மணிமேகலையையும் ஒடரித்து ஒளித்து வைப்போம். இந் நிகழ்ச்சியை நம் அரசனுக்கு அறிவிப்போம்.

### காட்சி 2

**உரியோர்**: முனிவர்; அரசர்.

**இடம்**: அரண்மனை.

**காலம்**: பகல்.

முனிவர் (ஒருவர்): அரசர்பெருமானே! முழுமதி போல நின் வெண் குடை உலகிற்குத் தண்ணருள் சுரந்தளிப்பதாக! நின் வேலும்செங்கோலும் அருள் நோக்கம் உடையனவாக! நின் ஆணைச்சக்கரம் தீதின்றி உருள்வதாக! நீ நின் ஆயுட்கால மெல்லாம் மகிழ்ச்சியுடன் இனிது வாழ்வாயாக!

மற்றொரு முனிவர்: அரசர்ஏறே! வாழ்வாயாக! இப்பதியின்கண் காமமாகிய கள்ளாட்டில் மூழ்கிப் பத்தினிப் பெண்டிர்பால் அணுகியும், தவமகளிர்பால் உள்ளம் செலுத்தியும், அத்தீவினை விளைவால் உயிர்துறந்தோர், இன்றுமட்டும் அல்லர், பண்டும் பலராவர்.

மற்றொருவர்: ஆம், அரசர்பெருமானே! பண்டு பரசுராமன் வேந்தர் குலத்தினைச் சீறி அழித்துவந்த காலத்தே, இந்நகரத்தே காந்தன் எனும் மன்னவன் ஆண்டிருந்தான். நம் சம்பாபதி தெய்வம், பரசுராமனால் அம்மன்னனுக்கு எய்தலாகும் துன்பினை அகற்ற எண்ணி, அவனை வேண்டும்காலம் அரசு துறந்து வெளிப்பட்டிருக்க ஏவிற்று. அவ்வரசன், காவற் கணிகையால் தனக்குத் தோன்றிய புதல்வனும், பகைவர்க்கு எஞ்சாத வலியுடையோனும் ஆகிய ககந்தனை

அழைத்து அருகிருத்திக், சுகந்த! நீ அரசகுலத்தினன் அன்மையின், நின்பால் பரசுராமன் அணுகான். நீ இந்நகரை ஆட்சி புரிந்திருப்பாய்! நீ ஆட்சி புரியவிருத் தலின் இந்நகர் காகந்தி என்னும் பெயருறும். யான் அகத்திய முனிவர்பாற் சென்று தங்கி, உரிய காலத்தில் அவர் அருண்மொழி பெற்று வருவேன் என்று கூறிப் போயினன்.

அரசன்: அம்முனிவர் கூறிய தீச்செயல் ஏதோ இவன் ஆட்சியில் நடந்துளது போலும்.

மற்றொருவர்: ஆம், வேந்தர் வேந்தே! அவன் இனிது ஆட்சி செய்துவருங்கால், அவன் இளைய மகன் ஒரு வன், இந்நகரத்தே, காவிரியில் நீராடி வந்த பார்ப்பனப் பெண் மருதி என்பாளை, யாருமில்லாத ஒரு இடத்து, அவள் கற்புறுதி இல்லாதவள் என நினைந்து, தன் காதற் குறிப்புத் தோன்ற, நீ இங்கே வா என்றழைத் தனன்.

அரசன்: அந்தோ! பாவம்! பின்னர் நிகழ்ந்த நிகழ்ச்சி?

முனிவர்: அரசே! அப் பெண் எண்ணுகின்றாள்,

> மண்திணி ஞாலத்து மழைவளம் தரூஉம்
> பெண்டிர் ஆயின் பிறர்நெஞ்சு புகாஅர்
> புக்கேன் பிறன்உளம்; புரிநூல் மார்பன்
> முத்தீப் பேணும் முறைஎனக் கில்லை.

இங்ஙனம் எண்ணி மாதுயர் உற்றாள்: மனையகம் புகு வில்லை. பூதசதுக்கத்திற்குப் போயினள்,

அரசன்: முனிவரே! அங்கு நிகழ்ந்தது என்னையோ?

முனிவர் : அரசே ! அவள் அங்கே சென்று கூறியது : ஏ பூதமே! கொண்டோற் பிழைத்த குற்றம்தான் இலேன். ஆயினும் என்னைக் கண்டோன் நெஞ்சில் நான் எளிதில் புகுந்து கொள்வேன் ஆயினேன். கற்புடைப் பெண்டிர் அங்ஙனம் பிறர் காதலுற்று அழைப்பதற்கு உரியர் ஆவரோ! ஏதோ என்பாற் குற்றம் உளது போலும். அதனுலே இங்ஙனம் நிகழ்ந்தது போலும். ஏ தெய்வமே! நீ என் போன்று அல்லலை அடைந்தாரைப் புடைத்துண்பாய் என்பரே! அது பொய்யுரையாமோ ! என்றெல்லாம் கூறிப் புலம்பினள்.

அரசன் : முனிவர்காள் ! பின்னர் நிகழ்ந்தது ?

ஒருவர் : பின்னர், அப் பூதம் தோன்றியது. நங்காய் ! தெய்வக் கற்புடையார் செயலினை அறிவாயாக. அவர்கட்குத் தங்கள் கொழுநரே கண்கண்ட தெய்வம். பிற தெய்வங்களை அவர்கள் வணங்கார். அத்தகையார் மழையினைப் பெய் எனின், அது பெய்யும். இவ்வுண்மை நம் தெய்வப்புலவர் திருவள்ளுவர் திருவாய்மொழி. நீ அத்தகைய சிறப்பினை எய்திலை. பொய்ம்மொழிகளையும் நகை மொழிகளையும் கேட்டு உவப்பாய். விழாக் காண்டலை விரும்பிச் செல்வாய். வேறு கடவுளை வணங்குவாய் எனவே, நீ தெய்வக் கற்பினை உடையை அல்லை. ஆகவே, இக்குறை நின்பால் எய்தியது. ஆயினும், நீ கற்பினை இழந்து தீ நெறிப்பட்டாயல்லை. எனவே என் தண்டம் நினக்கு எய்துவதன்றாயிற்று. நினக்கு இக் குறை மேவுதற்கு அவ்வரசகுமரனும் ஓர் காரணன் ஆகலின், அவனுக்கு உரிய தண்டம் அரசனால் ஏழு நாள் எல்லைக்குள் நிகழும். அங்ஙனம் நிகழ்ந்திலதேல், பின்னர், யான் ஆவன செய்வேன் என்றது. அரசே !

அப்பூதம் கூறியவாறே அரசன் தன் மகனது குற்றத் திணைக் கேட்டுணர்ந்து, அவனை வாளால் மாய்த்திட்ட னன்.

மற்றொருவர்: மண்ணாள் வேந்தர் ஏறே! இன்னும் ஒன்று கேட்பாயாக. பண்டு இந்நகரத்து வணிகருள் தருமதத் தன் என்பான் ஒருவன். அவன் மாமன் மகள் விசாகை என்பாள். இவர்கள் மணம் செய்து கோடற்குரிய சிறப்புக்களெல்லாம் ஒப்ப உடையவர்கள். இவர்கள் ஓரிடத் திருந்தமையின், இவர்கட்குக் காந்தருவ ஒழுக் கம் நிகழ்ந்துளது என ஊரார் அலர் பரப்பிவிட்டனர்.

அரசன்: பின்னர் அவர்கட்கு மணம் நிகழவில்லையோ?

ஒருவர்: அரசே! அதுதான் இல்லை. விசாகை ஊரார் அலர் கேட்டு உள்ளம் உடைந்தனள். உலக அறவிக் குச் சென்று அங்கு அடுத்துள்ள கந்திற் பாவையை வணங்கி நின்று, தெய்வப் பாவையே! இந்த நகரத்தார் கூறும் பெரும் பழியை ஒழிப்பாய் என்று வேண்டி னள். அப்பாவை, அந்நங்கையின் சிறப்பினைத் தன் தெய்வ வாக்கால் எடுத்துக் கூற, ஊரலர் பொய்ம்மை யாகி ஒழிந்தது.

அரசன்: அதன் பின்பு நிகழ்ந்தது என்னை?

ஒருவர்: அரசே! அவ் விசாகைக்கு மீண்டும் மன அமைதி எய்தவில்லை. ஆ! என்னே, எனக்கு எய்திய தீவினை! தெய்வம் இங்கு மெய்ம்மை காட்டித் தெளிவிக்கா விடின், இந்நகரத்தார் மனவிருள் நீங்காதன்றோ! இத் தகையார் காண நான் இப்பிறப்பில் என் மைத்துனனை மணஞ்செய்து கொள்ளேன். இனி மறுபிறப்பிலே, இவ னையே மணஞ் செய்துகொள்வேன் என்னும் மன உறுதி கொண்டனள். அதனைத் தன் அன்னைக்கு

உரைத்துத், தான் கன்னிமாடம் அடைந்திட்டாள். அவளை மணக்கவிருந்த தருமதத்தனும், அவன் தாய் தந்தையரும், கந்திற் பாவையை அடைந்து எங்கள் பழியினைப் போக்கியருளினாய் என்று கூறி வணங்கி, இந் நகரினை விடுத்துத் தென்மதுரையை அடைந்திட்டனர். அரசே! தருமதத்தனும், விசாகையை யன்றி வேறு மகளிரை விரும்பேன்; இப்பிறப்பு இவ்வாறே ஒழிவ தாக என்று விரதம் பூண்டு, வாணிகத்தாற் பெரும் பொருள் ஈட்டி, வேந்தனால் எட்டிப் பட்டத்திற் குரிய பொற்பூவினைப் பெற்று, அறுபதாம் ஆண்டினை யடைந் தனன். அவனிடம் ஓர் அந்தணாளன் சென்று, "பெரு நிதிச் செல்வனே! பத்தினி யில்லோர் பல அறங்களைச் செய்யினும் வானவர் உலகம் எய்தா ரன்றோ! எனவே, நீ இங்கு நீட்டித்திராது இத் தென்மதுரையை விட்டு நின் பதியை அடைவாயாக" என்றனன். அங்ஙனம் கூறிய அந்தணாளன் உரையினைக் கேட்டு வந்திருக்கும் தருமதத்தன் கருத்தினையுணர்ந்த விசாகை, அவன் பாற் சென்று, ஐய தருமதத்த! உன் உள்ளக் கருத் தினை உணர்வேன். இப்போது எய்தியுள நமது வடிவ வேறுபாட்டால், நாம் ஒருவரை யொருவர் எளிதில் அறிந்துகொள்ள இயலவில்லையே! நம்மை மருட்டிய அழகு இப்பொழுது யாங்குச் சென்றது, கூறாய்? நினக்கோ அறுபது ஆண்டாயிற்றே. என் ஐம்பாற் கூந்தல் நரை விரவுதல் உற்றதே. நமது இளமையும் வேட்கையும் எங்கு ஒளித்தனவோ! இப்பிறப்பில் நான் நின்னடி யடைவேன்; மறுபிறப்பில் நின் அடித்தொழில் கேட்பேன்.

"இளமையும் நில்லா யாக்கையும் நில்லா
வள்ளிய வான்பெருஞ் செல்வமும் நில்லா

புத்தேள் உலகம் புதல்வரும் தாரார்
மிக்க அறமே விழுத்துணை யாவது"

என்றாள். எனவே, தருமதத்தன் தனதுபெரும் பொருளை அவட்குக் காட்டி, அவளுடன் கூடிப் பற்பல நல்லறங்கள் செய்தனன்.

ஒருவர்: அரசே! இவர்கள் வரலாறு இங்ஙனமாக, அவ் விசாகை, முதன்முதல் ஊரார் பழியினின்றும் நீங்கி வீதிவழியே வருங்காலை, அக்ககந்தனுடைய மூத்த மகன் விசாகையின்மீது காதலுற்று அவள் கூந்தல் மீதுள்ள பூமாலையைஎடுத்துமீண்டும்அவட்குச் சூட்ட விரும்பின வன், அவள் தலையில் கையை வைத்த அளவில், அவள் தெய்வக் கற்பின் செயலால், அவன் கை, விசாகை கூந் தலினின்றும் எடுக்க இயலாது போயிற்று. இச்செய்தி அவன் தந்தை ககந்தன் செவிக்கு எட்டிற்று. உடனே, அவன் மிக்க சினம் கொண்டு, முன்போலவே, தன் மகன் என்று பாராது அவனையும வாளால் வெட்டி னன். எம் மன்னர் பெருமானே! நீ ஊழிதோறூழி உலகங் காத்து வாழ்வாயாக!

அரசன்: முனிவர்களே! காமக்களியால் மடிந்தோர் இன்றேயல்ல;பண்டும் பலர்என்று தொடங்கிய உங்கள் உரையால், இன்றும் அத்தகையதோர் வினைநிகழ்ந் துளது போலும் என உணர்கின்றேன்.

ஒருவர்: அரசாறே, இவ்வுலகில் விலக்கப்பட்ட குற்றங் கள்: கள், பொய், களவு, கொலை, காமம்என ஐந்து உள அன்றோ? அவற்றுட் காமத்தை நீக்கினோரே, ஏனைய குற்றங்களையும் நீக்கினோராவர். நீக்காதோர் மற்றைய குற்றங்களையும் ஏற்றுக் கொடிய நரகத்திற்

காளாவர். அரசே! நம் நகரில் கணிகை மாதர் சித்திராபதியின் மகள், தன் காதலன் கோவலனுக்குற்ற கடுந் துயரினைக் கேட்டுப் பொருளாகி, அறவோர் சாலையை அடைந்தனள். அவள் மகள் மணிமேகலை, இளமைச் செவ்வி இனிதுற் றிருந்தும், தவநெறி பூண்டு, இல்லங் களில் பிச்சையேற்று, உலக அறவியை அடைந்து, பல் லுயிர்க்கும் பசிப்பிணி அகற்றி வருவாளாயினள். அரசே! நம் அரசகுமரன், உதயகுமரன், அவள்மீது காதல்கொண்டு, அவளை எவ்விடத்தும் நிழல்போல நீங்காது திரிந்து, அவள் இருக்கும் அம்பலத்தை யடைய, அதுகண்ட மணிமேகலை காயசண்டிகை யெனும் விஞ்சை மாது போலாம் வேற்றுரு எய்தினள். காயசண்டிகையின் கணவன் அங்கு வந்தவன், நம் அரசகுமரனை, தன் மனைவியின் கள்ளக் காதலன் என்று பிழையாகஉணர்ந்துவெட்டிவீழ்த்திவிட்டான். அந்தோ! எங்கள் நாட்டின் தீவினை இருந்தவாறு என்னே! இத் தீவினையின் செயல் என்னே!

மதிமருள் வெண்குடை மன்ன நின்மகன்
உதய குமரன் ஒழியா னாக
ஆங்கவள் தன்னை அம்பலத் தேற்றி
ஓங்கிருள் யாமத்து இவனை ஆங்குய்த்துக்
காயசண்டிகைதன் கணவ னாகிய
வாய்வாள் விஞ்சையன் தன்னையும் கூவுய்
விஞ்சை மகள்பால் இவன்வந் தனனென
வஞ்ச விஞ்சையன் மனத்தையும் கலக்கி
ஆங்கவன் தன்கை வாளால் அம்பலத்து
ஈங்கிவன் தன்னை எறிந்தது அத்தீவினை!

அரசன்: ஏனாதி! நம் அரசகுமரன் தவற்றினை உணர்ந்து, அவனைத் தண்டம் செய்தற்கு உரியேன் நான். அங்ஙு

னம் செய்துளோயின்; எனது புகழ் இம்முனிவர் கூறிய சுகந்தன் புகழ்போல உலகெலாம் ஓங்கிப் பரவும். விஞ்சையன் அத்தண்டத்தினைச் செய்தான், அவன் தகுதியில்லாதான் ஆயினன். அமைச்ச!

மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவல் இன்றெனின் இன்றும்

அன்றோ! கன்றையிழந்த பசுவின் துயரினை யறிந்து, மகனை முறைசெய்த மன்னவன் வழியில், ஒரு தீவினையாளன் தோன்றினன். அந்தோ! இவன் செயல் வேந்தர் தம்செவி உறுவதன் முன்னம், இவனை ஈமத்தேற்றி விடுவாய். கணிகையர் மகள் மணிமேகலையைக் காவல் செய்வாய்.

---

# 23-வது சிறை விடுத்தது

## காட்சி 1

**இடம்** : அரண்மனை.

**காலம்** : பகல்.

**உரியோர்** : அரசன், தேவி, ஏவலர், வாசந்தவை. மணிமேகலை.

வாசந்தவை: பெருந் தேவி! அரசகுடியிற் பிறப்பார், பிறர் நலியாமல் தங்குடிகளைப் பாதுகாத்தும், மாற்றார் நாட்டினைத் தமதாக்கி நீதி செலுத்தியும் வருங்கால் செரு வென்றியுடன் வீரரது வென்றி யுலகிற் சேர்வரே யன்றித், தருப்பையிற் கிடத்தி வாளாற் பிளந்து வீர உலகம் சேர்வாயாக என்று கூறி விடுப்பா ரல்லர். இக் குடிப் பிறந்தார்க்கு மூத்துவிளிதல் என்பது நாணுத்தக

வுடையது. நின்மகன் மடிந்தது தன் மண் காத்தன்று. பிறர் மண் கொண்டன்று. எனவே, உலகம் காக்கும் நின் கணவர் முன் நீ நின் மகன் பொருட்டுத் துன்பங் கொண்டு, அவர் உள்ளத்தை வருத்தாதே. தேவி! நான் போய்வருகின்றேன்.

தேவி : என்னே! வாசந்தையின் வாய்மொழிகள்! அவை எத்துணைச் சிறந்தன வாயினும் ஆக! மகனை யிழந்து வருந்தும் என் மனக் கொதிப்பை மாற்றுவன அல்ல. இம் மணிமேகலையை வஞ்சம் செய்து பழிக்குப் பழி வாங்குவேன். (அரசன் வருதல்)

அரசர் பெருமானே! வருக. அமர்க. அந்தோ! நம்மகன் விதிவாய்ப்பட்டு ஒழிந்தனன்! என் செய்வேம்! தவ வடிவத்தாளிடத்தே தகாத காதல் கொண்டமையின் இச் செயல் நிகழ்ந்தது. இளமைப் பருவத்தின் காதல் எண்ணங்களை அறவே ஒழித்து, நல்லறிவு தலைப்பட்ட மணிமேகலைக்குச் சிறைவாழ்க்கை தக்கதன்றன்றோ?

அரசன் : நன்று கூறினை! அரசர்கட்கு நல்லொழுக்க முடைய மக்களே மக்களாவர். தீயொழுக்கம் உடையார் மக்களாயினும் அவர்கள் மறந்திடற் குரியார். எனவே, நாம் நம்மகனை இனி நினைந்து வருந்துதற்கில்லேம். இந் நங்கையை நின் கருத்துப்படி சிறையினின்றும் விடுப்பாயாக.

தேவி : அங்ஙனமே, அந்நங்கையைச் சிறை விடுக்கின்றேன். அவள் இங்கு என்னோடு இருப்பினும் இருப்பாளாக. அன்றித் தனது பண்டைய நிலையில் ஓடேந்திப் பிச்சை யேற்று அருளறம் செய்யினும் செய்வாளாக. (தோழியை நோக்கி,) நீ சென்று மணிமேகலையை இங்கு, அழைத்து வருவாயாக. (தோழி மறைந்து மீளல்)

தோழி: தேவி! அங்ஙனமே இதோ அழைத்து வந்துள்ளேன்.

தேவி: மணிமேகலை! இம் மருந்தினை யுண்பாயாக. இது சிறைக்காவலால் உடலுளம் வருந்திய நினக்கு, அவ் வருத்தங்களைப் போக்கி நலம் தருவதாகும்.

மணிமேகலை: (தனக்குள்) ஓ! இத்தேவியின் வஞ்சனையை என்னென்பது. இது நன் மருந்தாம். பித்தேற்றும் மருந்து! பிறரால் யான் நலிவுறுதற்குக் கொண்ட சூழ்ச்சி! நன்று! இன்னும் இத்தேவியின் வஞ்சகச் செயல்களை யெல்லாம் கண்டறிவேன். (மருந்தினை உண்டல்)

தேவி: நல்லது! அதோ அந்த அந்தப்புர அறையிற் சென்று மன அமைதியுற் றிருப்பாயாக.

(மணிமேகலை சென்றிருத்தல்)

தேவி: இஃதென்ன! மருந்தொன்றும் செய்திலதே! (ஒரு கல்லா இளைஞனை யழைத்து) ஏவல! நீ அதோ அந்த அறைக்குச் சென்று அங்குள்ள பெண்பால் சற்று இருந்து வெளிவந்து, அவள்பால் அடாத பழியினையேற்றிப் பலர்க்கும் கூறி வருவாயாக. இதோ இப்பொற் காசுகளைக் கொள்வாயாக. (அவன் சென்று வரல்)

அவ்விளைஞன்: தேவி! நான் அங்குச் சென்று பார்த்தேன். அங்குப் பெண்மகள் யாரும் இல்லையே. ஓர் ஆடவன் தானே இருக்கின்றான்.

தேவி: நன்று. நீ சென்று வருவாயாக.

இளைஞன்: அந்தோ! இத்தேவியது தீய எண்ணத்தை யான் என்னென்பது! அந்தப்புரத்தில் ஆண் மக்கள் குறுகார்களே! யான் கண்ட ஆண்மகன் யாவனோ?

நரகம் அடைதற்குரிய கொடிய இவள் எண்ணத்தை யான் அறிந்திலேனே! யான் இந்நகரில் இருப்பதும் தீது. (வெளியே போய்விடல்)

தேவி. (தனியே) யான் என் செய்வது! யான் எண்ணிய எண்ணங்கள் இரண்டும் பயனின்றிக் கழிந்தன. என் மகனது இறப்பிற்கு ஏதுவாக நின்ற இவளை உயிருடன் வைத்திருப்பதா! இவள் பட்டினி நோன்பு கொண்டு உயிரை யிழக்கத் துணிந்தனள் என்பதை வெளியிற் பரப்பி இவளையோர் புழுக்கறையி லடைத்துப் பட்டினி யிட்டு இவளுயிரைப் போக்குவேன். (வெளியே போய் மீண்டும் வரல்)

தோழி! நாட்கள் சில கழிந்தனவே. பயன் ஒன்றும் காணேனே! அவளது இன்றை நிலை என்னையோ?

தோழி: அந் நங்கையின் தவநிலையில் இப்பட்டினியால் யாதொரு மாறுபாடு மில்லை. ஏதோ தெய்விக ஆற்றல் உடையவள் போலும்.

தேவி: நன்று! அந்நங்கையை அழைத்துவா. (மணிமேகலை வருதல்)

தேவி: அம்மா! மணிமேகலை! என் மகனுக்குற்ற துன்பினைப் பொறுதவளாய்ப், பேதையேன், அறிவிழந்து, தவமகளாகிய நினக்குச் சில தீங்குகள் செய்துவிட்டேன். திருமகளே! தவமகளே! என் தீமையைப் பொறுத்தருள்வாயாக!

மணிமேகலை: தேவியே! நின் மகன் முற்பிறப்பில் நீலபதி யென்பாள் மகன். இராகுலன் எனும் பெயரினன். அவனை அப்பிறப்பில் திட்டிவிடம் எனும் பாம்பு உயிருண்டது. அவன் மனைவியாகிய யான் உயிர்கொண்

டிருத்த லாற்றது, எனது உயிரைத்தீயிலிட்டுப் போக்கினேன். நீ அப்பொழுது அவனுக்காக அழுத துண்டோ? நல்லாய்! நீ இப்போது செய்வது பொருந்தாத காரியமாகும். நீ நின் மகனது உடற்கு அழுதனையோ! உடலின் பொருட்டாயின், நின் மகனுடலை ஏன் புறங்காட்டி லிட்டு ஒழித்தீர்? உயிர்க்கு அழுதனை யாயின், அது எங்குளது என யாவர் அறிவர்? அது செய்வினை வழியே சென்று பிறவி யுற்றிருக்குமன்றே? இங்கு ஒன்று கூறுவன். அவ்வுயிர்க்கு அன்பினை யாயின், தேவியே! நீ எல்லா உயிர்க்கும் இரங்குதல் வேண்டும். தேவியே! நின் மகனைக் காஞ்சனன் கொலை புரிந்த காரணம் உன் மகனது தீவினையே யாகும். முற்பிறப்பில் அவன் தன் மடைத்தொழிலாளனை உடல் துணித்ததால் ஆய வல்வினையானது, அப்பிறப்பில் அவனை நச்சுவிழி அரவத்தால் கொல்வித்தது. இப்பிறப்பிலும் காஞ்சனன் வாளால் வெட்டி வீழ்த்தியது. தேவியே! யான் மலர் கொய்ய உபவனம் சென்றது, அங்கு மணிமேகலா தெய்வம் என்னை எடுத்து மணிபல்லவத் தீவிலிட்டது, அங்கு முற்பிறப்பு வரலாறுகள் உணர்ந்து வந்தது, கந்திற்பாவை எனக்கு உரைத்தது முதலாகிய என் வாழ்க்கைப் புதுமைகளை விரிப்பின் அவை விரியும். தேவி! யான் மறுபிறப்பினை யுணர்ந்து மயங்கா அறிவு பெற்றுளே னாதலின் யான் இம்மருந்தினால் மயங்கேனாயினேன். நீ வரவிடுத்த கல்லாக் கிழ்மகன் கருத்தினை யுணர்ந்தேன். நான் வேண்டு வடிவம் வேண்டுங்காற் கொள்வேனாதலின், ஆண் வடிவம் கொண்டிருந்தேன். அவன் அஞ்சி ஏகிவிட்டான். பசிப்பிணி யொழிக்கும் மந்திரம் பெற்றிருந்தே னாதலின், பட்டினியிற் கிடத்திய உன் வஞ்சகத்தினின்றும்

உயிர் தப்பினேன். தேவியே, முற்பிறப்பில் என் கணவனாயிருந்தோனை, இப்பிறப்பிற் பெற்ற தாய், நீயாகலின், உன் தீவினைகளைத் தீர்க்கும்பொருட்டு, யான் வேற்றுருக் கொள்ளவோ, வான்வழியேசென்று விடவோ எண்ணினே னல்லேன்.

தேவி: மணிமேகலையே! நான் அறியாது செய்த தீமைகளை யெல்லாம் பொறுத்தருள்க. உன் அறவுரைகள் கேட்குந்தோறும்மிக்கபயன் தருவனவாகின்றன. இன்னும் பல கூறி, என்னை நன்னெறிப்படுத்துவாயாக.

மணிமேகலை: அம்மா! ஐம்பெருங் குற்றங்களின் இயல்பினை, நாடாளும் அரசன் தேவியாகிய நீ உணர்ந்து கோடல் மிக இன்றியமையாததாகும். தேவி! ஒரு காலத்து ஒரு நாட்டின் அரசு நிலைகேடு உற்றதாக, அந்நாட்டு மக்களும் நிலை தவறுவா ராயினர். காதலனாற் கைவிடப்பெற்ற ஒரு பெண், தன் ஆண்குழவியைப் பிரிந்து, தகா நெறியில் ஒழுகிக் காலம் கடத்தி வருங் காலத்து, அவள் மகனே, பிற்காலத்துத், தன் தாயென அறியாது கூடி ஒழுகிப்பின் உண்மையுணர்ந்து உடன் உயிர் நீத்தனன் எனில், காமத்தின் தீமையினை என் என்பேன்! தீய காம நெறியினரே, அக்காமத்தினைக் கண்டு வெறுத்து உயிர் மாய்க்கும் இடங்கள். இத்தகையன எத்துணையோ பல. அம்மா! இனிக் கொலைக் குற்றத்தின் இயல்பினைக் காண்போம். ஒரு வேடன் நீர் வேட்டு அலைந்த ஒரு சூல் முதிர்ந்த மானின் வயிற்றினை அம்பினாற் கிழித்து மாய்த்தான். அதன் வயிற்றினின்று விழுந்த மறியின் துயர்நிலையினைக் கண்டான். அதனைக் காணலாற்றாது தானும் தன் உயிரினை நீத்தனன். இங்ஙனம், கொலைஞரே கொலைத் தீமை கண்டு

வெறுத்தலும் காண்க. இனி, அம்மா! கள்ளினை விரும்பி யுண்டோர் அதன் மயக்கத்தால் தமது அரிய உயிரை யும் இழப்பது நாம் ஆங்காங்குக் காண்பதாகும். இனிப் பொய், களவு இவற்றான் எய்தும் துன்பங்கட்கு எல்லை யுண்டோ?

தேவி: மணிமேகலை! நீ கூறும் அறவுரைகள், என் உள் ளத்து நன்கு பதிகின்றன அம்மா! இத்தகைய தீய ஒழுக்கங்களைக் களைந்து நல்ல ஒழுக்கங்களை மேற்கொள் வதற்கு நல்ல அறிவு வேண்டும். அது உயர்ந்த கல்வி யால் ஆம் அன்றோ?

மணிமேகலை: அம்மணி, கல்வி மக்கட்குக் கண் எனத் தகுவது. அக்கல்வியும் மேற்கூறிய குற்றங்களைக் கடிந் தாரிடத்தேதான் சிறந்து விளங்கும்: கல்வியுடையோர் எல்லாம், மெய்யுணர்வு உடையோர் ஆகார். அம்மணி! மெய்யுணர்வு உடையோர்க்குச் செற்றம் சிறிதும் இருத் தல் ஆகாது. வறுமையுற்ற மாக்கட்கு, அவர் வேண்டு வன உதவிப் புரப்போரே, வாழ்வோர் எனப்படுவர். பசிப்பிணி நீக்குவோரே, தாம் செல்லும் உலகம் அறிந்தோராவர். உயிர்களிடத்து அன்பு நீங்காதவரே, மெய்ப்பொருளை அறிந்தோராவர். அம்மணீ! நின் மகன் இறந்த துன்பினை, மேற்கூறிய சிறந்த ஒழுக்கங் களை மேற்கொண்டொழுகும் அருளறச் செயலால் மறந்து, உய்தி பெறுவாயாக.

தேவி: அம்மா! நல்லறம் பலவும் நின்பாற் கேட்டனன். உள்ளம் தெளிவுறுகின்றது. நீ என்னால் வணங்குதற் குரியை. (வணங்கல்)

மணிமேகலை : அம்மணி! யானே நின்னை வணங்குதல் வேண்டும். நீ என் நாயகனைப் பெற்ற தாய்; அரசனது பெருந்தேவி; ஆகலின், நீ என்னை வணங்கல் தக்கதன்று. யானே நின்னை வணங்குகின்றேன்.

---

## 24-வது ஆபுத்திர னுடைந்தது

### காட்சி 1

**இடம் :** அரண்மனை, தேவியின் அந்தப்புரம்.

**காலம் :** பகல்.

**உரியோர் :** அரசன் தேவி, சித்திராபதி, அறவண அடிகள், மாதவி, சுதமதி, மணிமேகலை.

சித்திராபதி : (தனியே) அந்தோ! எண்ணியது ஒன்று; முடிந்தது ஒன்றாயிற்றே. மணிமேகலையை உதயகுமரன் பாற் சேர்ப்பிக்கச் செய்த என் சூழ்ச்சி, உதயகுமரன் விஞ்சையன் வாளால் மடியவும், மணிமேகலை கொடிய சிறைப்படவும் ஏதுவாய் முடிந்ததே. நான் அரசன் தேவிபாற் சென்று அடிபணிந்து மணிமேகலையைச் சிறையினின்றும் விடுவிக்கும்படி வேண்டிக்கொள்வேன். (தேவியிடம் செல்லல்) பெருந்தேவி! நின் திருவடிக்கு வணக்கம். யான் பிறந்த கணிகையர் குலத்தின் பெருமையினைப் பெருந்தேவி தெரிந்திருக்கலாம். இந்திரனுக்கு, அரிய தவத்தினையுடைய மடவாரிடம் பிறந்த பதினொருவர், இந்திர உலகினின்று வந்த ஐவர், இந்திர குமாரன், அகத்தியன் என்போராற் சபிக்கப்பெற்ற

நூற்று நால்வர், உருப்பசி என்ற நூற்றிருபத் தொருவர் ஆகிய இவர்கள் எனது குலத்திலே பிறந்தவராவர். பெருந்தேவி! எங்கள் குலத்தில் யான் உறும் துன்பம், யாவரும் என்றும் அடைந்திலர். கோவலன் இறந்தனனென்று, மாதவி, அறவண அடிகள் பள்ளியில் தவக்கோலம் கொண்டிருக்கின்றாள். அவள் மகள் மணிமேகலையோ பிச்சைப் பாத்திரம் ஏந்தி இல்லங்கள் தோறும் இரந்து திரிகின்றாள். இவை நாடக மகளிரின் இயல்பாமோ? இம்மணிமேகலையால், நமது அரசகுமரனுக்கு நேர்ந்த முடிவினை என்னென்பது! இனி, இம்மணிமேகலையால் இந்நகர்க்கு எய்தும் துன்பமும் உண்டு. நமது கடற்கரையி லுள்ள புன்னைமரச் சோலையில், இளவேனிற்காலத்தே பண்டு, நெடுமுடிக் கிள்ளி எனும் மன்னன் தனிதது வீற்றிருக்க, அங்கே ஒரு நங்கை தனியே தோன்றினள். கண்ட அரசன் அவள் பேரழகில் ஈடுபட்டு, ஒரு திங்கள் அளவு அவளுடன் இன்புற்றிருந்தான். பின்னர் அந்நங்கை பிரிந்து எங்கோ சென்றுவிட்டனள். அப்பேரரசன் அவளை எங்கணும் தேடித் திரிகின்றகாலை, நிலத்தில், கடலில், வானில் இயங்க வல்ல ஒரு சாரணன் தோன்ற, அம்மன்னன் அவனை வணங்கித், தன் காதலியின் நிலையினை அறிதியோ? என்று வினவினன். அச் சாரணன் அரசனைப் பார்த்து, 'அந்நங்கையை யான் இதுபொழுது கண்டிலேனாயினும், முன்பு கண்டறிவேன். அவள் நாக நாட்டரசன் வளைவணனுக்கும் அவன் தேவி வாசமயிலைக்கும் பிறந்தவள். பீலிவளை யெனும் பெயரினள். அவள் பிறந்த காலத்தே அவள் வாழ்க்கை நிலை அறியும் கணி ஒருவன், அவள் சோழ மன்னன் ஒருவன் பாற் கூடிக் கருவுடன் வருவாள் என்று கூறினன். அங்

நனமே நின்னை அணைந்து கருவுடன் சென்றிருக்கும் அக்காரிகைக்குத் தோன்றிய புதல்வன் இங்கு வருவானே யல்லாது, அவள் இங்கு இனி வாராள். அது பற்றி நீ வருந்தாதே. மன்னர் பெருமானே! இந்திர விழாச் செய்யாத நாளில், நினது பெரிய நகரம் கடலுள் மூழ்கும். இந்நிகழ்ச்சி மணிமேகலா தெய்வத்தின் கூற்றுலாகுமாம். அங்ஙனம் நிகழுதற்கு இந்திரனது சாபமு முண்டு. அவ்வாறு ஒரு காலத்து நகரம் அழிதலும் அரசு கேடுறுதலும் மெய்யென உணர்ந்து, அவ்வாறெல்லாம் நிகழாமல் இந்திரவிழாவைத் தவறாது கொண்டாடி வருவாயாக' என்று கூறிப் போயினன். ஆகவே, அக்காலம் முதலாக இந்த மாநகரிலுள்ளார், என்று என்ன நிகழுமோ என்ற கலக்கம் அகலாது இருக்கின்றனர். மணிமேகலா தெய்வம் மணிமேகலையின்பாற் பேரருள் கொண்டதாகலின், அம்மணிமேகலை துன்புறுவாளாளுல் அத்தெய்வம் தோன்றுதலு முண்டு. தோன்றி என் செய்யுமோ என்று அஞ்சுகின்றேன். தேவி! மணிமேகலையை இங்கு வைத்துக் கொள்ளாது, என்பாற் சேர்த்திடுவாயாக.

இராசமாதேவி: சித்திராபதி! அறிவுடையோரால் தீயன என்று நீக்கப்பட்ட கட்குடி முதலாகிய ஐம்பெருங் குற்றத்தினையும் அடிப்படையாகக் கொண்டது நின் குல வாழ்க்கை. மணிமேகலையோ அக்குற்றங்களின் கொடுமைகளை நன்குணர்ந்து அவைகளை ஏற்காது அருளறம் பூண்ட தவநெறியினள். ஆகவே அவள் நின்னோடு போந்து நின் மனையிற் புகாள். என்னொடு இங்கே யிருப்பாள். அதோ, அறவண அடிகள் மாதவி முதலியோர் வருகின்றனர். அடிகளே வருக! அடி வணங்கினேன்.

அறவண அடிகள்: தேவி! மெய்யுணர்வு தோன்றுக!

தேவி : அவ்வாசனத்து அமர்க. என் நல்வினையானது மிக முதிர்ந்த அடிகளின் திருவடிகள் வருந்துமாறு இங்கே தங்களை அழைத்துவந்தது. அடிகளுக்கு எத்துணை முதுமையுறினும், சொல்வளம் என்றும் தளர்தலின்மை அறிவேன். தளர்ந்த இம்முதிய உடம்பு பன்னெடுநாள் வாழ்வதாக.

அடிகள் : தேவி! யான் செய்தவ யாக்கையிற் பொருந்தி னும், மாலையில் மறையும் கதிரோனைப் போன்றேன். உலகிற் பிறந்தோ ரனைவரும் மூப்பும் பிணியுமுற்று, இறப்பார் என்பது இயல்பே யன்றோ. தேவி! மக்கட் பிறப்பினை யடைந்தோர், பேதைமை முதலாக வினைப் பயன் ஈறாக வுள்ள இப்பன்னிரு நிதானங்களின் இயல்பு களையும் அறிந்து ஒழுகின், பெரும் பேற்றினை யடை வர். அறியாது ஒழுகின் துன்ப நரகினையே யடைவர். இவற்றுட் பேதைமை யென்பது, இவ்வியல்புகளை அறி யாமல், மெய்ம்மையாகத் தாம் கண்டதனையும் மறந்து, பொய்ம்மையாகத் தாம் கேட்டதனைத் தெளிதல்.

உலகில் தோன்றும் உயிர்கள் அளவிறந்தன. அவை மக்கள், தேவர், பிரமர், நரகர், விலங்கு, பேய் என்ற அறுவகையி லடங்கும். அவை தத்தமக்கு இயலும் நல் வினை தீவினைகளின் பயனால் இன்ப துன்பங்களை அடையும்.

இனித் தீவினை யென்பன யாவை எனின், அவை உடல், சொல், உளம் என்ற மூன்றன் வழியாகவும் வருவன வாகும். அவற்றுள் உடலின்கண் தோன்றுவன, கொலை, களவு, காமம் என்பன. சொல்லின்கட் டோன்றுவன, பொய், குறளை, கடுஞ்சொல், பயனில் சொல் என்பன. உளத்தின்கண் தோன்றுவன, வெஃ

கல், வெருளல், மயங்கல் என்பன. வினைப்பயனைத் தெரிந்த பெரியோர், இத்தீவினை வழியே செல்லாராகி, மேனிலைகளை யெய்துவர். தீயவழிகளிற் செல்வோரோ விலங்கு, பேய், நரக கதிகளிற் சென்று, உள்ளக் கவலையில் ஆழ்வர்.

பெருந்தேவியே! நல்வினை என்பதோ மேற்கூறிய பத்துக் குற்றங்களினின்றும் நீங்கி உயர்ந்த சீலத்தினை மேற்கொண்டு, சிறந்த தானம் செய்து நிற்றல். அத்தகைய நல்வினைகளை யுடையோர், தேவரும் மக்களும் பிரமருமாகிப் பேரின்பம் துய்த்திருப்பர். இராசமாதேவியே! மாதவி! சுதமதி! நீங்கள் யான் கூறிய குற்றமற்ற அருளறத்தினைக் கேட்டுணர்ந்து அதனைப் போற்றுவீராக.

மறுபிறப்புணர்ந்த மணிமேகலையே! நீ பிற சமய அறங்களை யெல்லாம் கேட்ட பின்னர், இத்தகைய அறநெறிகள் பலவற்றையும் அவற்றின் பகுதிகளையும் நின்பால் வந்து கூறுவேன். நான் சென்று வருகின்றேன்.

மணிமேகலை: அடிகாள்! நும் திருவடிகட்கு வணக்கம். பெருந்தேவியே! சித்திராபதியே! மாதவியே! சுதமதியே! எல்லோருக்கும் எனது வணக்கம். நமது அடிகளின் நன்மொழிகளை மறவாமல் அவ்வண்ணமே யொழுகி வாழ்வீர்களாக. யான், இந்நகரினிடத்தே உறைவேனாயின், மன்னவன் மகனுக்கு இவள் கூற்றாயினாள் என்று என்னை எல்லோரும் எள்ளி யுரைப்பர். ஆகவே, யான் முதற்கண், ஆபுத்திரன் நாடடைந்தும் பின்னர் மணிபல்லவத் தீவினை எய்தியும், பின்னர் வஞ்சிமா நகர் எய்தி மாபெரும் பத்தினி கண்ணகியின்

திருமுன்னர்ச் சேர்ந்தும், இடையறாது எனது நல்லறத் தினை இயற்றுவேன். எனக்கு எங்கு எவ்விடர் வருமோ என்று நீங்கள் வருந்தல் வேண்டா. பெரியீர் உங்கட்கு வணக்கம். நான் சென்று வருகின்றேன்.

## காட்சி 2

**இடம் :** நாகபுரத்துப் பூஞ்சோலை.

**காலம் :** பகல்.

**உரியோர்:** தருமசாவகமுனிவர், மணிமேகலை.

முனிவர் : இங்கு வந்து என்னை வணங்கும் தவச் செல்வி யாகிய நீ யார்? நீ எங்குள்ளாய்? எவ்வாறு இங்கு வந்தனை?

மணிமேகலை : முனிவரே! யான் மணிமேகலை யென்பவள் எனது ஊர் காவிரிப்பூம்பட்டினம். மணிமேகலா தெய் வம் முதலியவற்றின் பேரருட்கு இலக்காகியவள். நேற்று அந்திப் போழ்தில் அங்கு நின்றும் புறப்பட்டு அங்குள்ள உலக அறவி சம்பாபதி கோயில், கந்திற் பாவை நிலை என்பவைகளை வணங்கி வான் வழியே வருங் கால், இங்கு இறங்கிச் சற்று இளைப்பாறிச் செல்லலாம் என்று வந்தேன். எனது நல்வினைப் பயனால் அடிகளைக் கண்டேன்.

முனிவர் : அம்மணி வருக! வருக! இந்நகரம் நாகபுரம் என்பது. இந்நகரினை இதுபோது ஆள்வோன் பூமிசந்தி ரன் மகன் புண்ணிய ராசன் என்போன். இவன் பிறந்த நாள்தொட்டு இங்கு மழைவளம், மண்வளம், மரவளம் முதலியன சிறந்து ஓங்குகின்றன. உயிர்களெல்லாம் பிணிகளற்றுப் பெருவாழ்வுறுகின்றன. என் பெயர் தருமசாவகன் என்பது. நீ நின் எண்ணப்படி வேண்டுங் காலம் இங்கு இளைப்பாறலாம்,

# 25-வது ஆபுத்திரனோடு மணிபல்லவம் அடைந்தது

**இடம் :** நாகபுரத்துப் பூஞ்சோலை.

**காலம் :** பகல்.

**உரியோர் :** தருமசாவக முனிவர், மணிமேகலை, புண்ணிய ராசன், அவன் தேவி, கஞ்சுகன்.

அரசன் : முனிவரே! வணக்கம். எமது பிறவியில் இன்று ஒரு திருநாளாகும். மானிடம் பெற்றோர் உணரவேண்டிய அறம், பாவங்களின் இயல்புகளும், நித்த அநித்தப் பொருள்களின் வகைகளும், பிறப்பு முதலாய துக்கங்களும், செல்லுகின்ற உயிர் புகுமிடம், இன்னும் பேதைமை முதலிய பன்னிரண்டின் தோற்றம், அவைகளை அறுத்து அவற்றின் நீங்கி உய்யும் நிலைகள், புத்தர் பெருமானின் அமைதிகள் ஆகிய இவற்றையெல்லாம் கேட்டு மகிழ்ந்தோம். இத்தகைய அறவுரைகளாகிய பேற்றினை எங்களுடன் பெற்று மகிழ்வுற்றிருக்கும் இந்த அம்மணி யாரோ?

கஞ்சுகன் : அரசரேறே! வணக்கம். நாவலந்தீவில் இந்நங்கையை ஒப்பார் யாவருமில்லை. முன்பொருகால் கிள்ளி வளவனுடன் தொடர்பு கொள்ளுதலை வேண்டி, மரக்கலம் ஏறிச் சென்று, புகார் நகரத்தை நான் அடைந்தகாலை, அங்குள்ள அறவண அடிகள் இத் தவமாதின் வரலாறுகளையெல்லாம் இனிது எடுத்து மொழிந்தனர். யான் மீண்டு இங்கு வந்தகாலை, இத் தவமகளின் பெருமைகளையெல்லாம் தங்களிடம் கூறியது நினைவில் இருக்கலாம். அந்த அம்மையே இங்குள்ளவர். இவர் பெயர் மணிமேகலை யென்பது.

மணிமேகலை: அரசே! என் கையிலுள்ள இப் பாத்திரம் நின் கையில் இருந்ததேயாகும். இப்பால் நீ எய்தியுள்ள அரச திருவானது, அதனை நீ அறிய ஒட்டாதவாறு இடை நின்று மயக்குகின்றது. இது நினது முற்பிறப்பின் வரலாறு. இப்பிறப்பில் நீ பசுவின் வயிற்றிலுதித்த பெருமையினை யுடையாய். அதனையும் நீ அறிதற்கில்லை போலும். அரசே! நீ மணிபல்லவத்திற்கு வந்து, அங்குள்ள புத்த பீடிகையை வலங் கொண்டாலன்றிப், பாசங்களைக் கொண்டுவரும் பிறவியின் இயல்பினை அறியமாட்டாய். நீ அங்கே வருவாயாக. யான் அத் தீவிற்கு வான் வழியாகச் சென்று நின் வரவினை எதிர் பார்த்திருப்பேன்.

## காட்சி 2

**இடம்:** அரசவை.

**காலம்:** பகல்.

**உரியோர்:** புண்ணிய ராசன், அவன் தாய், மந்திரி முதலானோர்.

புண்ணிய ராசன்: தாயே! யான், நமது நகர்ப்புறப் பொழிலிலுள்ள தருமசாவக முனிவரைக் கண்டு வரச் சென்றிருந்தேன். அங்கே ஒரு தவக்கோல மாதினைக் கண்டேன். அம்மாதினை யார் என்று அறிந்துகொள்ள வினவ, நம் கஞ்சுகனால், அம்மாதின் வரலாறுகளை உணர்ந்தேன். அம்மாது, முற்பிறப்பு பிற்பிறப்புக்களைத் தெய்வங்களின் மூலம் இனி தறிந்திருக்கின்றாள். என் முற்பிறப்பு இப்பிறப்பு வரலாறுகளும் உணர்வள் போலும். என் பிறப்புக்களின் வரலாறுகளை யான் நேரில் அறிந்துகொள்ள, என்னை மணிபல்லவத் தீவிற்கு வர வேண்டியுள்ளாள். தாயே! எனது பிறப்

வந்து பீடிகையை வணங்கி வருவதற்கு எழுந்த வேட்கை தணித்தற்கு அரிதாகின்றது. மந்திரி! நான் அங்குச் சென்று ஒரு மதி எல்லையுள் மீண்டு வந்துறுவேன். அதுகாறும் நீ நமது அரசும், உரிமையும், சுற்றமும், காத்தருள்வாயாக.

## காட்சி 3

**இடம் :** மணிபல்லவம்.

**காலம் :** பகல்.

**உரியோர் :** மணிமேகலை, புண்ணிய ராசன்.

மணிமேகலை : (தனக்குள்) பிரமதரும முனிவனே! நின் திருவடிகளை நினைந்து வணங்குகின்றேன். நீ பண்டு அரசனோடு அவந்தி நகர் செல்லும் அவன் சுற்றங்கட்கு எடுத்துரைத்த அறவுரைகள் இன்றும் என்நினைவில் நன்குபதிந்துள்ளன. அவற்றை நன்கறிந்து அதன் படி ஒழுகுவோர் விலங்கு நரகர் பேய்களாகாது, தேவர் மக்கள் பிரமர் ஆக ஆகுதல் திண்ணம். அப்பொழுது நீ கூறியவற்றுள், உண்மைப் பொருள்களை யுணர்ந்த பேரறிவுடையோ னொருவன் உலகுய்ய ஒருநாள் தோன்றுவன், அறிவுரைகள் யாவர்க்கும் கூறுவன், அவற்றைக் கேட்டறிந்து ஒழுகினலன்றி இன்னாப் பிறவியினைக்கடத்தல் இயலாது, மாற்றருங் கூற்றுவன்வந்தே தீருவன், போற்றுமின்அறம் எனச் சாற்றியது என்றும் யாவரும்போற்றத்தக்கது. அடிகளே! அக்காலத்து நீ எங்கள் வருங்கால நிகழ்ச்சிகளைக் கூறியது கேட்டு மிக்க துயருற்றேன். அங்ஙனமே இராகுலனும் யானும் சின்னாளில் உயிர் துறப்பேமாயினேம். ஐயனே! அங்ஙனம், புத்தன் தோன்றுதற்கு முன், இப்பீடிகையை இந்திரனிட்ட காரணமும், இது என் பிறப்பினை உணர்த்-

திய காரணமும், யான் அறிந்திலேன் என்று யான் முன்பு வணங்கிக்கேட்டேன். அதற்கு நீ முற்ற உணர்ந்த முதல்வனை யல்லது, அப்பீடிகை வேறு யாரையும் தன் மீது தாங்காது. அங்ஙனம், அப்பீடிகை புத்தன் அடியிணையைத் தாங்கிய பின் அல்லது அதனை இந்திரன் வணங்கா னன்றோ. ஆகவே, அவ் விந்திரன் புத்தனுக் கென்று அமைத்துப், பிறந்தார் பிறவியை உணர்த்து மாறு இத்தரும பீடிகையை இங்கு வைத்துளனாகலின், இஃது அவன் கருத்தின்படி பிறவியின் நிலைகளை இருளறக் காட்டுகின்றது; என்று கூறினை. முனிவ! நினது அந்த அருள் மொழிகள், இன்று எனக்கு உரைத்தன போன்று தோன்றுகின்றன. (பீடிகையை வணங்கல்).

(அரசன் புண்ணியராசன் வருதல்)

மணிமேகலை: அரசே! வருக! முற்பிறப்பினை அறிவிக்கும் அறத் தவிசு இதுதான். இதனை வலம் செய்து வணங்குவாயாக. (வணங்குதல்)

அரசன்: ஓ! எம் முற்பிறப்பினை அறிந்தேன்! அறிந்தேன்! என் இடர்களை யெல்லாம் களைந்தேன். தென்றமிழ் மதுரைச் செழுங்கலைப் பாவாய்! சிந்தா தேவியே! மிக்க இருளில் அம்பலத்தை அடைந்து இரந்துண்ணும் நிலையினனாகிய என்பால் வந்தடைந்த வறியவர்கட்கு உணவளிக்க இயலாமல் வருந்தி நின்ற என்னைக் கூவி, அப்பா! வருந்தாதே; இவ்வோட்டினைக் கைக்கொள்; மழை யின்றி வறுமையுற்ற காலத்தும் இவ்வோடு வறுமையுறாது; எடுக்க எடுக்கச்சுரக்கும்; இஃது அமுதசுரபி யெனும் பெயரினது, என்று கூறிக் கொடுத்தருளிய தேவியே! என் வினைத் தொடர்புகளை அறுத்த விண்ணோர் பாவையே! மெய்ப் பொருள்களை யுணர்த்திய

மின்னொளித் தேவியே! நினது திருவடிகளை, தேவரும் பிரமரும் யாவரும் வணங்கும் திருவடிகளை, யான் எப் பிறவியினும் போற்றுவேன், என்றும் மறவேன்.

மணிமேகலை : அரசே! நாம் அதோ, அங்குள்ள கோமுகிப் பொய்கையின் கரையிற் சென்று, தீவதிலகையைக் கண்டு வணங்குவோம்.

### காட்சி 4.

**இடம் :** கோமுகிப் பொய்கை.

**காலம் :** பகல்.

**உரியோர் :** புண்ணியராசன், மணிமேகலை, தீவதிலகை.

தீவதிலகை : மணிமேகலை! ஆபுத்திர! வருக! வருக! (இருவரும் வணங்கல்) உங்கள் இருவரையும், இங்கு, ஒருங்கே காணுதலின் என் மனம் மிக்க மகிழ்ச்சியுறுகின்றது. முற்பிறவியில் ஆருயிர் மருந்தினை அங்கையிற் கொண்டு உயிர்களைப் போற்றிப் பெருந் துயர் தீர்த்த பெரியோய்! வருக! அக்காலத்து நின்னை இங்கு விட்டு மரக்கலம் ஏறிச் சென்ற செட்டிமார் ஒன்பதின்மர், அங்கு நீ உடன் வாராமை யுணர்ந்துகொண்டு மீண்டும் இங்கு வந்து, நின்னைக் காணாது, நீ உயிர் நீத்த இடத்துத் தாமும் உண்ணா நோன்புட னிருந்து தம் உயிரையும் விட்டனர். மற்றும் அவருடன் கூட வந்து அவரேபோல் உயிர்நீத்தவர் பலர். இவை அந்த ஒன்பதின்மராகிய செட்டிமார் எலும்புகள். அதோ தோன்றுவன உடன்வந்தோர் எலும்புகள். இதோ இப் புன்னை நிழற்கீழ் அலைகள் கொணர்ந்திட்ட மணலினுள் புதைந்து கிடக்கும் என்புடை யாக்கையினைக் காண்! இது அன்பர் பலர் தங்கள் உயிரையே அளிக்கும்

பெருந்தகை மேவிய நினது என்பினாலாகிய யாக்கை. (புன்னகையுடன் ஆபுத்திர!) நீ நின் உயிரைக்கொன்றாய்! உன்னைத் தேடி வந்த அன்பர் பலர் உயிரைக் கொன்றாய்! எனவே, நின்னைக் கொலைவன் என்னேனோ? கொலைவனன்றோ, கொற்றவன் ஆயினன்!

மணிமேகலை : தீவதிலகையே! நீ நம் ஆபுத்திரனைப் புகழ்ந்து கூறும் இவ் வஞ்சப்புகழ்ச்சி மிகவும் வாய்ப்புடையதே யாகும்.

தீவதிலகை : மணிமேகலை! நின் மாநகரமாகிய புகார் நகரம், இதுபோது கடல் வயிற்றிற் புக்கது. அதன் காரணம் கூறுகின்றேன்; கேட்பாயாக. நாகநாட்டரசன் புதல்வி புகார்நாட் டரசன்பால் மருவிக், கருவுற்றுத் தன்னொடு சென்ற பீலிவளை யென்பவள் தன் இளைய குழவியொடு இத்தீவினை வலஞ்செய்து, இங்குள்ள பீடிகையைப் போற்றி நின்றனள். அக்காலை அவள், கம்பளச் செட்டியென்பான் மரக்கலம் ஒன்று, இங்குநின்றும் புகார் போவதை யுணர்ந்து, அவன்பாற் சென்று இவன் உங்கள் புகார் நகர் வேந்தன் வடிவேற் கிள்ளியின் மகன். இவனை அவ் வரசன்பாற் சேர்த்திடுக எனக் கொடுத்தனள். அவ்வேந்த குமரனைத் தொழுது கொண்ட செட்டி, கலங்கொண்டு பெயர்ந்த காலத்து, ஒரு நள்ளிரவில், கரையருகில், அக்கலம் கவிழ்ந்தது. அரசகுமரனை யுள்ளிட்ட பலர் ஆழ்ந்து ஒழிந்தனர். தப்பிப் புகாரின் கரை சேர்ந்த சிலர், இச்செய்தியை மன்னனுக்கு உரைப்ப, அவன் தன் மகனை இழந்த துயரத்தால், நன்மணி யிழந்த நாகம்போன்று, கடலும் கரையும் கடற்கரைச் சோலைகளும் தேடித் திரிந்துகொண்டிருந்தான். அப்பொழுது, நகரில் இந்திரவிழா நிகழாது போயிற்று. மணிமேகலா தெய்வம் சினந்து, ‘அணி

நகரதனை, அலைகடல் கொள்க' எனச் சாபமிட்டனள். அதனால், அந்நகர் கடல்கோட் பட்டது. தன்னகரத்தை யிழந்த அரசன் நெடுமுடிக்கிள்ளி, தனித்து வேறிடம் சென்றனன். நின் தாய் மாதவியும், சுதமதியும் அறவண அடிகளுடன் வஞ்சிமா நகர் சென்றனர். இவ்வுண்மைகளை மணிமேகலா தெய்வத்தின்பால் யானறிந்தேன். மணிமேகலை! மற்றும் ஒன்று கேள். நீயும் அவ்வஞ்சிநகர் சென்று, அறவண அடிகளை அடைவாய். அங்கே நின் தந்தை கோவலன் மரபில் முன்னுள்ள ஒரு வணிகனை மணிமேகலா தெய்வம் கடலினின்றெடுத்துக் காப்பாற்றியதையும், அவ்வணிகன் சிறந்த புண்ணிய தானம் செய்ததையும் நீ அவ்வறவண அடிகள் பாற் கேட்டுணர்வாய்.

புண்ணியராசன்: மணிமேகலை! இதோ பார்; என் முற்பிறப்பின் வடிவத்தை. தசையின் பிணிப்புக்கள் யாவும் நீங்கின. என்புகள் ஒடுக்கமுற்றன. என்றாலும் கட்டவிழாது வெண்சுண்ணத்தால் மூடப்பட்டிருத்தலைக் காண்பாயாக. அந்தோ! எனது அரிய பண்டை உடற்றோற்றம் என்னைக் கலக்குகின்றதே!

மணிமேகலை: அரசே! யான் நின் நாட்டிற்கு வந்து நின்னை இங்கு அழைத்து வந்தது, நினது முற்பிறப்பை நீ அறியச் செய்து, எங்கெங்கும் உள்ள தீவுகளில் எல்லாம் நினது புகழை நிலைநிறுத்தற் கன்றோ! உலகினை யாளும் அரசர்தாமே, அருளறத்தினை மேற்கொண்டால், அதுவே உலகின் குற்றங்களை யெல்லாம் போக்கும் செயலாகுமன்றோ! அரசே! சிறந்த அறமாவது, உயிர்கட்கு இன்றியமையாத உண்டியும் உடையும் உறையுளுமே கொடுத்தல் ஆகுமன்றோ!

அரசன் : மணிமேகலை! நீ என் பிறப்பினை உணர்த்தி நல்லறிவு கொளுத்திச் சிறப்பித்தனை. நீ கூறிய அறங்களை நான் செய்வேன். ஆயினும், உன்னை விட்டுப் பிரிதற்கு இயலாதவனாகின்றேன்.

மணிமேகலை : அரசே! நீ வருந்தாதே. நினது பெருநாடு நின் பிரிவிற்கு இரங்கி நின்னை எதிர்நோக்கி யுள்ளது. கலமேறிச் செல்வாயாக. நானும் வஞ்சிமாநகர் சென்று பின்பு திருவருள் கூட்டும்போது நின்னைக் காண்பேன்.

---

## 26-வது வஞ்சிமாநகர் புக்கது.

### காட்சி 1

**இடம் :** வஞ்சிமாநகர், கண்ணகி கோயில்.

**காலம் :** பகல்.

**உரியோர் :** மணிமேகலை, கண்ணகிதேவி.

மணிமேகலை : தாயே! மாபெரும் தேவி! தந்தையே! கோவலப் பெருமானே! உங்கள் திருவடிகளை வணங்குகின்றேன். நாளும் உங்கள் திருவடிகளை வணங்கி, உங்கள் பொன்மொழிகளைக் கேட்டு மகிழும் பேற்றினை இழந்து வருந்தும் அடியேனுக்குக் காட்சி அருளீரோ! தாயே! நின் திருவடி வணக்கம். தாயே! என் தாதை விண்ணகம் புகச் செய்த செய்தியைக் கேட்ட நீ,

'காதலர் இறப்பிற் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகின் உயிர்த்தகத் தடங்காது
இன்னுயிர் ஈவர் ஈயா ராயின்
நன்னீர்ப் பொய்கையின் நளியெரி புகுவர்
நளியெரி புகாஅ ராயின் அன்பரோடு
உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்'

எனக் கூறும் அறக்கற்பு நெறியினை மேற்கொள்ளா மைக்குக் காரணம் அறிந்திலேன். மறக்கற்பினை மேற் கொண்டு மதுரையை எரித்ததன் காரணம் அருளுதல் வேண்டும்.

கண்-தேவி: என் அரிய மகளே! மணிமேகலை! நின் தந்தைக்கு அந்த நகரத்தில் எய்திய கொடுமையைப் பொறுக்க லாற்றேனாயினன். என் உள்ளத்தே, தானே எழுந்த தீ, மதுரையை எரிக்கத் தொடங்கிற்று. அக்கா லத்து மதுராபதி யென்னும் மா பெருந் தெய்வம் தோன்றியது. அஃது அந்நிகழ்ச்சி கண்டும் மாறுபாடு கொள்ளாது, என்பால் இரக்கமுற்று, எங்கள் துயர நிகழ்ச்சிக்கு உரிய தீவினையினை எடுத்து விளக்குவ தாயிற்று.

மணிமேகலை: தாயே! இத்தகைய தீய நிகழ்ச்சிகட்குக் காரணமாகிய முன்னைத் தீவினைதான் யாதோ!

கண்-தேவி: அம்மா! மணிமேகலை! முற்பிறப்பில், கலிங்க நாட்டினைச் சார்ந்த சிங்கபுரம், கபிலபுரம் என இரண்டு நகரங்களை ஆண்டு வந்த அரசர்கள், வசு, குமரன் என்னும் இருவர் இருந்தனர். அவர்கள் தாயத் தார் தங்களுக்குள் மிக்க பகைமை மேவலின், போர் செய்து வருவாராயினர். அவ்விருவர் நாட்டின் எல்லை யாகிய போர்நிகழும் இடம் ஆறு காவத தூரத்தும், மக் கள் யாவரும் போதல் வருதல் இல்லை. இதனை உணரா வேற்று நாட்டினன் ஒருவன், சங்கமன் என்பான் தன் மனைவி நீலி என்பாளுடன் பல்வகைப் பண்டங்களும் கலங்களும் விற்பதற்கு வந்தவன், சிங்கபுரத்திற் புகுந்து தன் பொருள்களைக் கடைவீதியில் விற்றுக்கொண்டிருந் தான். அம்மா, நின் தந்தையார், அங்குப், பரதன் என்

னும் பெயருடைய, அரசன் ஏவலராக இருந்தவர், தம் தீவினை வந்து சூழ, அவ் வணிகனை ஒற்றன் என ஐயுற்றுத் துணிந்து, தம் அரசனிடம் கூறிக் கொலை புரிவித்தனர். அவ்வணிகன் மனைவி நீலி என்பாள் அழுது அரற்றி, ஏங்கி, உயிர் விடுகின்றவள், ஒரு பெரிய மலையில் ஏறி நின்று, எமக்கு இத்தகைய துன்பம் செய்தோர், தாமும் இத்தகைய துன்பினை அடைவார்களாக என்று சபித்து, அம் மலையினின்று வீழ்ந்து இறந்தனள். அம்மா! மணிமேகலை! நின் தந்தையின் செயலால் எய்திய அச்சாபமே, இம்மையில் நமக்கு இத்தகைய துன்பங்களை விளைவித்தது. பண்டைத் தீவினை வாளாது ஒழியாதன்றோ? இவ் வரலாற்றினைத் தெய்வம் கூற உணர்ந்தும், என்சினத்தீ தணியாமையால், நகரம், அங்கெழுந்து முற்றிய தீவாய்ப் பட்டொழிந்தது. மணிமேகலை! நாங்கள் செய்த நல்வினையும் உண்டாகையால், நாங்கள் தேவர்களாகிச் சென்றோம். இந்த நல்வினையின் இறுதியில், கோபத்தால் ஆகிய தீவினைப் பயன் வந்து பற்றும். இங்ஙனம் நல்வினையால் நற்பயனும், தீவினையால் தீப்பயனும், பல பிறப்புக்களில் உற்றே உழல்வேம். இங்ஙனம் ஆகும் பிறவிக் கடலைக் கடந்து கரை ஏறும் காலம் ஒன்று உண்டு. மழைவளம் மிக்க மகத நன்னாட்டில் சிறந்து விளங்கும் கபில என்னும் நன்னகர் ஒன்று உளது. அங்கு என்றும் விளங்கும், புத்ததேவனாகிய ஞாயிறு தான முதலாய கரைக்காட்சி எய்தி, மகாபோதி மரத்தடியிற் றோன்றும். அந்த ஞாயிறு நால்வகை வாய்மைகளையும் தெரிந்து பன்னிருசார்பின் தோற்றங்களையும், அவைகளின் அழிவுகளையும் விளங்கக் கூறிக் குற்றங்களினின்றும் நீங்கி, இந்தச் சக்கரவாளம் முழுவதும் அறக்கதிரை

விரிக்கும். அக்காலத்தே, மணிமேகலை! யானும் நின் தந்தையும் அன்பு நிறைந்த மனத்துடன் அப் புத்த தேவரது அறங்களைக் கேட்டு, துறவுள்ளங் கொண்டு, அது காறும்தொடரும் பிறவிகளை ஒழித்து, வீடுபேறு உறுவோம். அம்மா! இந்த நற்பேறு எங்கட்கு எய்துவதன் காரணம், யாங்கள் முன்பு காவிரிப்பூம் பட்டினத்துப் பகவனது இந்திரவிகாரம் ஏழினையும் ஏத்திய புண்ணியமே யாகும். யாங்கள் அங்ஙனம், முத்தி யடையும் காலம் வரை, பல வகையான சித்திகளையும் செய்திருப்போம்.

மணிமேகலை: தாயே! பத்தினிக் கடவுளே! அடியேன் இனிச் செயற்பாலனவற்றையும் அருள் கூர்ந்து மொழிவாயாக.

கண்-தேவி: மணிமேகலை! வாழியர், நின் உள்ளத்து அருளற நெறி! அம்மா! நீ இவ்வஞ்சி நகருட் சென்று, ஆங்குள்ள சமயவாதிகளைத் தனித் தனியே கண்டு, அவரவர் கூறும் தத்தம் சமயக் கொள்கைகளை யெல்லாம் கேட்டு உணர்வாயாக. அவைகள் யாவும் உண்மைப் பொருள் ஆகாமை, நினக்கே நன்கு விளங்கும். பின்பு நம் பௌத்த சமயத்தைப்பற்றிய சிறப்பு உண்மைகளை உணர்ந்து ஒழுகி வருவாய். நீ இந்த இளமை உருக் கொண்டு செல்லின், இவள் இளையாள் என்று நினைத்து நினக்கு யாவரும் தத்தம் சமயக்கொள்கைகளை உரையார். ஆகவே ஏற்றதொரு வேற்றுருவம் கொண்டு செல்வாய்.

மணிமேகலை: தாயே! நின் திருவடிகளை வணங்குகின்றேன். நின் ஆணையின்படியே செய்வேன்.

(ஒரு மாதவன் வடிவம் மேற்கொண்டு செல்லல்.)

மணிமேகலை: ஓ இதோ! நம் சேரர் பெருமான் திரு நகர் செல்லுகின்றேன். ஆம், ஒரு மாதவன் போன்ற வடிவே தக்கது. அதனையே மேற்கொள்வேன். எங் கெங்கும் தேவர் கோயில்கள்! வேதிகைகள்! தவப்பள் ளிகள்! பொழில்கள்! பொய்கைகள்! நற்றவ முனிவர் கள், கற்றடங்கியவர்கள், நன்னெறி கண்ட தொன்னூற் புலவர்கள், என்னே அழகிய காட்சிகள்! ஓ, வஞ்சி மன் னன், வடநாடு சென்று பத்தினித் தெய்வத்திற்குக் கற் கொணர்ந்தவன் திரு நகரன்றோ இது! இவன், மலைக் கூட்டம் படர்வது போன்ற யானைப் படை முதலிய வற்றுடன் சென்றதும், கங்கை யாற்றினைக் கடந்ததும், கனகவிசயர் முதலியவர்களை வென்றதும், நம் பத்தினித் தெய்வத்தின் சிலை இமயத்திருந்து எடுத்ததை அவர் முடிமிசை ஏற்றித், தன் முடிமிசை வாகைமாலை சூடி வந்ததும், உலகெலாம் உணர்ந்து புகழ்வன வன்றோ! இத்தகைய சேர மன்னனது சிறந்த நகராகிய இவ் வஞ்சியினை, இன்று, யான் காண்பது, எனது நல்வினை முதிர்வே யாகும்.

## 27-வது சமயக் கணக்கர் தந்திறம் கேட்டது

காட்சி 2

**இடம் :** வஞ்சிப்புறநகர்.

**காலம் :** பகல்.

**உரியோர் :** மணிமேகலை.

மணிமேகலை : அம்மம்ம ! சமயவாதிகள் கொள்கைகள் பலவும் கேட்டனன். அளவைவாதி, சைவவாதி, பிரமவாதி, வைணவவாதி, வேதவாதி, ஆசீவகவாதி, நிகண்டவாதி, சாங்கியவாதி, வைசேடிகவாதி, பூதவாதி என்ற இப்பதின்மர் சமயக்கொள்கைகளும் விரிவாகக் கேட்டேன். ஆய்ந்து நோக்குங்கால், அவற்றுள் ஏதும் பொருத்தமானதாகத் தோன்றிலதே ! நம் அறவண அடிகள்பால், என் உள்ளத்தே பொருந்திநிற்கும் பௌத்தமத தருமத்தை முற்றும் கேட்டு, அந்நிலையில் ஒழுகுவேன். நன்று, நான் அகநகர் செல்வேன்.

---

## 28-வது கச்சிமாநகர் புக்கது

காட்சி

**இடம் :** வஞ்சிமாநகர் முனிவர் தவச்சாலை.

**காலம் :** பகல்.

**உரியோர் :** மணிமேகலை, மாசாத்துவான்.

மணிமேகலை : என் தந்தை கோவலனைப் பெற்ற மாதவத்தோய் ! நின் திருவடி வணங்குகின்றேன். இதோ என் கையிலுள்ள இப்பாத்திரம் அமுத சுரபியென்னும் பெயரினது. சிந்தாதேவியால் ஆபுத்திரனுக்கு அளிக்

கப்பட்டது. இதன்கட் பெய்த அன்னம் எடுக்க எடுக்கக் குறையாது மேன்மேலும் வளர்வது. ஆபுத்திரன் இது கொண்டு செய்த அறத்தினால், இப்பொழுது சாவக நாட்டினையாளும் புண்ணிய ராசனாக விளங்குகின்றான். அவ்வரசனை யான் அழைத்து வந்து மணிபல்லவத்திலுள்ள புத்தபீடிகையைக் காட்ட, அவன் தன் பிறப்பினையுணர்ந்தான். அங்கே, தீவதிலகை யெனும்தெய்வம் வெளிப்பட்டுப் பூம்புகாரினைக் கடல்கொண்டதையும், அறவண அடிகளும், மாதவியும், சுதமதியும், இந்த வஞ்சி வந்து சேர்ந்ததையும் கூறிற்று. பின்னர்ப், புண்ணிய ராசன் தன்னாடு எய்தினன். யான் அம் மணிபல்லவத்தினின்று நீங்கி, இவ்வஞ்சியின் புறநகர்க் கண்ணே வந்து, ஒரு மாதவன் வடிவுகொண்டு, சமயவாதிகள் திறங்களை யெல்லாம் கேட்டேன். அவைகளெல்லாம் உண்மைப் பொருள்களாக எனக்குத் தோன்றில. எனவே நமது புத்த தேவனது நல்லறம் கேட்டலை விரும்பி அறவண அடிகளைத் தேடி இங்கு வந்துற்றேன். பெரியீர்! நும்மைக் காணும் பேறுற்றேன்.

மாசாத்துவான்: என் அருமை மணிமேகலையே! நின்னை யான் கண்டது எனது நல்வினைப் பயனேயாம். அம்மா, நின் தாயும் தந்தையும் தமது பழவினையினால் மதுரையில் இறந்தது கேட்டு உள்ளம் உருகி, நமது புத்ததேவனது அன்புகொள் அறத்தின்வழி நிற்பேனாயினேன். மனைத் திற வாழ்க்கையை மாய மென்றுணர்ந்தேன். செல்வமும் யாக்கையும் தினைத்துணையும் நிலையா என்று உண்மை நிலையினை உணர்ந்தேன். உண்மைப் பொருளின் மாறுபடாத இந்த அறநெறியில் நின்று மாதவம் புரிவேனாயினேன். அம்மா! அங்ஙனம் நின்ற யான் இங்கு வந்ததன் காரணத்தைக் கூறுகின்றேன்.

முற்காலத்தில் இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் எனும் இந்நகரத்தரசன், ஓர் அமையம் இச் சோலையில் தன் தேவிமாரோடும் வந்திருந்தான். அப்பொழுது, தருமசாரணர் என்பார், இலங்கா தீவத்துச் சமனொளி யென்னும் மலையினை வலங்கொண்டு வான்வழியே வந்தவர், அவ்வரசன் இருக்கும் பொழிலில், அவன் நல் வினைப் பயனால் வந்திறங்கினர். அரசன் முனிவரை யேத்திப் பங்கயச் சேவடிகளை விளக்கி அறுசுவை யோடு கூடிய நால்வகைத்தாய அமுதினை அளித்து வணங்கி ஏத்தினன். அப்பொழுது முனிவர், அவ்வரச னுக்கும், அவனோடு வணங்கிய அவையோர்களுக்கும், பிறப்பின் துன்பமும் பிறவா இன்பமும், புத்ததேவன் அருளிய இன்ப உரைகளும் கூறியருளினர். மணிமே கலை, நின் தாதை கோவலனுக்கு ஒன்பது தலைமுறை முன்னோனாகிய கோவலன் என்பான் ஒருவன், அரச னுக்கு இனிய தோழனாவான். அவ்வவையி லிருந்தனன், அவன் அந்த அறமொழிகளைத்தானும் கேட்டு, தானும் தன்முன்னோர்களும் தருமநெறியிற் படைத்த பொருள் களையெல்லாம், ஏழுநாளெல்லையுள், இரவலர்களுக் களித்துவிட்டுத் தவநெறியிற் புகுந்தனன். அவன் அக் காலத்தே புத்ததேவனுக்கு இயற்றிய கோயிலைக் கண்டு தொழுது ஏத்தும் காதலினால், இங்கு வந்துற்றேன். அதுபோது,இங்குள்ள தவத்தோர் நம்காவிரிப்பூம்பட்டி னத்தைக் கடல் கொளுமென்று கூறினமையின், யான் இங்கேயே தங்கிவிட்டேன். நற்றவ நங்கை! நின் தாதை கோவலனும், அன்னை கண்ணகியும் தத்தம் வினைப்பயன் களை நுகர்ந்து, அப்பால் புத்ததேவன் அருளும் அற வுரைகளைக் கேட்டு, மீண்டும் வீடுறுவர் எனப் பெரி யோர் கூறக் கேட்டுளேன். யானும் அக்காலத்தே அற

மொழிகளைக் கேட்குவன். நங்காய்! உன் பிற்கால நிலைகளை நீ கந்திற்பாவையால் அறிந்தாய் என்று அறவண அடிகள் கூறக் கேட்டேன். அவ்வடிகளும் நின் தாயரும் இதுபோது காஞ்சிநகரம் எய்தியுள்ளார்கள். நீ அருளறம் கேட்டற்குரிய இடம் அதுவே யாகும் என்றெண்ணி அவர் அங்கு ஏகியுள்ளார். மாதே! இப்பொழுது காஞ்சிநகரம் மழைவளம் கரந்தமையின் மன்னுயிர்கள் பசியால் மடிகின்றன. அங்கிருந்த மாதவர்களுக்கு ஐயமிடுவோர் இன்மையின், அவர்கள் இந்நகர் வந்துற்றனர். ஆருயிர் மருந்தே! அக் காஞ்சிநகரிடத்துக் காரெனுமாறு தோன்றி, உணவளித்துக் காத்தல் நின் கடனாகும்.

மணிமேகலை: என் தாதையே! தவநிலைப் பெரியீர்! அங்ஙனமே யான் அங்குச் சென்று என்தொண்டுகளை ஆற்றுவேன்.

(காஞ்சி நகர் செல்லல்)

## காட்சி 2

**இடம்:** காஞ்சி அரண்மனை.

**காலம்:** பகல்.

**உரியோர்:** கஞ்சுகன், அரசன்.

கஞ்சுகன்: அரசர் பெருமானே! தெய்வத்தன்மை பொருந்திய ஒருபெண், வான்வழியே நமதுநகர்நோக்கி வந்தவள், நமது நகரினை வலங்கொண்டு, இளங்கிள்ளியால் இயற்றப்பெற்ற புத்தன்கோயிலை வணங்கி, அதன் தென்மேற்கிலுள்ள ஒரு சோலையிற் றங்கியுள்ளாள். அங்குச் சென்று நோக்குங்கால், அவள் கோவலன்

மகள் மணிமேகலை என்றும், சிறந்த தவநெறியில் நிற்ப பவள் என்றும், அவள் கையினுள்ளது அமுதசுரபி என்னும் தெய்வத்தன்மை பொருந்திய பாத்திரம் என்றும் உணர்ந்தேன்.

அரசன்: அமைச்சரீர்! நம் கந்திற்பாவை கட்டுரைத்தன எல்லாம் உண்மையாயின. நாம் சென்று அம் மணி மேகலையைக் காண்போம்.

## காட்சி 3

**இடம்:** *தருமதவனம்*

**காலம்:** *பகல்*

**உரியோர்:** *அரசன், மணிமேகலை, அறவண அடிகள், மாதவி, சுதமதி.*

அரசன்: தவச்செல்வியாகிய மணிமேகலையே! நின்பெரு மைகளை நம் கஞ்சுகன் உரைப்பக்கேட்டு மகிழ்ந்தேன். அம்மா! செங்கோல் கோடியோ, செய்தவம் பிழைத் தோ, கற்புக்குறைபட்டோ, இந்நாடெல்லாம் வளங் குன்றி வாடுகின்றன. அதனால் உள்ளம் கலங்கி யிருப் பேன் முன்னர், ஒரு தெய்வம் தோன்றி, "அரசே! நீ கவலாதே; உன் சிறந்த தவத்தால் ஒரு தவச் செல்வி தோன்றுவள். அவள் கையகத்துள்ள தெய்வத் தன்மை வாய்ந்த ஒரு பாத்திரத்தால் உன் நாடெல் லாம், பசிப்பிணி நீங்கித் துன்பம் அகலப்பெறும். மற் றும் அவளது அருளை நோக்கி, இந்திரன் ஏவுதலின், மழை வளம் பெருகும். அத் தவச்செல்வி, இங்கு வந் துற்ற பின்பு, இங்கு நிகழும் பேரறங்கள் பலவாகும். மேகம் மழைபெய்யாது ஒழியினும், நீர்வளம் நீங்காது அவள் தங்குவதற்காக மணிபல்லவத் தீவும், கோமுகி

என்னும் பொய்கையுமே இவையென்று சொல்லுமாறு, ஒரு அழகிய சோலையையும் பொய்கையையும் இயற்று வாயாக" என்றது. அங்ஙனமே யான் இயற்றிய இடங்கள் இவையாகும்.

மணிமேகலை: அரசே! நினது அரிய செயல்களாலாய சோலையையும் பொய்கையையும் கண்டு மகிழ்ந்தேன். அரசர் ஏறே! புத்த தேவனது பீடிகை, தீவ திலகை, மணிமேகலா தெய்வம் இவைகளை வழிபடுதற்குரிய கோயில்களும் இங்கே இயற்றுவாயாக. அவற்றிற்கு விழாவும் சிறப்பும் செய்விப்பாயாக. நான் இங்கிருந்து இவ்வமுத சுரபியைக் கொண்டு,

காணார் கேளார் கால்முட மானோர்
பேணா மாக்கள் பேசார் பிணித்தோர்
படிவ நோன்பியர் பசிநோய் உற்றோர்
மடிநல் கூர்ந்த மாக்கள் யாவரும்
பன்னூ றாயிரம் விலங்கின் தொகுதியும்
மன்னுயிர் அடங்கலும் வந்தொருங்கு ஈண்ட
என் அறத் தொண்டினை இனிது செய்திருப்பேன்.

(அறவண அடிகள் முதலோர் வருதல்)

அறவண அடிகள்: மணிமேகலை! வாழியர்! நீ இங்கு எம்மை நாடி வந்ததனையும், அருளறம் செய்திருத்தலையும், அதனால் உயிர்கள் பசிப்பிணி நீங்கி மகிழ்வுற்றதனையும், பின்னர் நின் நல்லறப் பயனால் எங்கும் மழை பெய்து, வளம் சுரந்ததனையும் கேட்டு யானும், இதோ நின் தாயர் மாதவி, சுதமதிகளும் கேட்டு மகிழ்ந்து நின்னைக் கண்டு மகிழ இங்கு வந்தோம்.

